# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, the 11th December 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, the Deputy Speaker (SRI B BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I. QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Textile Workers (Pension).*

*2221 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பஞ்சாலை தொழிலாளர்களுக்கு பென்ஷன் கொடுக்கும் திட்டத்தைக் கொண்டுவரும் விஷயமாக மத்திய சர்க்கார் நமது சர்க்காரை ஆலோசனை கேட்டது உண்மையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இல்லை, ஐயா.

SRI V. K. KOTHANDARAMAN : சார், மத்திய சர்க்கார் நமது சர்க்காரை ஆலோசனை கேட்கவில்லையென்று சொன்னாலும் கூட நமது ராஜ்ய தொழிலாளர்களின் எதிர்கால நலனை உத்தேசித்து பென்ஷன் முறையை அனுசரிப்பதாக உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போதே "டெக்ஸ்டைல் இண்டஸ்ரி"-யைப் பொறுத்த வரையில் "எம்ப்ளாய்மெண்டு பிராவிடெண்டு பண்டு" சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அந்தத் திட்டத்தின்கீழ் தொழிலாளர்கள் தங்கள் ஊதியம், பஞ்சப்படி இவற்றில் நூற்றுக்கு 6-1/4 ரூபாய் வீதம் "காண்ட்ரிப்யூட்" பண்ண வேண்டும். அதே அளவுக்கு முதலாளிகளும் பண்ணவேண்டும். அதோடு "கிராஜுடி" அனுகூலம் வேறு இருக்கிறது. மொத்தம் பதினைந்து மாத அடிப்படைச் சம்பளத்திற்கு மேற்போகாமல், ஒவ்வொரு வருஷத்திலும் அவர்களுடைய மாதச் சம்பளத்தில் பதினைந்து நாள் "பேசிக்" சம்பளம் கொடுக்கப்படுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : கிராஜுடி எல்லாத் தொழிலாளர்களுக்கும் கொடுக்கக்கூடிய நிலைமையில் சட்டம் இருக்கிறதா? அல்லது குறிப்பிட்ட ஒரு சில தொழிலாளர்களுக்கு மாத்திரம்தான் கொடுக்கப்படுகிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் இருக்கும் தகவல்படி டெக்ஸ்டைல் துறையில் இருக்கிற எல்லாத் தொழிலாளர்களுக்கும் இந்த அநுகூலம் இருக்கிறது.

DEPUTY SPEAKER : Question Nos. 2222, 2223, 2225 and 2237 are postponed and they will be taken up when the Hon. Minister concerned returns from tour.

[11th December 1961

*High School for Nariyambattu*

* 2224 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to open a High School in Nariyambattu, Gudiyatham taluk?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that within a radius of five miles, there is no high school although there are four higher elementary schools and if so, will the Government reconsider the matter and open a high school?

THE HON. SRI C. SUBRAMANIAM : Till now there has been no representation in regard to this matter from the District Board or from the public. So, if proper representation is made through the proper authorities, the matter may be considered during the next year.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that representation has been made to the Collector of the North Arcot district and he replied that unless contribution from the public was forthcoming, the high school would not be opened and if so, will the Government consider the opening of a high school without insisting on any contribution from the public?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, certain conditions have been laid down for the opening of high schools by the District Board which no longer exists but now the Collector will have to take action. So, those conditions will have to be satisfied.

SRI R. SRINIVASA IYER : The proposal of the Government is that the local board high schools will be taken over and maintained by the Government. How far has that proposal been implemented after the abolition of the District Board schools because after the abolition of those schools, high schools are not being managed directly by the Government?

DEPUTY SPEAKER : How does this question arise out of the main question?

THE HON. SRI C. SUBRAMANIAM : Also the hon. Member cannot base a supplementary on a supplementary question.

*Work Centre for semi-educated youths*

* 2226 *Q.*—SRI S. M. ANNAMALAI கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1961-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 28-ம் தேதியில் நட்சத்திரக் குறியிடாத கேள்வி எண் 425-க்கு அளித்த பதிலை யொட்டி வடாற்காடு மாவட்டத்தில் "Work centre for the semi-educated youth" ஆரம்பிக்க இடம் தேர்ந்தெடுத்தாகிவிட்டதா?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன?

11th December 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—(a) & (b) Yes, Sir. A site has since been selected at Walajapet to locate the Centre.

**SRI S. M. ANNAMALAI :** இதற்காக எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்ல முடியுமா? இங்கே எந்த எந்தத் தொழில்கள் ஆரம்பிக்கக்கூடும்?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** ரூ. 65 ஆயிரம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. தச்சு வேலை, கருமான் வேலை சொல்லிக் கொடுக்கப்படும்.

SRI A. A. RASHEED : May I know what the definition of 'semi-educated' is and is it the same thing as 'semi-doctors'?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not know about semi-doctors. But this means not fully educated; those who have read up to II Form or III Form or IV Form.

*Inspector-General of Prisons (tour).*

*** 2227 Q.—SRI V. K. KOTHANDARAMAN :** சனம் **உள்** துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இப்போதுள்ள **Inspector-General of Prisons** சிறை அதிகாரியாக நியமிக்கப்பட்டதிலிருந்து மாதாமாதம் ராஜ்யத்தில் எவ்வளவு நாள் பிரயாணம் செய்தார், ஜில்லாவாரியாக?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN :** வடாற்காடு ஜில்லாவில் உள்ள வேலூரில் ஜெயில் மிகப் பெரியது. அங்கேதான் பெண்களுக்காக தனியாக ஒரு ஜெயில் இருக்கிறது. மற்ற இடங்களுக்கு இருபது நாள், இருபத்தைந்து நாள் என்று விசிட் பண்ணியிருக்கும்போது அங்கே மட்டும் எட்டு நாள் மட்டும் விசிட் பண்ணியிருக்க காரணம் என்ன? அங்கே ஏராளமான தவறுகள் நடக்கின்றன, ஊழல்கள் நடக்கின்றன என்ற புகார்கள் வருகின்றனவே. ஆகவே இனிமேலாவது அடிக்கடி அங்கே போய் பார்வையிட ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** பெரிய ஜெயில்களை ஆண்டுக்கு இரண்டு முறை விசிட் பண்ணவேண்டுமென்ற விதி இருக்கிறது. ஆனால் ஒரு விசிட்டின்போது எவ்வளவு நாள் போட்டுக்கொள்வது என்பது அங்கே இருக்கிற வேலையைப் பொறுத்தது.

[a] Printed as Appendix I on page 483 infra.

[11th December 1961

*Midday Meals Scheme*

* 2228 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI N. K. PALANISAMI): Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Centre has given any grant to the State for the supply of mid-day meals to schools children; and

(*b*) if so, how **much?**

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) The amount received from the Union Government during the Second Plan period is estimated to be Rs. 94 lakhs.

SRI C. NATARAJAN: ஒவ்வொரு தாலுக்காவுக்கும் வட்டாரம் வட்டாரமாக எவ்வளவு பிரித்துக்கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒவ்வொரு வட்டாரத்திற்கும் என்று பிரித்துக்கொடுப்பது இல்லை. செலவாகிற தொகுதியில் நாம் செலவழிப்பதில் பாதி மத்திய சர்க்காரில் இருந்து மானியமாக வருகிறது. மொத்தம் நாம் 187 லட்சத்துக்குச் செலவழித்திருக்கிறோம் என்றால் 94 லட்சம் ரூபாய் மானியமாக வந்திருக்கிறது.

SRI A. A. RASHEED: May I know what amount is expected for the Third Five-Year Plan from the Central Government?

THE HON. SRI C. SUBRAMANIAM: A separate question may be put.

SRI T. T. DANIEL: May I know how these meals are cooked in the various schools in the State and whether the Government pay and allowance for any cook?

THE HON. SRI C. SUBRAMANIAM: The main question relates to the grant obtained from the Central Government. So, I do not think this supplementary question arises out of the main question.

* 2229 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI N. K. PALANISAMI): Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government will get any financial aid from foreign countries for implementing **Mid-day Meals Scheme** in this State; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

11th December 1961]

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுகிறபோது இந்தப் பகல் உணவு திட்டத்திற்காக வெளிநாட்டில் இருந்து உணவுப்பொருள்கள் அளிக்கப்படுகின்றன என்று சொன்னரே, அது எந்தவகையில் பெறப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைப்பற்றித்தான் குறிப்பிட்டேன். இந்த ஆண்டுக்கு சுமார் 3½ கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் வந்திருக்கின்றன. இங்கே கேட்டிருப்பது 'Many financial aid from foreign countries' அதனால் அது இல்லை யென்று சொன்னேன்.

*Rural Institute (Gandhigram)*

* 2230 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காந்தி கிராமத்திலுள்ள கிராம நிலையத்தில் (Rural Institute) படிக்கும் மாணவர்களுக்கு 1959, 1960-ல் உபகாரச் சம்பளமாக மாநில சர்க்கார் அனுமதித்த பணம் எவ்வளவு ?

(இ) அவை எப்போது மாணவர்களுக்குத் தரப்பட்டது ? இல்லையாயின் காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Students studying in the institute are eligible for fee concessions under Rule 92 of the Madras Educational Rules and fee concessions granted to children of political sufferers. The Government have not sanctioned any amount to the management of the institute in this respect so far.

*Finance Commission*

* 2231 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1961 அக்டோபர் மாதத்தில் சென்னையில் நிதிக் கமிஷனிடம் விவாதித்த விஷயங்கள் யாவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Finance Commission required each of the State Governments to furnish a self-contained memorandum expressing its views on the questions on which the Commission was appointed by the President in pursuance of Article 280 of the Indian Constitution to make general recommendations. The Commission also required from all the States a forecast, year by year, of the estimated revenue and expenditure for the years from 1961–62 to 1965–66. This Government submitted the memorandum and forecast accordingly. The discussions at Madras with the Finance Commission were generally based on the matters contained in the above two documents.

SRI S. M. ANNAMALAI : இந்த மெமோராண்டத்தின் நகல் ஒன்று சட்டமன்றத்தின் மேஜைமீது வைக்கப்படுமா ?

[11th December 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : அதனுடைய சுருக்கம் பத்திரிகைகளில் வந்திருந்தது. இதுபற்றி ஆலோசிக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : மக்கள் தொகை அடிப்படையில் வரி விகிதத்தை பிரித்துத் தரவேண்டுமென்ற இம்மாநில சர்க்கார் நிதிக் கமிஷனிடம் வற்புறுத்தினார்களா? அதேபோல் வரி இனங்கள் அத்தனையும் மத்திய சர்க்காரிடம் இருக்கிறது. ஆகவே அதில் சில இனங்களை மாநில சர்க்காருக்கு தர வேண்டுமென்று இந்த சர்க்கார் வற்புறுத்தினார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : மக்கள் தொகை அடிப்படையில் பிரித்துக் கொடுத்தால் நமக்கு அவ்வளவு சாதகமாக இருக்கும் என்று தோன்றவில்லை. முன்னர் மக்கள் தொகை அடிப்படையில் இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டிருந்தோம். எப்படிக் கொடுத்தாலும், நாம் ஆவரேஜாக இருக்கும் ஸ்டேட்டாக இருப்பதால் சாதக பாதகம் அதிகமாகயில்லை. பிற்போக்காக இருக்கக்கூடிய மாநிலங்களுக்கு மக்கள் தொகை அடிப்படையில் வருவதுதான் சாதகமாக இருக்கும். பொதுவாக மக்கள் தொகையின் பேரில் பிரித்துக் கொடுக்கலாம் என்று சிபார்சு செய்திருக்கிறோம். இன்னும் சில இனங்களை மாநில சர்க்காருக்குப் பிரித்துக் கொடுப்பதற்கு வரி இனங்களைப் பிரித்துக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று பைனான்ஸ் கமிஷனிடம் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

SRI K. ANBAZHAGAN : சோஷியல் வெல்பேர் ஸ்கீம்ஸ்க்கு பொதுவாக பொது மக்களின் நலத்திற்காக நிறைவேற்றப்படுகிற திட்டங்களுக்கு, சுகாதார வசதி போன்றவைகளுக்கு ஆகிற செலவில் எந்தளவு பங்கு நமக்கு அளிக்கப்படும் அல்லது முழுச் செலவையும் நாமே ஏற்றுக் கொள்ளவேண்டுமா, என்று நிதிக் குழுவிடம் கேட்கப் பட்டிருக்கிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : நிதிக் குழு தனித்தனியாக ஒவ்வொரு திட்டத்தையும் எடுத்து பரிசீலனை செய்வதில்லை. பொதுவாக எவ்வளவு செலவாகிறது, அச்செலவுகளுக்கு எந்தளவு வரவினங்கள் இருக்கின்றன, மீதி எந்தளவு மத்திய வரியிலிருந்து மாநிலத்திற்கு ஒதுக்கவேண்டுமென்று பொதுவாக அவர்கள் கவனிப்பார்கள்.

SRI K. VINAYAKAM : What was the general reaction of the Finance Commission to the request made in our memorandum? When would our request fructify?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is rather very difficult to say what the reactions of the Finance Commissions were. My own impression is that it created favourable impression. That is all as far as we could know. The Commission's report is likely to be submitted within a few months.

SRI R. SRINIVASA IYER : What is the extra amount of share of the Central revenues that this Government expect or claimed before the Finance Commission?

11th December 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think I can enter into speculation about that.

**SRI S. M. ANNAMALAI :** மதுவிலக்கு அமுல் நடத்துகிற மாநிலங்களில், அதனால் ஏற்படுகிற நஷ்டத்தை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்வதாக அங்கு சொல்லியிருக்கிறார்களே, ஆனால் இம் மாநிலம் குறித்து அந்நஷ்டத்தை ஏற்றுக்கொள்ள முடியாது என்று முன்பு ஒரு கேள்விக்கு கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். அதையும் அவர்கள் ஏற்றுக்கொள்வதற்கு நிதிக் கமிஷன் சிபாரிசு செய்ய முன்வந்திருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்பிரச்னை நிதிக் கமிஷன் முன்னால் வரவில்லை.

*Educational concession to women*

* 2232 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜன மக்களுக்கு கல்வி துறையில் என்னென்ன சலுகைகள் கொடுக்கப்படுகிறதோ அதுபோல் பெண்களுக்கும் கொடுக்க உத்தேசமுண்டா ?

(இ) விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.

**SRI V. K. KOTHANDARAMAN :** பெண்கள் படித்து முன்னேறுவது மூலமாகத்தான் நாடு முன்னேறமுடியும் என்று கனம் நிதியமைச்சர் அவர்களே பல கூட்டங்களில் பேசியிருக்கிறார்கள். அதேபோல் திரு. வி. க. போன்ற பல அறிவாளிகளும் புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். அப்படியிருக்க, பெண்கள் படித்து முன்னேறினால் நாடு முன்னேற்றம் அடையுமே; ஆகவே, இதிலிருந்து நாடு முன்னேறக்கூடாது என்பது நோக்கமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதற்குப் பேர்தான் விதண்டாவாதம் என்று சொல்வது. "ஹரிஜன மக்களுக்கு கல்வித் துறையில் அளிக்கப்படுவது போன்ற சலுகைகள் பெண்களுக்கும் கொடுக்க உத்தேசமுண்டா" என்பது கேள்வி. இப்பொழுது பொதுவாக எல்லோருக்குமே 7, 8-வது வரை இலவசக் கல்வி கொடுக்கிறோம். அதற்கு மேல் 10-வது வரையில் ஏழைகளுக்கு இலவசக் கல்வி கொடுக்கிறோம். ஆகவே பெண்கள் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகயிருந்தால் அச்சலுகை அவர்களுக்குக் கிடைக்கும். சௌகரியம் உள்ளவர்கள் பெண்களை சமபளம் கொடுத்து படிக்க வைக்க முடியும். ஆகவே சம்பளம் கொடுப்பதா இல்லையா என்பதல்ல பிரச்னை. ஆக, பெண்களை பெற்றோர்கள் பள்ளிகளுக்கு அனுப்பத் தயாராகயிருக்கவேண்டுமென்பதுதான் பிரச்னை. அதற்காகத்தான் அப்படிப் பிரசாரம் செய்யவேண்டியிருக்கிறது.

[11th December 1961

SRI K. VINAYAKAM : Since women are classified as weaker sections of the community, as weak as the backward classes, would the concessions now given to the backward classes, be given to all the women studying at the University level?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think women would now accept the classification that they belong to the weaker sex. That is the vanity of the male sex.

SRI C. NATARAJAN : ஹரிஜனங்களுக்கு அளிக்கப்படுகிற சலுகை, ஹரிஜன் அல்லாதார் ஒரு ஹரிஜனப் பெண்ணை திருமணம் செய்து கொண்டால் அவர்கள் ஹரிஜனங்கள் அல்ல என்று மறுக்கப்படுகிறதே. அப்படி திருமணம் செய்துகொண்ட பிறகும் அவர்களை ஹரிஜனங்கள் என்றே மதிக்கப்பட்டு இச்சலுகைகள் தரப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கலப்பு மணம் பற்றி முன்னாலேயே விவாதித்திருக்கிறோம். கலப்புத் திருமணம் பற்றிய சட்டமுண்டு. யார் யாரை மணம் செய்து கொண்டால் அவர்கள் ஹரிஜனங்களாக இருப்பார்களா இல்லையா என்பதற்கு சட்ட முண்டு. இக்கேள்வியில் அது எழவில்லை.

SRI S. RAMALINGA PADAYACHI : மார்க் அடிப்படையில், 45 மார்க்ஸ் இருந்தால் படிப்புக்கு உதவித் தொகை கொடுக்கலாம் என்ற திட்டத்தைக் கொண்டுவர கனம் அமைச்சர் அவர்கள் முயற்சிப்பார்களா ? (பதில் இல்லை)

SRI A. A. RASHEED : Is it not against the Constitution to make discrimination between men and women?

THE HON. SRI C. SUBRAMANIAM : The hon. Member can discriminate in favour of women.

SRI V. K. KRISHNAMURTHY : தலைவர் அவர்களே, வர்க்கப் பிரிவினையைத் தோற்றுவிப்பதுபோல் பால் பிரிவினையைக்கூட தோற்றுவிக்கிறார்களே, இதை அரசாங்கம் நீடிக்குமா ? அல்லது ஒடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது அரசாங்கத்தின் பொறுப்பல்ல. மக்கள் எப்படிச் செய்கிறார்களோ அதைப் பொறுத் திருக்கிறது. இன்று, 51 சதவீதம் பெண்கள்தான். ஆகவே அவர்களை ஒதுக்கி வைப்பது என்பது முடியாத காரியம். இன்று இரு பாலாரும் முன்னுக்கு வரவேண்டுமென்பதுதான் சர்க்கார் கொள்கை.

SRI V. K. KOTHANDARAMAN : கலப்புத் திருமணம் செய்து கொள்ளக்கூடியவர்களுக்கு பிறக்கக்கூடிய குழந்தைகளை எந்த ஜாதியில் சேர்ந்தவர்கள் என்று கணக்கு எடுக்கப்படுகிறது? தகப்பன் ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்று கணக்கு எடுக்கப் படுகிறதா ? அல்லது தாய் ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்று கணக்கு எடுக்கப்படுகிறதா ?

DEPUTY SPEAKER : I disallow this question.

11th December 1961]

*Deficit under the Revenue Account (Central grant)*

*2233 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ரெவின்யூ கணக்கில் துண்டு விழுவதைச் சரிக்கட்ட மத்திய சர்க்கார் மானியம் தருகிறார்களா ?

(இ) அப்படியாயின், 1958, 1959, 1960, 1961-ம் ஆண்டுகளில் கொடுத்த மானியம் எவ்வளவு ?

(உ) இல்லையாயின் காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) to (உ) No, Sir.

Under Article 275 (1) of the Constitution, the Central Government may give grants-in-aid of revenues to such States as the Parliamentary may determine to be in need of assistance. Grants-in-aid under this Article are recommended by the Finance Commission. The Second Finance Commission did not recommend any grants-in-aid of this kind for Madras State. The hon. Member may be interested to know that during the years 1757–1961, this State had the following surpluses in the revenue account :—

| | RUPEES IN LAKHS. |
|---|---|
| 1957–58 .. .. .. .. | 341·34 |
| 1958–59 .. .. .. .. | 159·70 |
| 1959–60 .. .. .. .. | 52·95 |
| 1960–61 .. .. .. .. | 93·84 |

SRI S. M. ANNAMALAI : 1961-62ல் துண்டு விழுந்திருக்கிறது. இதைக் கொடுப்பதற்காவது மத்திய சர்க்கார் முன் வருவார்களா ? காரணம், மற்ற மாநிலங்களில் ரெவின்யூ கணக்கில் துண்டு விழுவதை மத்திய சர்க்கார் கொடுத்துக்கொண்டு வருகிறார்களே, நம் மாநிலத்தை மட்டும் புறக்கணிக்க காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது ஏற்படுத்தியிருக்கக்கூடிய நிதிக் கமிஷன் பரிசீலனை செய்து அவர்கள் இனிமேல்தான் சிபார்சு செய்யவேண்டும்.

SRI T. IRUSAPPAN : ஏற்கனவே விவசாயிகள் கட்டி வந்த வரியை விட இப்பொழுது பஞ்சாயத்து யூனியன்கள் வந்த பிறகு அவர்கள் வருடத்திற்கு ரூபாய்க்கு, 35, 50, 75 நயாபைசா என்று அதிக வரிகள் விதித்திருப்பதால் விவசாயிகள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதைக் கட்டுப்படுத்த அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதை ஆங்காங்குள்ளவர்கள் யோசித்து முடிவு செய்யவேண்டும். இது கிராமப் பிரதிநிதிகளிடம் இருக்கிறது, ஆகவே கிராமப் பிரதிநிதிகளிடம் இதை எடுத்துச் சொல்லவேண்டும், எந்தளவு போடவேண்டும், எந்தளவு போடவேண்டாமென்று.

SRI A. GOVINDASAMY : தலைவர் அவர்களே, நிதிக் கமிஷனின் பரிசீலனை 1962-63-க்குள் முடிந்து அடுத்த ஆண்டிலேயே கூடுதலான தொகை நம் ராஜ்யத்துக்குக் கிடைக்க வழிவகை செய்ய முடிவு காணுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 1961-62 முடிவுக்குள்ளேயே அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டுவிடும். ஜனவரி அல்லது பிப்ரவரியிலேயே அறிக்கை வந்துவிடும்.

SRI V. K. KOTHANDARAMAN : சுதந்திரா கட்சித் தலைவர் ஆட்சிக்கு வந்தால் ரெவின்யூ வரியையே தள்ளுபடி செய்வதாகச் சொல்லியிருக்கிறாரே, அதைப்பற்றி கனம் அமைச்சருடைய அபிப்பிராயம் என்ன ?

DEPUTY SPEAKER : How does this question arise? The hon. Member cannot get a reply from the Hon. Minister. He should put this question to the Leader of the Swatantra Party.

*Block Development Officer (travelling allowance)*

*2234 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்டத்தில் 1960-61-ல் ஒவ்வொரு சமுதாய நலத்திட்ட அதிகாரியும் பெற்ற பிரயாணப்படி எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM :—

| | *Particulars of staff.* | *Amount of fixed travelling allowance per month.* RS. | NP. |
|---|---|---|---|
| | (1) | (2) | |
| 1 | Block Development Officers (Gazetted). .. .. .. | 75 | 00 |
| 2 | Block Development Officers (Non-gazetted) .. .. | 60 | 00 |
| 3 | Extension Supervisor .. .. .. .. .. .. .. | 40 | 00 |
| 4 | Extension Officer (Co-operation) .. .. .. .. | 40 | 00 |
| 5 | Extension Officer (Agriculture) .. .. .. .. .. | 40 | 00 |
| 6 | Extension Officer (Animal Husbandry) .. .. .. .. | 35 | 00 |
| 7 | Extension Officer (Panchayats) .. .. .. .. .. | 35 | 00 |
| 8 | Extension Officer (Industries) .. .. .. .. .. | 40 | 00 |
| 9 | Social Education Organiser .. .. .. .. .. .. | 35 | 00 |
| 10 | Extension Officer (Statistics) .. .. .. .. .. | 17 | 50 |
| 11 | Gramasevak (Grade I) .. .. .. .. .. .. | 15 | 00 |
| 12 | Gramasevak (Grade II and Gramasevikas) .. .. .. | 7 | 50 |
| 13 | Social Welfare Workers .. .. .. .. .. .. | 7 | 50 |

SRI S. M. ANNAMALAI : ஸார், பிளாக் டெவலப்மெண்ட் அதிகாரிகளுக்கு குறிப்பிட்ட தொகை டீ.ஏ. ஆக இருந்தாலும், மாதத்தில் ஏறத்தாழ 27-28 நாட்கள் வெளியில் செல்லுகிற காரணத்தினால் அலுவலகத்தில் இல்லாத நிலையில் மக்களுக்குச் சில கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இத்தனை நாட்கள்தான் சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டுமென்று ஒரு உத்திரவு பிறப்பிக்கப்படுமா ?

11th December 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : இது ஆங்காங்கு இருக்கும் வேலையைப் பொறுத்து இருக்கிறது. இதை நிர்ணயித்து முறைப்படுத்துவதற்கு பஞ்சாயத்து யூனியன் சேர்மன் இருக்கிறார், கமிஷனர் இருக்கிறார். இருக்கக்கூடிய வேலையைப் பொறுத்து எந்த அளவு சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டும், எந்த அளவு அலுவலகத்தில் இருக்கவேண்டுமென்று பார்த்து முடிவு செய்யலாம்.

SRI A. GOVINDASAMY : இப்போது பிளாக் டெவலப்மெண்டைச் சேர்ந்த அதிகாரிகள் சுற்றுப்பிரயாணம் செய்கின்ற அளவுக்கு அவர்களுக்குத் தரப்படும் தொகை சரியாக இருக்குமா? அல்லது பற்றாக்குறையாகத்தான் இருக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : போதுமானதாக இருக்கும் என்றுதான் இந்த அளவுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே, இப்போது புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள யூனியன்களில் இருக்கின்ற கமிஷனருடைய பிரயாணப்படி பில்லை சேர்மன் பரிசீலனை செய்து மேலுக்கு அனுப்ப வேண்டிய நிலையில் விதி இருக்கிறது. பிரயாணப்படி பில்லில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு அனுப்பப்படுவதால் சேர்மனுக்குப் புரியவில்லை என்று சொல்லுகிறார்கள். தமிழில் எழுதி அனுப்பும் அளவுக்கு விதிகள் திருத்தப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி இந்தக் கேள்வியில் பதில் சொல்ல முடியாது. கூடுமானவரையில் எல்லாம் தமிழில் வருவதற்குத்தான் முயற்சி செய்யப்பட்டுவருகிறது.

*Engineering College for Tiruchirappalli*

* 2235 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the management of the Seshasayee Polytechnic has offered to open an Engineering College at Tiruchirappalli; and

(*b*) if so, the action taken by the Government in that regard?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) As the Government of India propose to start a Regional Engineering College at Tiruchirappalli, the offer of the Seshasayee Memorial Engineering Committee has not been pursued.

*Sugar Mill Workers (Representation)*

* 2236 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லா கூட்டுறவு சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் ஒன்பது கோரிக்கைகளைக்கொண்ட ஒரு மனுவை அனுப்பியுள்ளார்களா?

(இ) அதன்மீது என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது?

[11th December 1961

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Only a copy of the petition, dated 26th September 1961, from the North Arcot District Co-operative Sugar Mill Workers' Union addressed to the management was received.

(b) As there was no request by the Union for taking action on the demands, no action was taken.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்போது சமீபத்திலே அந்தத் தொழிலாளர்கள் கோரிக்கைகளைக் கேட்டுவரக் கூடிய நேரத்தில் முதலாளிகள் காண்டிராக்ட் ஸிஸ்டம் அடிப்படையில் முறையே மாற்றுகிறார்களே. ஏற்கனவே வேலை செய்து கொண்டிருக்கிற தொழிலாளிகளை காண்டிராக்ட் முறைக்கு வரும்படி கேட்கிறார்களே. அதனால் தொழிலாளிகளுக்கும் நிர்வாகத்திற்கும் இடையில் தகராறு ஏற்படுகிற நிலைமை பற்றி கனம் அமைச்சருக்குத் தெரியுமா? ஆம் என்றால், உடனடியாக இது விஷயத்தில் சுமுகமான நிலைமையை உண்டாக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி என்னிடம் தகவல் ஒன்றுமில்லை.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே இப்படிப்பட்ட கூட்டுறவு நிர்வாகத்தில் அரசாங்கம் தலையிட முடியாத அளவுக்கு விதி இருப்பதாகச் சொல்லுகிறார்களே அது உண்மைதானா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கம் தலையிடக்கூடாது என்பது ஒன்றும் இல்லை. எந்தெந்த நேரத்தில் தலையிடவேண்டுமோ அந்தந்த நேரத்தில் தலையிடும்.

*Power-cut (Industries)*

* 2238 Q.—SRI A. A. RASHEED : SRI N. K. PALANISAMI : } Will the Hon. the Minister for Home be pleased to state the number of workers affected by the lay off in the Industries due to recent power-cut in the State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 25,893 (Twenty-five thousand eight hundred and ninety-three).

SRI A. A. RASHEED : Sir, may I know the total loss sustained by the industries by way of production due to this power-cut?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry, I do not have the particulars with me.

SRI K. ANBAZHAGAN : இந்த மின்சாரத் தட்டுப்பாடு காரணமாக இவ்வளவு பேர்கள் வேலை வாய்ப்பை இழந்த நிலைமை ஏற்கெனவே ஏற்பட்டிருக்கிற காரணத்தினால் இனி எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஏற்படாது என்று கனம் அமைச்சர் அவர்கள் உறுதி கூறுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : உறுதி ஒன்றும் கூற முடியாது. ஆனால் மின்சார உற்பத்தி பெருக்கப்பட்டு வருகிறது.

11th December 1961]

*Evening Schools*

* 2239 *Q.*—**Sri S. M. ANNAMALAI** (on behalf of **Sri M. P. SARATHI**): கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சம்பாதித்துக்கொண்டே படிப்பதற்காக மாலைநேரப் பள்ளிகளும், கல்லூரிகளும் நிறுவும் திட்டம் குறித்து மத்திய அரசாங்கத்தார், இந்த ராஜ்ய அரசாங்கத்தாரை கலந்து ஆலோசித்ததா ?

(இ) அதுபற்றி இந்த அரசாங்கத்தின் கொள்கை என்ன ?

(உ) அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. The Government of India consulted this Government on a scheme of correspondence courses and evening colleges.

(*b*) & (*c*) : This Government are not in favour of introducing such a scheme.

**Sri S. M. ANNAMALAI :** ஸார், பெண்களுக்கு இந்தச் சலுகை தரப்பட்டிருக்கிறது—அதாவது தனியாகப் படித்து எஸ்.எஸ்.எல்.ஸி. வரை பாஸ் செய்வதற்கு. அப்படியானால் ஆண்களை ஏன் புறக்கணிக்கவேண்டும் ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இந்தக் கேள்வி ஈவினிங் காலேஜஸ், ஈவினிங் ஸ்கூல்ஸ் பற்றியது. ஈவினிங் காலேஜ்ஸ், ஈவினிங் ஸ்கூல்ஸ் பெண்களுக்குத் தனியாக இல்லை.

Sri K. VINAYAKAM : Sir, what are the valid reasons which actuated this Government not to accept such a kind of scheme which is working pretty well in foreign countries like U.S.A. and other countries?

The Hon. Sri C. SUBRAMANIAM : The view of the Government is, that it is not necessary to introduce such a scheme as even now the standard of college education all over the country is stated to be not up to the mark. It is felt that the standard will deteriorate if instructions were to be provided by evening classes or by postal tuition. At present there is no dearth of degree holders in the State and amongst whom there is acute shortage of employment. The Government felt that the introduction of evening class and postal tuition may accentuate the trouble.

**Sri K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, படித்தவர்களை யும், அதேபோல கல்லூரி, மேல் நிலைக் கல்வி படித்தவர்களையும் அதிக அளவு உற்பத்தி செய்வது நல்லதல்ல என்று கருதினாலும், தொழில் துறைக் கல்வியில் முன்னேற்றம் அடைவதற்கு இந்த மாதிரி மாலை நேரக் கல்வி வகுப்புகள் ஏற்படுத்தும் வகையில் திட்டமிடப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இந்தத் திட்டத்தை ஆலோசிக்கலாம். அடுத்த மந்திரி சபை இதைப்பற்றி கவனிக்கும் என்று நம்புகிறேன்.

[11th December 1961

*Nomination to Council*

* 2240 *Q.*—SRI C. NATARAJAN (on behalf of SRIMATHI SATHIYAVANIMUTHU) : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இந்திய மருத்துவம் பயின்ற ஒருவரை மேல் சபையில் அங்கம் வகிக்கச் செய்ய உத்தேசமுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI K. VINAYAKAM : Sir, are any nominations made out of this kind of persons-expert in Indian Medicine or Allopathic Medicine? Is not nomination made on different grounds? Does the member expect to be nominated at least next year?

THE HON. SRI C. SUBRAMANIAM : Evidently, she expects such a necessity might arise.

SRI A. GOVINDASAMY : ஆன் எ பாயிண்ட் ஆஃப் ஆர்டர், ஒரு அங்கத்தினர் கேள்வி கேட்டிருக்கிற நேரத்தில், அவர்களும் இந்திய மெடிஸினல் தேர்ச்சி பெற்றிருக்கிறார் என்ற காரணத்தினால் அவர்களைச் சுட்டிக்காட்டுகிற முறையில் அவர்களை நாமினேஷன் செய்யப்படுமா என்று கேள்வி கேட்பது முறையா என்று கேட்க விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : It is a matter of opinion. There is nothing wrong. It is no insinuation against any member.

*Bags for students*

* 2240-G *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மாணவர்களுக்காக குறைந்த விலையில் புத்தகப்பைகள் தயாரிப்பதைக் குறித்து மாநில சர்க்காரை மத்திய சர்க்கார் கேட்டுள்ளார்களா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) The Central Government have suggested to the State Governments the implementation of a suggestion made by the Prime Minister at the last meeting of the Central Advisory Board of Education that cheap ruck sacks be supplied to the school children. The matter is under the consideration of Government.

SRI S. M. ANNAMALAI : ஸார், இதற்கு எவ்வளவு செலவாகு
9 00 .m. மென்று சர்க்கார் திட்டமிட்டிருக்கிறதா ? அப்படி இருந்தால், எவ்வளவு செலவாகுமென்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரு பை செய்வதற்கு எவ்வளவு செலவாகுமென்று கணக்குப் போட்டிருக்கிறோம். பை ஒன்றுக்கு ரூ. 2.06 ந. பை. அல்லது ரூ. 3.40 ந. பை. வரை ஆகக்

11th December 1961]

கூடுமென்று போடப்பட்டிருக்கிறது. இந்த மாதிரி பார்க்கும் போது, சுமார் பை ஒனறுககு ரூ. 2.25 ந. பை. ஆகும். இதைப் பற்றி இன்னும் ஒருவித முடிவும செய்யப்படவில்லை.

*Railway line (Tirunelveli-Kanyakumari)*

* 2240-B *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the State Government have made any representation to the Central Government in regard to the inclusion of Tirunelveli-Kanyakumari railway link in the Third Plan;

(*b*) whether the Government have received any reply to their representation; and

(*c*) what is the estimated cost for this extension?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir. It is, however, seen from the Third Five-Year Plan recently published by the Planning Commission that the proposed line has not been included in the Railway Programme of construction for the Third Plan.

(*c*) The information is not available with this Government.

SRI T. T. DANIEL : May I know whether our Government is continuing its representation to the Central Government so that the railway line may be included in the Third Plan in view of the fact that Kanyakumari is assuming more and more importance as a tourist centre in India and there may be a complete railway connection from Benares to Cape Comorin?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do hope that this will be taken under the Third Five-Year Plan.

SRI A. A. RASHEED : Will the Government see that this scheme is not only taken up but also completed within the Third Five-Year Plan period?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot give an assurance that this scheme will be completed within the Third Plan period.

SRI M. K. SOMASUNDARAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொள்வதற்கு முன், அதற்கு வேண்டிய பூர்வாங்க வேலைகள் நடந்து கொண்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதெல்லாம் எடுத்துக் கொள்ளப்படும் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

[11th December 1961

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ்நாட்டில் ரயில்வே போக்குவரத்து வசதிக்காக எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது? அந்தத் தொகைக்குரிய வேலைகளாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளவை எவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் தகவல்கள் என்னிடம் இல்லை.

*Houses for Harijans (Athur taluk)*

*2240-C *Q.*—SRI T. IRUSAPPAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சேலம் மாவட்டம், ஆத்தூர் தாலுகா, கல்லாநத்தம், தாண்டவராயபுரம், ஆனியம்பட்டி, கடம்பூர், மணிவெளுத்தான், செக்கடிபட்டி, மேட்டுடையாம்பாளையம் கிராமங்களிலுள்ள ஹரிஜனங்கள், தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள், வீடுகட்டுவதற்காக வாங்கிய சர்க்கார் கடனை வசூலிப்பதற்காக அவர்கள் வீடுகளை ஜப்திசெய்து, வெளியேற்றப்படுவது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா ?

(இ) அப்படியானல், அதைத் தடுக்க சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No. Sir.
(*b*) Does not arise.

SRI T. IRUSAPPAN : தலைவர் அவர்களே, தாழ்த்தப்பட்ட மக்களுக்காக சர்க்காரால் சில வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன; சில வீடுகள் அவர்களுக்கு கடன் வசதி கொடுக்கப்பட்டு கட்டப்பட்டிருக்கின்றன. அவர்கள் அன்றாடம் வாழ்க்கை நடத்த முடியாமல் கஷ்டப்படுகின்ற நேரத்தில் இப்போது வீடுகளுக்காக பணம் கட்டவேண்டுமென்று தொந்திரவுகள் செய்கிறார்கள். இதை சர்க்காரே ஏற்று, அந்தப் பணத்தை தள்ளுபடி செய்வதற்கு உத்தேசம் உண்டா? அல்லது இதைப்பற்றி சர்க்காரின் நிலை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கேள்வி கேட்டது, வீடுகள் ஜப்தி செய்யப்பட்டு, அங்கிருந்து அவர்கள் வெளியேற்றப்பட்டனரா என்பது. அப்படி செய்யப்படவில்லை என்று பதில் சொன்னபோது, இந்தக் கேள்வியை எப்படிப் போடலாம்.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், இந்த மாதிரி இவர்களை வெளியேற்றப்படக்கூடிய நிலைமை ஏற்பட்டால், அவர்களை வெளியேற்றாமல் தடுப்பதற்கு தக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் வெளியேற்றப்படவில்லை என்று பதில் சொன்னபோது, நடவடிக்கை எடுப்பது என்பது இந்தக் கேள்வியில் இருந்து எழவில்லை.

11th December 1961]

**SRI T. IRUSAPPAN :** தலைவர் அவர்களே, அவர்கள் வைத்திருக்கக்கூடிய பாத்திரங்கள், ஆடு மாடுகள் போன்றவைகள் ஏதாகிலும் இதற்காக ஜப்தி செய்யப்பட்டிருக்கிறதா? இம்மாதிரி புகார் ஏதாவது வந்திருக்கிறதா?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அந்தமாதிரி எவ்விதமான புகாரும் வரவில்லை.

*Ongur river (Irrigation)*

2240-D *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received a petition, dated 23rd April 1961, from the ryots of the village of Vellankonda-Agaram regarding the utilization of the waters of the Ongur river for irrigation purposes; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise. Plans and estimates for an anicut across Ongur river near Arasur are however under scrutiny.

*New High School (Gudiyatham taluk).*

* 2240-E *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கனம் முதல் அமைச்சர் அவர்களுக்கு ஜூலை 18, 1961-ல் வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ., அவர்கள்மூலம் குடியாத்தம் தாலுக்காவில் மோட்டூர், வளத்தூர், செம்பள்ளி, குடியாத்தம் டவுன்களில் உயர்தர பாடசாலைகள் ஏற்படுத்துவது விஷயமாக எழுதப்பட்ட லெட்டர் சேர்ந்ததா?

(இ) அப்படியானால், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

(*b*) A high school has been permitted to be opened at Valathur. The Government have not received proposals either from District Board (since defunct) or from the Director of Public Instruction regarding the opinion of a high school at S. Mottur. The proposals for the opening of high schools at Sempalli and Gudiyatham town were not approved by the Government.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், வட ஆற்காடு ஜில்லாவிலே இருக்கக்கூடிய 11 தாலுகாவிலே மிக அதிகப்படியான ஜனத்தொகை கொண்டது குடியாத்தம் தாலுகா. அப்படி இருக்கும்போது மற்ற தாலுகாக்களைவிட பத்தாவதான நிலையிலே ஏழு ஹைஸ்கூல்கள்தான் இந்த தாலுகாவில் இருக்கிறது. மற்ற தாலுகாக்களில் 10, 12, 15 என்றிருக்கிறது. இதுபோன்ற பாகுபாடு காட்டக்கூடிய முறையிலே அனுமதி கொடுப்பதற்கான காரணம் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: எங்கு பள்ளிக்கூடத்திற்கு வரக்கூடிய குழந்தைகள் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறதோ, அங்கு ஹைஸ்கூல்கள் திறக்கப்படுகின்றன. தவிர, கீழ்வகுப்பிலே போதுமான குழந்தைகள் இல்லாவிட்டால், ஹைஸ்கூல்கள் மட்டும் ஏற்படுத்தி விடமுடியாது. ஆகவே, 7, 8-வது வகுப்புகளிலே அதிகப்படியான குழந்தைகள் எவ்வளவு இருக்கிறதோ, அதற்குத் தகுந்தாற்போல் ஹைஸ்கூல்கள் விஸ்தரிக்கப்படும்.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், எஸ். மோட்டூரில் 300 மாணவர்கள் இருந்தும் அங்கு அனுமதி கொடுக்காமல், 100 மாணவர்கள் இருக்கக்கூடிய இடத்திற்கு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இதுபோன்று அதிகப்படியான மாணவர்கள் இருந்தாலும், அந்த இடத்திற்கு சில காரணங்களால் அனுமதி கொடுப்பதில்லை என்பதுதான் குறை. அதிகாரிகள்கூட பார்வையிட்டு, ரொம்பவும் கன்சிடர் பண்ணி சிபார்சு செய்திருந்தாலும் கூட, மேலிடத்தில் அமைச்சர்களிடம் வரக்கூடிய நேரத்திலே தனிப்பட்டவர்கள் வேண்டியவர்களாக வரும்போது, அனுமதி மறுக்கக்கூடிய நிலை ஏற்படுகிறது.

DEPUTY SPEAKER: The hon. Member may put his question instead of making insinuations.

THE HON. SRI C. SUBRAMANIAM: இன்சினிவேஷன் வேண்டாம். நான் இப்போது படிப்பதை தயவுசெய்து கேட்கவேண்டும். டிஸ்டிரிக்ட் போர்டு இடத்திலிருந்து எஸ். மோட்டூருக்கு ஒரு ஹைஸ்கூல் வேண்டுமென்று கேட்ட மனு வரவில்லை. ஆகவே, இதிலே தனிப்பட்டவர்களுக்குச் செய்கிறோம் என்றப் பிரச்னையே எழுவில்லை.

SRI C. NATARAJAN: தலைவர் அவர்களே, இப்படிப்பட்ட உயர்நிலைப் பள்ளிகள் வேண்டுமென்று என் தொகுதியாகிய கள்ளக்குறிச்சியிலே இருந்து பல மனுக்கள் அரசாங்கத்திற்கு . . .

DEPUTY SPEAKER: The main question relates to North Arcot district and not to South Arcot district. So, the hon Member may resume his seat. I pass on to the next question

*Engineering Course (Admission)*

2240-F *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of applicants belonging to the Scheduled Caste, Backward Class and other classes from each district for the first year Engineering Degree course in 1961; and

(*b*) the number selected from each district;

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix II on pages 484 infra.

11th December 1961]

SRI T. T. DANIEL: May I know whether seats were reserved on a district-wise basis taking into consideration the population of each district?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, that is the basis on which seats have been allotted.

SRI M. K. SOMASUNDARAM: ஸார், என்ஜினியரிங் காலேஜில் ஹரிஜனங்களுக்கு ஒதுக்கப்பட்ட சீட்டுகள் எல்லாம் நிரப்பப்பட்டதா? அப்படி நிரப்பப்படவில்லை என்றால், அந்த இடத்தில் மற்ற இனத்தவர்களுக்குக் கொடுக்கப்பட்டதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: அதுதான் இப்போது கணக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. 85 பேருக்கு கொடுக்கப்பட்டு, 71 பேர் செலக்ஷனாகி இருக்கிறது. பாக்கியை மற்றவர்களுக்கு கொடுக்கப்பட்டு பூர்த்தி செய்யப்பட்டது.

*Loans for the purchase of bullocks*

* 2240-G *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலூக்கா, ஓடைப்பட்டி ஹரிஜனங்கள் விவசாயத்திற்கு மாடுவாங்க உதவிகோரி ஜூலை 12, 1958-ல் ஜில்லா கலெக்டரிடம் கொடுத்த மனுவின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No such petition was received by the Collector of Madurai on 12th July 1958 or subsequently.

*Menials in Kanyakumari district (Pay)*

2240-H *Q.*—SRI T. T. DANIEL: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the scale of pay of the menials (sweepers) in Government schools in Kanyakumari district before 1st November 1956;

(*b*) whether the scale of pay has been reduced since; and

(*c*) if so, the reason for such reduction?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Rs. 25—1—35.

(*b*) No, Sir. But sweepers recruited after 1st November 1956 are paid at the prevailing market rates.

(*c*) Does not arise.

SRI T. T. DANIEL: May I know whether these menials are actually engaged for cooking the noon meals in the various schools and if so, whether any extra allowance is given for that work?

THE HON. SRI C. SUBRAMANIAM: I do not think any extra allowance is being paid for their participation in the midday meals programme.

[11th December 1961

*Welfare of Scheduled Tribes*

2240-I *Q.*—Sri T. S. RAMASAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Central Government have sent any communication to the State Government regardnig the starting of intensive Special Development Projects for the Develpoment of Scheduled Tribes in the State; and

(*b*) the action taken thereon?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The Government of India have allotted two Tribal Development Blocks to this State to cover Yercaud and Kolli Hills Blocks of Salem district. Steps will be taken for launching the blocks.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : May I know the gist of the communication?

The Hon. Sri C. SUBRAMANIAM : You can open what they call tribal blocks on the basis of population, i.e., 25,000 population and an area of 200 square miles. For non-scheduled areas with a tribal population of 55 per cent, we can open a tribal block.

**Sri J. MATHA GOWDER** : இதுபோன்ற மலைவாசிகள் அபிவிருத்தி ப்ராஜக்ட் அதிகமாக மலைவாசிகள் இருக்கக்கூடிய நீலகிரி ஜில்லாவில் ஏற்படுத்தாததன் நோக்கம் என்ன? அப்படியில்லை என்றால், அடுத்த முறையாவது இதுபற்றி அரசாங்கம் யோசிக்குமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நீலகிரி ஜில்லாவில் அதிகமாக ஆதிவாசிகள் இருப்பதாகத் தெரியவில்லை. அங்கு இருக்கக்கூடிய 'டிரைபல் பாபுலேஷன்' மொத்த தொகை 12,000 இருக்கிறது.

**Sri A. GOVINDASAMY** : தென் ஆற்காடு ஜில்லாவில் கள்ளக்குரிச்சியில் மலைவாசிகள் நிலைமையை உயர்த்துவதற்கு இந்தத் திட்டம் பரிசீலிக்கப்படுமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்தத் திட்டம் ஸ்பெஷலாக 'ட்ரைபல் டெவலப்மெண்டு ப்ளாக்கு' ஏற்படுத்துவதற்கு போடப்பட்டிருக்கிறது. அதற்கு 25,000 'ட்ரைபல் பாபுலேஷன்' அந்த பிளாக்கில் 200 சதுர மைல் விஸ்தீரணத்திற்குள் இருக்க வேண்டும். அதுமாதிரி இருக்கிற இடங்களில்தான் இந்த பிளாக் ஏற்படுத்த முடியும். கள்ளக்குரிச்சியில் 'ட்ரைபல் பாபுலேஷன்' தொகை ரொம்ப கம்மி.

**Sri S. M. ANNAMALAI** : தேபர் கமிட்டி பார்த்த பிறகு ஜவ்வாது மலையில் மலைவாசிகளுக்கு தனி ப்ளாக் ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லி கலெக்டர்கூட சிபார்சு செய்திருப்பதாகத் தெரிகிறது. அதன் நிலை என்ன ஆயிற்று?

11th December 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தத் திட்டம் 'ட்ரைபல் பிளாக்' ஏற்படுத்துவதற்காக ஏற்பட்டது. இந்த இரண்டு இடங்களில் இந்த ப்ளாக் ஏற்படுத்துவதற்கான நிபந்தனைகள் சரியாக இருக்கின்றன. பாக்கி இடங்களில் இந்த நிபந்தனைகள் பூர்த்தியாகவில்லை. ஆகவேதான் கொள்ளி மலை, ஏற்காடு ஆகிய இரண்டு பகுதிகளிலும் இந்த மாதிரி 'ட்ரைபல் ப்ளாக்ஸ்' ஏற்படுத்துவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பொதுவாக 'ட்ரைபல் பாபுலேஷனுக்கு' என்ன உதவிவேண்டும் என்பதுபற்றி தனிக் கேள்வி கேட்கவேண்டும். அதற்கு மற்றொரு மந்திரி பதில் சொல்லுவார்.

SRI A. GOVINDASAMY : கள்ளக்குறிச்சியில் 25,000 ஜனத்தொகை இல்லை என்பது உண்மையாக இருந்தாலும், தேர்தல் நேரத்தில் மலைப்பகுதி மக்களுக்கு வோட்டுச் சாவடிகளுக்கு வந்து வாக்களிப்பதற்கு ரோடு வசதி கிடையாது, பள்ளி ஆசிரியர்களுக்கு அந்த இடங்களுக்குப் போய் வேலை செய்ய முடியாத நிலைமை இருக்கிறது. ஆகையால் ஜனத்தொகையில் 10,000, 15,000 ஆதிவாசிகள் இருந்தால்கூட, அதை 'சப்-சென்டராக' கருதி அவர்களுக்கு விசேஷ சலுகை கொடுப்பதற்கு அரசாங்கம் சிந்திக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆதிவாசிகள் இருக்கக்கூடிய இடங்களில் அவர்களுக்கு விசேஷ சலுகை கொடுத்து, அவர்களை கல்வித் துறையிலும், சமுதாயத்தில் மற்ற துறைகளிலும் முன்னேறுவதற்கு ஆதிவாசிகளுக்கு தனித் திட்டங்கள் இருக்கின்றன. அந்தத் திட்டங்கள் அங்கு நிறைவேற்றப்படுகின்றன. 'ட்ரைபல் ப்ளாக்' ஏற்படுத்துவதற்கு அங்கு இப்பொழுது போதுமான ஜனத்தொகை இல்லை.

SRI C. NATARAJAN : கள்ளக்குறிச்சியில் ஆதிவாசிகளுக்கு என்று அந்தவிதமான திட்டம் ஆரம்பிக்கப்படவில்லை என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இருந்தாலும், பாலப்பட்டு மலைவாசிகளுக்கு என்று 'ப்ளாக்' ஆரம்பிக்கப்படுவதாக இருந்தது. அதற்கு இப்பொழுது வேறு காரணங்களைக் கொடுத்து, அது நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அதை அரசாங்கம் நடத்துவதற்கு ஆவன செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வேறு எந்தத் திட்டம் ஆரம்பிப்பதாக இருந்தது என்று கனம் அங்கத்தினர் சொல்லுகிறார் என்பது தெரியவில்லை. இப்பொழுது 'ட்ரைப் ப்ளாக்' என்று சொல்லக்கூடிய வகையில் ஏற்காடு, கொள்ளி மலை ஆகிய இரண்டு இடங்களிலும்தான் நிபந்தனை சரியாக இருக்கிறது. ஆகலால் அந்த இரண்டு இடங்களிலும் 'ட்ரைபல் ப்ளாக்' ஆரம்பிப்பதற்கு ஏற்பாடு நடக்கிறது. கள்ளக்குறிச்சியில் உள்ள ஆதிவாசிகளுக்கு தனிப்பட்ட சலுகைகள் கொடுக்கவேண்டும் என்று சொன்னால், அம்மாதிரி சலுகைகள் கொடுப்பதற்கு தக்க ஏற்பாடுகள் இப்பொழுதே செய்யப்பட்டிருக்கின்றன.

Sri M. K. SOMASUNDARAM : திருநெல்வேலி, கன்யாகுமரி ஜில்லாக்களில் ஒரு 'ஸோஷல் ஆர்கனைஸேஷன் ஆபீசர்' போட்டு, ஆதிவாசிகளின் முன்னேற்றத்திற்கு ஒரு திட்டம் வகுக்க முடியுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : ஆதிவாசிகளை முன்னுக்குக் கொண்டுவருவதற்கு தனித் திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. அந்தத் திட்டங்கள் இப்பொழுது நிறைவேற்றப்பட்டும் வருகின்றன.

*Text-Books*

2240-J *Q.*—Sri T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the total cost of the books which a student studying in the 8th, 9th and 10th Standards, respectively; and

(*b*) whether there is any proposal to reduce (i) the cost of such books; and (ii) the number of books to be prescribed for such of those Standards?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) & (*b*) : Under the existing arrangements, text-books for detailed and non-detailed study in the languages for Standard X are prescribed by the department. The other text-books for Standard X and all text-books for Standards VIII and IX are selected by the managements of high schools from the list of books approved by the Text-Book Committee. The number of books prescribed by the authorities will be limited to the minimum required for each subject, according to the syllabus. As the books prescribed may vary from institution to institution, it is not possible to estimate the cost of a set of books required to be purchased by a student. There is no proposal to reduce either the cost or the number of books to be prescribed for these Standards.

Sri T. T. DANIEL : While appreciating the steps that have been taken by our Government in the matter of giving educational concessions to poor students, in view of the fact that a number of poor students have to purchase many books which are really very costly, will the Government think of finding out some scheme or granting some concession, by which the poor students may be able to purchase their text-books which will be very useful for them for studying and passing the examination?

The Hon. Sri C. SUBRAMANIAM : I am sure there will be many voluntary and charitable organizations to help the poor students. For Harijan students, the Harijan Welfare Department provides books free of cost. So various steps have already been taken. I do agree that if it is possible, the Government should be able to provide all these facilities free of cost but unfortunately we have not reached that stage.

11th December 1961]

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, ஏழை மாணவர்கள் புதிய புத்தகங்களை விலைக்கு வாங்கவேண்டியிருப்பதால், அதிக செலவாகிற காரணத்தினால், பெரும்பகுதி அவர்களுடைய செலவைக் குறைப்பதற்கு வசதியாக பள்ளிக்கூடங்களில் வைக்கப் படுகிற பாட புத்தகங்கள் மூன்று ஆண்டுகள் ஒரு முறைக்கு முன்னால் மாற்றப்படக்கூடாது, ஒரே வகையான புத்தகங்கள் மூன்று ஆண்டுகளுக்கு நீடிக்கவேண்டும் என்று வற்புறுத்துவதற்கு அரசாங்கம் முனவருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எனக்கு ஞாபகம் இருக்கும் வரையில், இப்பொழுது இருக்கக்கூடிய விதி அதுதான். மூனறு வருடங்களுக்கு முன்னால் புத்தகத்தை மாற்றக்கூடாது என்பதுதான் விதி.

SRI K. VINAYAKAM : On the other hand is it not a fact that according to the old S.S.L.C. standard, students were required to study more subjects like Elementary Science, Geography, History and Civics which are all now clubbed together in one subject known as 'Social Studies' and now they are expected to buy only one book to cover the entire curricula which was not the case before?

THE HON. SRI C. SUBRAMANIAM : Again we have reverted to the study of Geography and History separately instead of one subject, Social Studies. Apart from that, the number of books has considerably increased because various other new subjects have to be taught and the cost also has gone up. While I appreciate the difficulties which the poor students have to confront with, still we do not have a comprehensive scheme to give relief to them. But I hope that in course of time, this relief will also be made available to the poor students.

SRI T. T. DANIEL : I understand that the price is fixed only by the editor and publisher. So, will the Government go into the matter and fix a reasonable price for each book so that unreasonable price could not be fixed by the editor and publisher. Also, will the Government have at least one standard book for all the schools in each district?

THE HON. SRI C. SUBRAMANIAM : It will be very difficult to restrict it to only one standard book for the entire district. But as hon Members may be aware, we are making a beginning with regard to the primary schools so that the Government may prepare the text-books. By Government, I do not mean Ministers writing them but experts in the line writing text-books and the Government publishing them with the help of experienced men. Perhaps that scheme may be extended to the higher classes also.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know whether it will be possible to reduce the number of books especially when many schools are under-staffed and students have to depend only on these books?

11th December 1961] [Sri C. Subramaniam]

6. We have to provide a sum of Rs. 60 lakhs as Local Cess Surcharge Matching Grant and a further sum of Rs. 5 lakhs as House Matching Grant to Panchayat Unions. We have also sanctioned a grant of Rs. 20 lakhs to the Corporation for implementing its revised scales of pay.

7. On the Capital Account, further sums are needed for Civil Works, especially for maintaining the district board roads taken over after the abolition of the boards. The increased demand under Government Trading Schemes is mainly for meeting undischarged liabilities to the Government of India relating to the previous year and the current year in respect of fertilizer transaction. These debits will be washed out eventually by corresponding credits.

8. I would like to mention at this stage a procedural change we have made in respect of transactions under the head 'Suspense' occurring in major heads relating to works. Till now the practice has been to obtain appropriation for the gross outlay under Suspense. We have now changed over to a system of appropriation for the net amount after duducting credits from the gross outlay. The savings in Budget Estimates because of this change in procedure will be utilized for additional expenditure under the relevant heads.

9. On the Loan Account, the major item is a further loan of Rs. 234 lakhs to the State Electricity Board, to implement its Power Programme. In the Budget Estimates, a loan of Rs. 7.66 crores was envisaged on the basis of a total outlay of Rs. 15.41 crores. It is however now anticipated that the total outlay of the Electricity Board will be Rs. 18.20 crores and that a loan of Rs. 10 crores will be required to sustain it.

10. A provision of Rs. 1 crore is also sought for a loan to the State Housing Board for its programme of bulk acquisition of lands. This sum was originally provided under the Capital Account but has to be provided now under the Loan Account as the Housing Board has been set up as a separate statutory body. A further sum of Rs. 43 lakhs is required for loans to cultivators.

11. Usually the Final Supplementary Estimates are presented in March and are preceded by two supplementaries in the course of the year. Because of the special circumstances of this year, we are taking the Final Supplementary Estimates even now. With these words, Sir, I commend these estimates for the acceptance of the House.

## VII.—PRESENTATION OF THE STATEMENT OF DEMANDS FOR GRANT FOR EXCESS EXPENDITURE IN THE YEAR 1958-59.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I rise to present the statement of Demands for Grants for Excess Expenditure in the year 1958–59. The appropriations originally provided for in the Budget Estimates cannot, in the nature of things, be expected to tally entirely with the actuals and excesses under some grants are inevitable. The total of the excesses of expenditure under

voted grants which is now sought to be covered by legislative approval is Rs. 256 lakhs roundly against a total final appropriation of Rs. 12,047 lakhs. The Explanatory Note and the Annexure appended to the Statement of Demands give, in full, the reasons for the excess in each case. The Public Accounts Committee constituted for the year 1960–61 at its meetings held during the course of the year examined the reasons for the excesses and have recommended in their Report published in September 1961 that Demands for Grants to cover the excess expenditure over the final sanctioned appropriation under each Grant might be presented to the Legislative Assembly.

I commend for the acceptance of the House the statement of Demands for Grants for Excess Expenditure in the year 1958–59.

## VIII—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1962-63.

DEPUTY SPEAKER : The general discussion on the Budget for the year 1962–63 will be taken up now.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்போது வைக்கப்பட்டிருக்கக்கூடிய இந்தப் பட்ஜட் அறிக்கை எப்படி இருக்கிறதென்றால் இது ஒரு பட்ஜட் அறிக்கை போல் அல்லாமல் இது விளம்பர இலாக்கா அறிக்கை வெளியிடுகிறதே அது போன்று இருக்கிறது. மேலும் குறிப்பாக தேர்தலுக்கு இரண்டு மாதங்களுக்கு முன்னால் வரக்கூடிய இந்தப் பட்ஜட் அறிக்கை தேர்தலுக்காக வேண்டி, வோட்டு பிடிப்பதற்காக அந்த அளவிற்கு விளம்பரம் செய்யக்கூடிய தன்மையிலே இந்த அறிக்கை வந்திருக்கிறதென்று நான் திட்டவட்டமாகச் சொல்ல விரும்புகிறேன். நான் மாத்திரம் அல்ல. ஆளும் கட்சியில் உள்ளவர்கள் பலரும் அப்படிச் சொல்லக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் பகிரங்கமாகச் சொல்லமுடியாது. நாங்கள் பகிரங்கமாக சொல்லக்கூடிய அளவிற்கு வாய்ப்பு இருக்கிறது. அவ்வளவுதான் வித்தியாசம். ஆகையால தேர்தலுக்கு முன்னால் வந்திருக்கக்கூடிய இந்த அறிக்கையைப் பார்க்கிறோம். ஐந்தாண்டுகளில் கடைசி நேரத்தில் அதிலும் குறிப்பாக மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் ராஜ்ய சர்க்காரிலிருந்து மத்திய சர்க்காருக்கு போகக்கூடிய நேரத்தில் பல நல்ல திட்டங்கள் எல்லாம் வரக்கூடும் என்று எதிர்பார்த்தோம். 100 திட்டங்கள் தீட்டியிருக்கிறோமே, வேறு என்ன திட்டங்கள் வேண்டுமென்று கேட்கக்கூடும். சாதாரண மக்களின் அத்தியாவசியமாகத் தேவைப்படக்கூடிய பொருளின் விலைவாசியை அரசாங்கம் கட்டுப்படுத்தும் என்று எதிர்பார்த்தார்கள். அந்தவகையில் ஏதாவது திட்டம் வந்துள்ளதா என்று பார்த்தால், ஒன்றும் கிடையாது. வேலையில்லா திண்டாட்டத்தைப் போக்குவதற்கு ஏதாவது திட்டம் இருக்கிறதா என்று பார்த்தால் ஒன்றும் கிடையாது. எத்தனை தொழிற்சாலைகளை அமைத்தால் எத்தனைக் கோடி பேர்களுக்கு வேலை கொடுக்கப்படும் என்று திட்டவட்டமாகச் சொல்லப்பட

11th December 1961] [Sri V. K. Kothandaraman]

வில்லை. இரண்டாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்பத்தில் 53 லட்சம் பேர்களுக்கு வேலை கொடுப்போம், கொடுக்கப்படும் என்ற தன்மையில் இருந்தது. முதலாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்ப காலத்தில் 90 லட்சம் பேர்களுக்கு மேல் வேலை கிடையாது. சுமார் 2 லட்சம் பேர்கள் வரையிலும் அரைகுறை வேலை செய்யக்கூடிய வர்களாக இருக்கிருர்கள் என்பதை சர்க்கார் புள்ளிவிவரங்கள் காட்டுகிறது. இந்த அறிக்கையில் நாங்கள் எதிர்பார்த்த பல அம்சங்கள் காணப்படாமல் ஏமாற்றம் அளிக்கக்கூடிய முறையில் தான் இருக்கிறது.

கேந்திரமான தொழிற்சாலைகளை எல்லாம் சர்க்காரே எடுத்து நடத்துவார்கள் மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்திற்கான வரு வாயை முன்னிட்டு என்று எதிர்பார்த்தோம். மேலும் புதிய வரிகள் போடாத தன்மையிலே கேந்திரமான தொழிற்சாலையை சர்க்காரே எடுத்து நடத்தலாம். பஸ், லாரிகளை சர்க்காரே எடுத்து நடத்தலாம் என்ற அடிப்படையில் திட்டங்கள் வரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதுவும் கிடையாது. கொள்ளை லாபம் அடிக்கக்கூடிய தொழில்களுக்கெல்லாம் உச்சவரம்பு கட்டப்படும் என்று எதிர்பார்த்தோம். அதிலும் ஏமாற்றம்தான் ஏற்பட்டது. நிலச் சீர்திருத்த திட்டம் நிறைவேற்றப்பட்டபோதிலும், அதை எப்படி அமல் செய்யப்போகிருர்கள் என்பது குறிப்பிடப்பட வில்லை. பீடித் தொழிலாளர்களுக்கு சட்டம் கொண்டுவந்து இரண்டு வருஷங்கள் ஆகியும் அவர்கள் இன்றைக்கு எந்த அளவுக்கு பலனைக் காணக்கூடிய நிலைமை ஏற்பட்டதோ, அதே போன்ற நிலைமை இந்த நிலச் சீர்திருத்தச் சட்டத்தின் மூலமாக ஏற்படுமோ என்று நினைக்கவேண்டிய நிலையில் நாம் இருக்கிருேம். குறிப்பாக இந்த பட்ஜெட்டைக் கவனித்தால் "இதை ஆராய்ந்து வருகிருேம், அது ஆராயப்பட்டு வருகிறது" என்று சொல்லக் கூடிய நிலைமையிலேதான் இருக்கிறது. சிலவற்றைத்தான் முடிவு செய்து இருக்கிருேம் என்று சர்க்கார் சொல்லியிருக்கிருர்கள். சர்க்கார் ஏதோ நல்ல திட்டங்களை தீட்டி இருப்பதாகவும், முழுக்க முழுக்க ஸோஷலிசத்தையோ அல்லது கம்யூனஸத்தையோ கொண்டுவர முடியாது, சோவியத் ரஷியாவில் இருக்கக்கூடிய திட்டமும் கிடையாது, அமெரிக்காவில் இருக்கக்கூடிய திட்டமும் கிடையாது, ஆனல் எல்லாம் இணைந்ததாக இருக்கும் என்று சொல்லப்படுகிறது. இன்றைக்கு சர்க்காருடைய கொள்கை ஒரு கலப்படக் கொள்கையாக இருப்பதினுல்தான் இன்றைக்கு எந்தப் பொருளை எடுத்தாலும் கலப்பட மயமாகவே இருக்கிறது. எந்தத் தொழிலை எடுத்தாலும் கலப்படமாக இருக்கிறது. கலப்பட மற்ற எந்த பொருளையும் பார்க்கமுடியாத நிலையில் இருக்கிருேம். கலப் படம் செய்து பலர் கொள்ளையடிக்கக் கூடிய நிலைமையிலே இன்று சர்க்காருடைய கலப்படக் கொள்கை வழி வகுத்துக் கொடுத்திருக் கிறது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அறுபத்தைந்து வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு மாதம் ஓய்வுப்பணமாக ரூ. 20 கொடுக்கப்போகிருேம் என்று சொல்லப்பட் டிருக்கிறது. அதுவும் அனுதைகளுக்குதான். அனுதைகளுக்கு

[Sri V. K. Kothandaraman] [11th December 1961

"டெபனிஷன்" என்ன என்பது இங்கே விளக்கப்படவில்லே. பிள்ளைகளே இல்லாதவர்களுக்கா, அல்லது உற்றார் உறவினர் இல்லாதவர்களுக்கா? சில பெற்றோர்களுக்கு பிள்ளைகள் இருந்தாலும்கூட, தகப்பனுக்கு சோறு போட முடியாது என்று சொல்லுகிருர்கள். ஏனென்ருல் அவர்களுக்கு வாக்கூடிய வருவாய் போதவில்லே. அவர்களேயும் இதிலே சேர்ப்பார்களா? அல்லது சர்க்காருக்கு ஆதரவாளர்களாக இருக்கக்கூடியவர்களுக்கு மாத்திரம்தான் இந்தத் திட்டத்தின் பலன் கிடைக்குமா? பிச்சைக்காரர்களுக்கு இந்த ஓய்வுப்பணம் கிடையாது என்று சொல்லப்படுகிறது. பிச்சைக்காரர்கள் ஒரு தனி இனமா, அல்லது ஒரு தனி ஜாதியா என்று நான் கேட்கிறேன். நல்வாழ்வு வாழ வழியில்லாத நிலேமையிலே, அவர்களுடைய சொத்தை எல்லாம் இழந்து இன்றைக்கு பிச்சையெடுக்கக்கூடிய நிலேமையிலே அவர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கும் இந்தத்திட்டம் பொருந்தாது என்று ஒரு பொடியும் வைக்கப்பட்டிருககிறது என்று சொன்னுல் எவ்வளவு பேர் இந்தத் திட்டத்தினுல் நன்மை அடையப் போகிருர்கள்? அறுபது வயதுக்கு உட்பட்டவர்கள் இன்றைக்கு எவ்வளவு பேர் இறக்கிருர்கள் அறுபது வயதுக்கு மேற்பட்டவர்கள் எவ்வளவு பேர் இறக்கிருர்கள் என்ற புள்ளி விவரங்களேப் பார்த்தால் அறுபது வயதுக்கு மேலே உள்ளவர்களில் பத்தாயிரத்திற்கு ஒருவர்தான் சாகக்கூடிய அளவுக்கு நிலேமை இருக்கிறது. அப்படி அறுபத்தைந்து வயதுக்கு மேற்பட்டவர்கள் இரண்டாயிரம் பேர் இருக்கலாம். அதிலேயும் பிச்சைக்காரர்களே நீக்கி விட்டார்கள். கால் இல்லாதவர்கள், கண் இல்லாதவர்கள் ஆகிய அங்க ஹீனர்களுக்கு அறுபது வயது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. பிறவிலேயே குருடர்களாய் இருப்பவர்கள், அங்கஹீனர்களாய் இருப்பவர்கள் இவர்களுடைய கதி என்ன? அவர்கள் வாழ வழி இல்லே என்ருல் பிச்சை எடுப்பதைத் தவிர வேறு என்ன வழி இருக்கிறது. இந்த நிலேமையிலே பிச்சைக்காரர்கள் பிச்சைக்காரர்களாகவே இருக்கவேண்டும், மேலும் பலர் பிச்சைக்காரர்களாக மாற வேண்டும் என்கிற எண்ணந்தான் இந்த கொள்கை மூலம் பிரதிபலிப்பதாக தெட்டத் தெளிவாக தோன்றுகிறது. அறுபது வயதுக்கு மேற்பட்டு யாராயிருந்தாலும் சரி, பிச்சைக்காரர்களாய் இருந்தாலும் சரி, இந்த ஓய்வுப் பணத்தை அவர்களுக்கு வழங்கவேண்டும். அங்கஹீனர்களாய், குருடர்களாய் இருப்பார்களேயானுல் அவர்களுக்கு வயது நிர்ணயம் இருக்கக்கூடாது. மேலும் ஏதாவது தொழிலில் அவர்களே ஈடுபடச் செய்யம் நிலேமையை உண்டாக்க வேண்டும். சமீபத்திலே 25 வயது வாலிபன் ஒருவன், கண்ணில்லாத பிறவிக் குருடன், குருடர்கள் பாடசாலேயில் படித்து, டேராடூனுக்குச் சென்று பல தொழில்களே கற்று தனக்கு வேலே வேண்டும் என்று நமது தொழில் அமைச்சரிடத்தில் போய்க்கேட்டான். அவனுக்கு வேலே கிடைக்கவில்லே. வேலே கொடுத்தால் செய்யத் தயார் என்று சொன்னபோதிலும் வேலே கிடைப்பதில்லே. இதுபோன்று பலர் இருக்கிருர்கள். ஆகவே இதுபோன்றவர்களுக்கு வயது நிர்ணயம் இருக்கக்கூடாது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

11th December 1961] [Sri V. K. Kothandaraman]

அடுத்தபடியாக, பெண்களில் பலர் விதவைகளாக இருக்கிறார்கள். வாழ வழியில்லாத நிலைமையிலே, சொத்தை இழந்து இன்று அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இம்மாதிரி விதவைகளுக்கும், வயது நிர்ணயம் இல்லாமல் ஏதாவது பணம் கொடுத்து அவர்களை வாழ வைப்பது நலமாயிருக்கும்.

இந்த நேரத்திலே மிகப் பெரிய துண்டுவிழக்கூடிய பட்ஜெட் வருகிறது என்று சொன்னால் அதற்கு பல காரணங்களைக் காட்டலாம். என்.ஜீ.ஓ.-க்களுக்கு சம்பள உயர்வு கொடுத்தோம், அதற்காக மத்திய சர்க்கார் கொடுத்து வந்த மான்யத்தை நிறுத்தி விட்டார்கள் என்று சொல்லலாம். தேர்தலுக்கு முன்னால் பல புதிய வரிகளை போட முடியாது. அப்படிப் போட்டால் பலவிதமான சங்கடங்கள் ஏற்படும். 1962, பிப்ரவரி தேர்தலுக்குப் பிறகு மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்காக பல ஆயிரக்கணக்கான கோடி ரூபாயை வசூலிக்க புதிய புதிய வரிகளை போடக்கூடிய நிலைமை ஏற்படப் போகிறது. அப்படி புதிய வரிகளைப் போட்டு அதிலிருந்து கிடைக்கக்கூடிய பெரிய தொகையிலிருந்து இந்தப் பற்றாக்குறையை சரிக்கட்டப் போகிறோம் என்று சொல்லக்கூடிய தன்மையிலே இந்த பட்ஜெட் அமைந்திருக்கிறது என்பதை நாம் பார்க்க முடிகிறது. அதைப்போலத்தான் இன்றைக்கு 6 வயதிலிருந்து 11 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கு கட்டாயக் கல்வி கொண்டுவரப்போகிறோம் என்ற திட்டமும் இருக்கிறது. இதை பல ஆண்டுக் காலமாகவே நாம் சொல்லி வந்திருக்கிறோம். 2 வயது முதற்கொண்டு 5 வயது வரையிலுள்ள குழந்தைகளுக்கு பராமரிப்பு இல்லங்கள் ஏற்படுத்தப் போவதாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் 12,000 பஞ்சாயத்துக்களுக்கு 12,000 பராமரிப்பு இல்லங்களை நிருவப்போவதில்லை. உடனடியாக ஒரு ஜில்லாவிலே ஒரு பஞ்சாயத்திலே ஆரம்பிக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பார்க்கிறவர்களுக்கு என்ன தோன்றும் என்றால், ஏதோ ஒவ்வொரு பஞ்சாயத்திலும் இந்த பராமரிப்பு இல்லங்களை சர்க்கார் ஏற்படுத்தப் போகிறார்கள் என்று விளம்பரப் படுத்தக்கூடிய முறையிலே இத்திட்டம் அமைந்திருக்கிறது. ஆகவே இது போன்ற திட்டங்களை தேர்தல் சமயத்தில் கொண்டு வராமல் அதற்கு முன்னால் கொண்டுவந்திருந்தால் ஏதாவது அர்த்தம் உண்டு. இப்பொழுது கொண்டுவருவதால் கிழவர்களுடைய ஓட்டை வாங்குவதற்கும், மேலும் குழந்தைகளுக்கு எல்லாம் செய்யப்போகிறோம் என்று சொல்லி ஓட்டு வாங்குவதற்குமாக இந்த திட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆனால் பொது மக்கள் ஏமாளிகள் அல்ல. இந்த நேரத்திலே எதற்காக இது வந்திருக்கிறது என்று யோசனை செய்வார்கள். நமது நிதி அமைச்சரவர்கள் மத்திய சர்க்காருக்குப் போகக்கூடிய நேரத்திலே இந்தமாதிரி ஒரு அறிக்கையைக் கொண்டு வந்திருக்கிறார்களே என்று நான் வருத்தப்படுகிறேன். நல்ல பெயரோடு நிதி அமைச்சரவர்கள் அங்கு போகக்கூடிய நேரத்திலே இந்த அறிக்கையை கொண்டு வந்திருப்பது உண்மையிலேயே வருத்தப்பட வேண்டியதாயிருக்கிறது.

விவசாயம் அதிகரிக்க வேண்டும், உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்பதுதான் மூன்ருவது திட்டத்தின் பிராதன நோக்கம். ஆனல் இந்த பட்ஜெட்டிலே புதுக் கிணறுகளுக்காக சப்ஸிடி லோன் குறைக்கப்பட்டிருக்கிறது. 38 லட்சமாக இருந்தது இப்பொழுது 19 லட்சமாக குறைக்கப்பட்டிருக்கிறது. பின் தங்கியவர்களுக்கு வழங்கும் உபகாரச் சம்பளமும் குறைக்கப்பட்டிருக்கிறது. பொது சுகாதாரத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகையும் குறைக்கப்பட்டிருக்கிறது. சென்ற சில நாட்களுக்கு முன் நமது சுகாதார அமைச்சரவர்கள் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் எவ்வாறு பேதி கண்டு வட ஆற்காடு ஜில்லாவிலே 530 பேரும், தென் ஆற்காடு ஜில்லாவிலே 560 பேரும் இறந்தார்கள் என்று சொல்லக்கூடிய அளவுக்கு அங்கு உள்ள மக்கள் சுகாதார மற்ற தண்ணீரை குடிக்கின்ற காரணத்தினல் இப்படி புதிய புதிய வியாதிகள் ஏற்படுகின்றன என்பதை நாம் பார்க்கின்ற நேரத்திலே, பொது சுகாதாரத்தை நல்ல முறையிலே கவனிப்பதற்குப் பதிலாக, அதற்காக குறைந்த தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் இந்த அறிக்கையிலே பார்க்கிறேம். ஆகவே தான் இது போன்று விவசாயத்திற்கு என்று புதிய கருவிகளை, நவீன கருவிகளை விவசாய அபிவிருத்திக்கு என்று புதிய ட்ராக்டர்களையும் புல் டோஸர்களையும் விவசாயிகளுக்கு வாங்கிக்கொடுத்து உணவு உற்பத்தியை பெருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நமது ராஜ்யத்தில் எங்கு கிணறுகளை வெட்டுவதாக இருந்தாலும் ஒரே பாரையாகத்தான் இருக்கிறது. சுலபத்தில் கிணறுகளை வெட்ட முடியவில்லை. அப்படி கிணறுகளை வெட்டுவதற்கு ராக் ட்ரில்களை வாங்கிக் கொடுக்கவேண்டும். இப்படிப்பட்ட நவீன கருவிகளை விவசாயிகளுக்கு வாங்கிக் கொடுத்தால் தான் உணவு உற்பத்தியை பெருக்குவதற்கு முயற்சி எடுத்துக் கொள்வதற்கு வசதியாக இருக்கும். அதை விட்டு இப்படிப்பட்ட நவீன கருவிகளை வாங்குவதற்கு சோவியத் ரஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் போலண்டுக்கும் எழுதி இருக்கிறேம் என்று சொல்வதில் பயன் இல்லை. ஒரு வருஷத்திலும் இப்படிப்பட்ட கருவிகளை வாங்குவதற்கு திட்டமிட்டிருக்கிறேம் என்று சொல்லிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் குழந்தைகளுக்கு ஏதோ மிட்டாயைக் காண்பிப்பது போல் இருக்கிறது. திட்டமிட்டுக்கொண்டிருக்கிருர்களேயொழிய அவைகளை வாங்குவதற்கு எந்த விதத்திலும் நடவடிக்கை எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. ஆகவே நவீன கருவிகளை போதுமான அளவிற்கு வாங்கி அவைகளை விவசாயிகளுக்குக் கொடுக்கக்கூடிய அளவில் இருக்க வேண்டும். அத்துடன் விவசாயிகளுக்கு விவசாயம் சம்பந்தமாக கடன் கொடுப்பதாக இருந்தாலும் அதிலும் கஷ்டங்கள் இருக்கின்றன. உடனுக்குடன் அவர்களுக்கு கடன்கள் கூட கிடைப்பதாக இல்லை. ஆனல் பெரிய முதலாளிகளுக்கு அவர்கள் கேட்ட மாத்திரத்திலேயே கிடைக்கக்கூடிய அளவில் இருக்கிறது. ஆகவே விவசாயத்தில் நல்ல அபிவிருத்தி காணவேண்டுமானல் விவசாயிகளுக்கு நவீன முறையிலுள்ள கருவிகளை வாங்கிக்கொடுக்க

[11th December 1961] [Sri V. K. Kothandaraman]

நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்களுக்குப் போது மான அளவில் கடன் கொடுத்து உதவ முன் வரவேண்டும்.

இன்றைக்கு நாம் நில சீர்திருத்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரப்போகிறோம். அந்த நிலைமையில் நிலப் பிரபுக் களுடைய, விவசாயிகளுடைய உறவு நல்ல முறையில் இருக்க வேண்டும். இன்றைக்கு நில உறவு எந்த முறையில் இருக்கிறதோ அந்த அளவில் தான் இருக்கும் விவசாயத்தில் உணவு உற்பத்தியும். இன்றைய நிலையில் உறவு சரியானபடி இல்லையானால் கண்டிப்பாக விவசாயத்தில் உணவு உற்பத்தி தக்க அளவில் பாதிக்கப்படும். அதனால்தான் இன்றைக்கு பிரதானமான தொழிற்சாலைகளை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று சொல்லிக்கொண்டு வருகிறோம். ஆனால் சர்க்கார் சொல்லுகிறார்கள் இன்றைக்கு யார் யார் எந்தெந்த தொழில்களுக்கு பணம் போட்டு நடத்த முன் வருகிறார்களோ அவர்களுக்குக் கொடுக்கிறோம் என்று சொல்லு கிறார்கள். சர்க்கார் ஏதோ தீப்பெட்டி தொழிற்சாலையையும் பாதரட்சை தொழிற்சாலையையும் எடுத்து நடத்துகிறோம் என்று சொல்லி விட்டால் மட்டும் போதாது. இதைத் தவிர இன்னும் மற்ற எத்தனையோ தொழில்கள் இருக்கின்றன. அவைகளை யெல்லாம் எடுத்து நடத்த வேண்டும். அப்படி சர்க்காரே எடுத்து நடத்தாமல் இருப்பதால் தான் பல அபிவிருத்தி வேலைகள் நடை பெற முடியாமல் இருக்கிறது. இப்பொழுது எங்கு பார்த்தாலும் அபிவிருத்தி வேலைகள் நடைபெற்று வருகின்றன. அவைகளுக்கு வேண்டிய சிமெண்ட் முதலியவைகள் கிடைக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். அவைகள் சரியானபடி கிடைக்காமல் இருப் பதன் காரணத்தால் பல அபிவிருத்தி வேலைகள் நடைபெறாமல் தடைபட்டிருக்கின்றன. குடி தண்ணீருக்கு என்று கிணறுகள் வெட்ட வேண்டுமானால் அவைகளை வெட்ட முடியாமல் இருக்கிறது. ஆனால் பல அறிக்கைகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன. அந்த அறிக்கைகளைப் பார்த்தால் பல அபிவிருத்தி வேலைகள் தடைபட்டு இருப்பதைப் பார்க்கலாம். அதற்காகத்தான் கம்யூனிஸ்ட் கட்சி அடிக்கடி பல தொழிற்சாலைகளை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று சொல்லிக்கொண்டு வருகிறது. அதாவது சிமெண்ட் தொழிற்சாலை, உருக்கு தொழிற்சாலை போன்ற முக்கிய மானவைகளையாவது சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று சொல்லிக்கொண்டு வருகிறது. அவைகளை எடுத்து நடத்துவதன் மூலம் சர்க்காருக்கு நல்ல லாபம் வரும். பல அபிவிருத்தி வேலை களை சர்க்கார் செய்வதற்கும் வசதி ஏற்படும் என்றும் நாங்கள் சொல்லுகிறோம் அதன் மேல் புதிய வரிகளைப் போட்டு வருவாயை அதிகப்படுத்திக்கொள்ளலாம். அப்பொழுது புதிய வரியைப் போடலாம். அதற்கு ஆட்சேபிக்கப்போவதில்லை. அப்படிப் பட்ட வரிகளைப் போடாமல் மறைமுகமாக இன்னும் வரியை அதிகப்படுத்திக்கொண்டு போனதினால்தான் மக்களால் தாங்க முடியவில்லை. அந்தப்படி பெரிய முதலாளிகளுக்கு வரி போட்டால் எந்த விதத்திலும் ஆட்சேபணை இருக்காது. இந்த முறையில்

[Sri V. K. Kothandaraman] [11th December 1961

சர்க்காருடைய வருவாயை அதிகப்படுத்திக்கொள்ளலாம். அதன் பிறகு பல அபிவிருத்தி காரியங்களை நிறைவேற்ற முடியும். இதைத் தான் கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இது கனம் அமைச்சருக்குத் தெரியாது என்பதில்லை. அவருக்கே நன்ருகத் தெரியும். ஆனல் இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் அவர்களுடைய கொள்கை அடிப்படையில் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்பதை அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

இப்பொழுதுள்ள மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்தைப் பார்த்தால் அதை நல்ல முறையில் நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லப்படுகிறது. இப்பொழுதும் நாங்கள் சொல்லுகிருேம் பல தொழிற்சாலைகளை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று. இதையே தான் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் அடிக்கடி சொல்லிக்கொண்டும், எழுதிக்கொண்டும், பேசிக்கொண்டும் வருகிருேம். இப்படி பல தொழிற்சாலைகளை எடுத்து நடத்துவதோடு கூட பஸ், லாரி முதலிய போக்குவரத்துக்களையும் சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும். அப்படி நடத்துவதன் மூலம் சர்க்காருடைய வருமானத்தை இன்னும் கணிசமான அளவில் பெருக்கிக்கொள்ளலாம். அப்படி பெருக்கிக்கொண்டு மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்தை நல்ல முறையில் திட்டமிட்டு முடிக்க முடியும் என்பதை இந்த நேரத்தில் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர ஆசைப்படுகிறேன்.

அதே போன்று இன்றைக்கு வீடு கட்டும் திட்டத்தின் கீழ் எத்தனையோ பேர்களுக்கு வீடு கட்டிக்கொடுத்திருக்கிருர்கள். ஆனல் வீடுகள் கட்டிக் கொடுத்திருக்கிருர்கள் என்ற பெயரில் இருக்கிறதேயொழிய ஹரிஜனங்களுக்கு பூராவும் இன்னும் வீடுகள் கட்டிக் கொடுத்ததாகத் தெரியவில்லை. மற்ற ஜாதி ஹிந்துக்கள், மிடில் க்ளாஸ் க்ரூப் இது போன்றவர்களுக்குத் தான் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கிறதேயொழிய பெருவாரியான மக்களுக்கு இன்னும் கட்டிக்கொடுத்ததாகத் தெரியவில்லை. அவர்களுடைய பிரச்னை இன்னும் தீர்ந்த பாடில்லை. இதைப்பற்றியே தான் எல்லோரும் பத்து பதினைந்து வருஷங்களாகச் சொல்லிக் கொண்டு வருகிருர்கள். இதைப்பற்றி பல தடவை சொல்லியும் எழுதிக்கொடுத்தும் இன்னும் அவர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கப்படவில்லை. நாங்களும் ஐந்து வருஷ காலமாக எழுதிக் கொடுத்துக்கொண்டிருக்கிருேம். அதைப்பற்றி கேட்டால் அப்படிக் கொடுக்க சட்டம் இல்லை என்றும், ஆட்சேபணை செய்கிருர்கள் என்றும், அதற்கு சட்டம் இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறதேயொழிய அவர்களுடைய பிரச்னை இன்னும் தீர்ந்த பாடில்லை. உண்மையில் அவர்களுக்கு வீடுகளைக் கட்டிக்கொடுக்க முடியவில்லை என்ருலும் அவர்களுக்கு வீட்டு மனைக்கட்டாவது கொடுக்கலாம். அது கூட கொடுக்கப்படாமல் இருக்கக்கூடிய தன்மையை நாம் இப்பொழுது பார்க்கிருேம். ஆகவேதான் உடனடியாக வீடுகள் இல்லாத ஹரிஜன ஏழை மக்கள்

11th December 1961] [Sri V. K. Kothandaraman]

போன்றவர்களுக்கு வீட்டு மனைகள் கொடுக்க வழிவகை செய்ய வேண்டும் என்பதை இந்த நேரத்தில் நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இதே போன்று தான் இன்றைக்கு விளம்பரங்களில் கூட பல ஊழல்கள் இருக்கின்றன. இந்த ஊழல்கள் இன்றைக்குக் கூட மறுக்க முடியாத தன்மையில் இருக்கிறது. ஏழை வயிற்றுக்கு இல்லாமல் ஏதோ கொஞ்சம் திருடிவிட்டால் அவனுக்கு நல்ல தண்டனை விதிக்கப்படுகிறது. ஆனால் பெரியவர்கள் திருடினால் அப்படிப்பட்ட தண்டனை கொடுக்கப்படுவது இல்லை. ஏழையாக இருந்தால் உடனே லாக்அப். ஆனால் அதே காரியத்தை ஒரு பணக்காரன் செய்து விட்டால் அவனுக்கு வேறு விதமான தண்டனை கொடுக்கப்படுகிறது. இந்த பாகுபாடு எதற்கு என்பது தெரியவில்லை. லட்சக்கணக்காக கையாடல் செய்கிறவர்களுக்கு கடுமையான தண்டனை விதிப்பதாகவே தெரியவில்லை. இப்படிப்பட்ட பாகுபாடு இருக்கவே கூடாது. இருந்த போதிலும் உண்மையான முறையில் எல்லாம் நடக்க வேண்டும். அவர்கள் அரசியலைச் சேர்ந்தவர்களாக இருந்த போதிலும் அவர்கள் தவறுகள் செய்தால் அவர்களையும் தண்டிக்க வேண்டியதுதான் அவசியம். சாதாரணமாக இன்றைக்கு சினிமா நடக்கிறது. அதில் அந்நந்த கட்சிகளுடைய சின்னங்கள் காட்டப்படுகிறது. இதைச் சொல்லும் போது கனம் அமைச்சர் சொல்லலாம் இது மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்தது. அதனால் தங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று. நான் சொல்லுகிறேன், இது மத்திய அரசாங்கத்தினுடையதாக இருந்தாலும் இவர்கள் அவர்களுக்குச் சொல்வதற்கு வேண்டிய வாய்ப்பு இருக்கிறது. தந்தி மூலமாகவோ அல்லது டெலிபோன் மூலமாகவோ சொல்லலாம். அவர்கள் போட்ட சட்டத்தை இவர்களுக்கு மாற்றுவதற்கு முடியாவிட்டாலும் அவர்கள் போட்ட உத்தரவை இவர்களால் மாற்ற முடியும். இப்பொழுது தேர்தல் வரப்போகிறது. இந்த சமயத்தில் விளம்பரங்களை சரியாகச் செய்ய வேண்டும். மற்ற கட்சிகளுடைய சின்னங்களை சரியானபடி விளம்பரப்படுத்த வேண்டும். கேவலமாக விளம்பரப்படுத்தவே கூடாது. இதைப் பார்த்தால் கம்யூனிஸ்ட் கட்சியின் சின்னங்களை விளம்பரப்படுத்துவதைப் பார்த்தால் அதைக் கேவலப்படுத்துவது போல் இருக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சி என்றால் ஏதோ வேப்பங்காய் போல் கருதுவது போல் தோன்றுவதாக இருக்கிறது. அதை கவனித்தால் எவ்வளவு பாகுபாடு கண்ணோட்டத்துடன் பார்த்தால் நன்றாக தெரிய வரும். தேர்தல் சமயத்தில் இப்படிச் செய்வது ரொம்பவும் தவறு. இதை உடனடியாக மத்திய சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்படி பாகுபாடுகள் உள்ள சினிமாக்களையே காட்டக்கூடாது என்று உத்தரவு போட வேண்டும். இதற்கு வேண்டிய நடவடிக்கையை சர்க்கார் எடுத்துக் கொள்ளவேண்டும். கம்யூனிஸ்ட் கட்சியை வேப்பங்காயாகக் கருதக் கூடாது. படங்களை நல்ல முறையில் விளம்பரம் செய்ய வேண்டும். இது எப்படி இருக்கிறது என்றால் நொள்ளிக்கண்ணனுக்கு உள்ளதைச் சொன்னால் நோப்பாளம் வரும் என்று 10.0 a.m.

சொல்வார்கள். அப்படி இருக்கிறது. இப்படி இல்லாமல் சினிமாக்களில் காட்டுவது நேர்மையாக இருக்க வேண்டும். இந்த மாதிரி உண்மையை எடுத்துச் சொல்லக்கூடிய நேரத்தில் அதைக் கேட்கப் பலபேர்களுக்கு வெறுப்பாக இருக்கும். இந்தக் கட்சியை பல விதத்திலும் பாகுபாடு படுத்தக்கூடிய தன்மை இருந்து வருகிறது. ஆகவே, இந்தக் கட்சியையும் நேர்மையாக நடத்தவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கின்றேன்.

அறுபத்து ஐந்து வயதுக்கு மேற்பட்டவர்களுக்குத்தான் உதவித் தொகை என்றும், பிச்சைக்காரர்களுக்குக் கிடையாது என்றும் இருக்கிறது. எந்தவிதமான பாகுபாடும் இல்லாமல், வயோதிகர்கள் எல்லோருக்கும் உதவித் தொகை கொடுக்கவேண்டும். அங்கஹீனர்கள், குருடர்கள் இப்படிப்பட்டவர்களையெல்லாம் பாகுபாடு செய்யக் கூடாது. விதவைகளைப் பொறுத்தும் பாகுபாடு பார்க்காத தன்மை இருக்கவேண்டும். சர்க்கார்ச் சிப்பந்திகள், உபாத்தியாயர்கள் இவர்களுடைய பிள்ளைகளுக்கு மாத்திரம் கல்லூரியிலே படிக்க வட்டி இல்லாக் கடன் கொடுக்கப்படும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது அவ்வளவு சரியல்ல. அவர்களுக்கு இந்த உதவி அளிக்கப்படுவதை நாங்கள் வரவேற்கிறோம். கல்லூரிகளில் படிக்கக்கூடியவர்களில் 23 சத விகிதத்தினர்தான் ஏழைப்பிள்ளைகளாக இருப்பார்கள். 75 சத விகிதத்தினர் பணக்கார வீட்டுப் பிள்ளைகளாகத்தான் இருப்பார்கள். பள்ளிகளில் சேர்த்துக்கொள்ளும்போது வேண்டியவர்கள், வேண்டாதவர்கள். படித்தவர்கள், படிக்காதவர்கள், அதிக மார்க் வாங்கியவர்கள், குறைந்த மார்க் வாங்கியவர்கள் என்றெல்லாம் பாகுபடுத்திச் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள். இப்படிப்பட்ட நிலையில் ஒரு சிலருக்கு மாத்திரம் சலுகை என்றும், மற்றவர்களுக்குக் கிடையாது என்றும் சொன்னால் அது சரியல்ல. வசதி இல்லாத எல்லா ஏழைகளுக்கும் உதவி அளிக்காது, உபாத்தியாயர்கள், சர்க்கார் சிப்பந்திகள் இவர்களுடைய பிள்ளைகளுக்கு மாத்திரம் சலுகை அளிக்கப்படுகிறது என்றால், இது என்ன காக்காய் பிடிக்கிற காரியமா என்று நான் கேட்கின்றேன். ஏழை மாணவர்கள் அத்தனை பேர்களுக்கும் இந்த வட்டியில்லாக் கடனுதவி அளிக்க வேண்டும் என்று நான் தெரிவித்துக்கொள்கின்றேன். சும்மாக் கொடுக்கப் போவதில்லை. பின்னால் வசூலித்துக்கொள்ளப் போகிறார்கள். மைசூர் சர்க்காரில் எல்லோருக்கும்தான் உதவி அளிக்கப்படுகிறது. அதைப்போல் நம் சர்க்காரும் ஏழை மாணவர்களுக்கு வட்டியில்லாக் கடன் கொடுத்து, பிறகு அதைத் திரும்பப் பெற்றுக் கொள்ளக்கூடிய ஏற்பாட்டைச் செய்வதுதான் நல்லது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கின்றேன்.

**Sri V. K. RAMASWAMY MUDALIAR**: On a point of information, Sir கனம் அங்கத்தினர் திரு. வி. கே. கோதண்டராமன் களுக்கு இந்த உதவி அளிக்கப்படுவதை நாகள் வரவேற்கிறோம். அத்தனை பேர்களுக்கும் இந்த வட்டியில்லாக் கடனுதவி அளிக்க அவர்கள் பேசும்போது, டாகுமெண்டரி பில்மில் கம்யூனிஸ்டுக்

11th December 1961] [Sri V. K. Ramaswamy Mudaliar]

கட்சியின் சின்னத்தைக் காட்டவில்லையென்றும், மற்ற கட்சிச் சின்னங்கள் காட்டப்படுவதாகவும் சொன்னார்கள். எந்த இடத்தில் எப்பொழுது அவர் அப்படிப்பட்ட பிலிம் பார்த்தார்கள் என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கோயம்புத்தூரில் பார்த்தாரா என்று தெரிந்துக்கொள்ள விரும்புகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN: கோயம்புத்தூரில் சில தியேட்டர்களில் அப்படிப்பட்ட பிலிம் காட்டப்பட்டது. எல்லாத் தியேட்டர்களிலும் இல்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் அங்கத்தினர் அந்தப் படத்தைப் பார்த்தாரா என்று கேட்கின்றேன்.

SRI V. K. KOTHANDARAMAN: எங்கள் கட்சியைச் சார்ந்த கனம் அங்கத்தினர் திரு. மருதாசலம் பார்த்தார்கள். இன்னும் பலர் பார்த்தார்கள். (சிரிப்பு.)

DEPUTY SPEAKER: I fix the time limit of fifteen minutes for each hon. Member. Hon. Member Sri T. T. Daniel may now speak.

SRI T. T. DANIEL: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த வரவு செலவுத் திட்டத்தை வரவேற்று அரசினருடைய கவனத்திற்குச் சில முக்கியமான கருத்துக்களை கூறலாம் என்று நான் எண்ணுகிறேன். குறிப்பாக, கனம் நிதி அமைச்சர் அவர்களின் பேருரையில் மகிழ்ச்சியைத் தரக்கூடிய சில முக்கிய கருத்துக்கள் இருக்கின்றன. 65 வயதுக்கு மேற்பட்ட எல்லா வயோதிகர்களுக்கும் நமது தமிழ்நாட்டில் மாதமொன்றுக்கு இருபது ரூபாய் பென்ஷன் பணம் கொடுக்கப்படும் என்ற ஒரு அழகான திட்டம் அமைந்திருப்பதைப் பார்க்கும்போது அதை எல்லோரும் பாராட்டக் கூடிய நிலைமையில் இருக்கிறோம். குஷ்டரோகிகள், அங்கஹீனர்கள், கண்ணிழந்தவர்கள் இவர்களெல்லாம் 60 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருந்தால், மாதம் இருபது ரூபாய் பென்ஷன் கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நல்ல கருத்துக்களைக் கழிந்த சட்டசபைக் கூட்டங்களில் பல கனம் அங்கத்தினர்கள் அரசினருடைய கவனத்திற்குக் கொண்டுவந்தார்கள். அரசினரும், ஜனநாயக முறையில் இயங்கிக் கொண்டு வருகின்ற காரணத்தினால், சட்டசபை அங்கத்தினர்கள் கூறிய அந்தக் கருத்துக்களை ஏற்றுக் கொண்டு, இந்த ஆண்டிலே இந்த அழகான திட்டத்தை அமுல் நடத்த நிச்சயித்திருப்பதைப் பார்க்கும்போது நாம் யாவரும் இந்த அரசாங்கத்தைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

மேலும், ஏழை மாணவர்களுக்கு, குறிப்பாக பொறியியல் கல்லூரி, மருத்துவக் கல்லூரி, விவசாயக் கல்லூரி இவைகளில் படிக்கின்றவர்களுக்கு, வட்டியில்லாக் கடன் கொடுக்கக்கூடிய ஒரு

[Sri T. T. Daniel] [11th December 1961

திட்டத்தை அமுல் படுத்தப் போகிறார்கள் என்பதை அறியும் போது அரசாங்கம் ஏழைகள் மீது எவ்வளவு அக்கறையாக இருக்கிறது என்பதை நாம் பார்க்கின்றோம். இந்தவிதமான திட்டம் வேறு எந்த அரசாங்கத்தாலும் இதுவரையிலும் கொண்டுவரப்படவில்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. முதன் முதலாக, நமது தமிழ்நாடு அரசாங்கம் உயர்ந்த படிப்பு படிக்கிற மாணவர்களுககு வட்டியில்லாக் கடன் கொடுக்கும் அழகான திட்டத்தைத் தீட்டியிருப்பதைக் குறித்து நாம் பெருமைப்படுகிறோம். இந்தத் திட்டத்தை நல்ல முறையில் அமுல் நடத்துவார்கள் என்றும் நாம் நம்புகின்றோம்.

மேலும், ஆசிரியர்களுக்குப் புது வாழ்வு ஏற்படவேண்டும் என்பதை நன்றாக உணர்ந்து அவர்களுடைய கஷ்டங்களை நீக்குவதற்காக 'ட்ரஸ்ட் பண்டு' ஒன்று ஏற்படுத்துவதாகவும் திடீரென்று ஆசிரியர்களுடைய குடும்பங்கள் எதிர்பாராத கஷ்டங்களிலே அகப்பட்டுக்கொள்ளாமல் இந்த நிதியிலிருந்து அவர்களுக்கு நிதி உதவி கொடுக்கப்படும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. மேலும், இன்றிருக்கும் பென்ஷன் திட்டங்களை எடுத்துப் பார்த்தால், அரசாங்க ஊழியர்கள் திடீரென்று காலம் சென்றுவிட்டார்களானால், அவர்களுடைய குடும்பங்கள் பரிதாபமான நிலைமையில் இருக்கின்றன. அதை நினைத்து அந்தப் பென்ஷன் திட்டத்தையும் மாற்றி அவர்களுக்கும் பண உதவி செய்வதற்காக இந்தத் திட்டங்களைப் போட்டிருக்கிறார்கள்.

மேலும், பொறியியற் கல்லூரி ஒன்றைச் சேலத்தில் அமைக்கப் போவதாகவும், திருச்சிராப்பள்ளியில் ஒரு பொறியியற் கல்லூரி இந்த ஆண்டில் அமைக்கப்போவதாகவும் கூறப்பட்டிருக்கிறது. இதை நாங்கள் மிகவும் பாராட்டுகிறோம். இப்படிப்பட்ட கல்லூரிகள் எல்லா ஜில்லாக்களிலும் அமைக்கப்படவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவிலும் குறைந்தது ஒரு பொறியியற் கல்லூரியும், ஒரு மருத்துவக் கல்லூரியும் ஏற்படக்கூடிய அளவில் விரிவாகத் திட்டம் வகுத்து, அதற்காகப் பணம் ஒதுக்கவேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கின்றேன்.

தமிழ்நாட்டு அரசாங்கமானது ஒவ்வொரு ஆண்டும் நல்ல முறையில் வரவு-செலவுத் திட்டம் தீட்டி, அந்தந்த ஆண்டில் ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தை அந்தந்த ஆண்டில் நல்ல முறையில் செலவிட்ட காரணத்தால் இன்று பொருளாதார நிலையில் நாம் மிக மிக முன்னேறிக்கொண்டு வருகிறோம். பத்து ஆண்டுகளுக்கு முன்பு உணவுத் தான்யத்தில் மிகவும் பற்றாக்குறையாக இருந்த நமது தமிழ்நாடு இன்று உணவு தானிய உற்பத்தியில் முன்னணியில் இருக்கிறது. அது மட்டுமல்ல. 56 லட்சம் டன் உணவுத் தானியங்கள் உற்பத்தி செய்கிறோம். மேலும், நமக்குத் தேவையான உணவுத் தானியத்தை உபயோகித்துக்கொண்டு, உபரியாக நான்கு லட்சம் டன் அளவுக்கு இதர ராஜ்யங்களுக்குத் கிடைக்கும் அளவிலே உணவுத் தானிய உற்பத்தி உயர்ந்துகொண்டிருக்கிறது.

11th December 1961] [Sri T. T. Daniel]

பத்து வருஷங்களுக்கு முன்னதாக நமது ராஜ்யத்தில் சராசரிப் படிப்பின் நிலையைப் பார்த்தால், 19 சத விகிதத்தினர் தமிழ்நாட்டில் படித்தவர்களாக இருந்தார்கள். ஆனால், நல்ல முறையில் ஒவ்வொரு ஆண்டிலும் கல்விக்காகப் பணம் ஒதுக்கிப் புதிது புதிதாகப் பள்ளிகளும் கல்லூரிகளும் திறக்கப்பட்டிருக்கின்றன. 300 ஜனத்தொகைக்கு ஒரு பள்ளிக்கூடம் ஸ்தாபிக்கப்பட்டு உயர்ந்த நிலையில் கல்வி அபிவிருத்தி ஏற்பட்டிருக்கும் காரணத்தால், தமிழ்நாட்டில் 41 சத விகிதத்தினர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள்ளாக 70 சத விகிதத்தினர் படித்தவர்களாக இருக்கப்போகிறார்கள். இதையெல்லாம் கவனிக்கும்போது பொது மக்கள் மிகவும் மகிழ்ச்சியடைகிறார்கள்.

பொது மக்களுடைய ஆரோக்கிய நிலையை நாம் அதிகமாகக் கவனிக்கக் கூடிய நிலையில், மக்களுடைய சராசரி வயது கூடிக்கொண்டே போகிறது என்பதைப் பார்க்கிறோம். இன்று நாம் பொருளாதார நிலையில் முன்னேறிக்கொண்டு வருகிறோம் என்பதைத்தான் இது எடுத்துக் காட்டுகிறது. மற்ற வெளிநாட்டு ராஜ்யங்களோடு நம் நாட்டின் சராசரி நபருடைய ஆரோக்கிய நிலையை ஒப்பிட்டுப் பார்த்தால் நமது சராசரி நபருடைய ஆரோக்கிய நிலை மிக மோசமாக இருக்கிறபடியால் ஆண்டுதோறும் மக்கள் ஒவ்வொருவருடைய தேக நிலையையும் பரிசோதனை செய்வதற்குரிய வசதிகளை ஏற்படுத்தவேண்டும். ஒரு வேளை அதற்காக வசதிகள் இன்று நமது நாட்டிலே இல்லாமலிருந்தால், குறிப்பாக எல்லா மாணவர்களுக்கும் ஆண்டுதோறும் ஆரோக்கிய நிலையைப் பரிசோதிப்பதற்குத் திட்டங்கள் வகுத்து ஒவ்வொரு ஆண்டிலும் அவர்களுடைய ஆரோக்கிய நிலையைப் பரிசோதித்தால் தேக நிலை நன்றாக இருக்கும். எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் படிக்கும் மாணவர்களுக்கும் ஆண்டுதோறும் அவ்விதமான ஒரு பரிசோதனை செய்வதற்கு முடியாவிட்டாலுங்கூட, குறிப்பாக ஆரம்பப் பள்ளிகளில் படிக்கும் எல்லா மாணவர்களுடைய ஆரோக்கிய நிலையையும் ஆண்டுதோறும் பரிசீலனை செய்து, குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் 'ஹெல்த் கார்டு' கட்டாயமாக நாம் கொடுக்கவேண்டிய கடமை இருக்கிறது. ஏனென்றால் வருங்காலத்தில் குழந்தைகள்தான் முக்கியமான ஒரு நிலையில் வரவேண்டியிருக்கிறார்கள். அவர்கள்தான் நமது நாட்டின் வருங்காலப் பிரஜைகளாக இருக்கப் போகிறார்கள். ஆகவே, குழந்தைகளின் ஆரோக்கிய நிலையில் நாம் அதிகக் கவனம் செலுத்தி, அவ்விதமாக ஆண்டுதோறும் நாம் ஆரம்பப் பள்ளிகளில் படிக்கும் எல்லா மாணவர்களுக்கும் தேக நிலையைப் பரிசோதனை செய்யக்கூடிய ஒரு திட்டத்தை வகுக்கவேண்டுமென்று தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேலும், இன்று ஒரு பொருளாதாரக் கணக்குப் பட்டியல் தயாரிக்கவில்லை. ஒவ்வொரு பஞ்சாயத்திலும், ஒவ்வொரு முனிசிபாலிட்டி நிலையத்திலும் அந்த அந்தப் பிராந்திய பொதுமக்களுடைய உதவியைக்கொண்டு அங்கங்கேயுள்ள மக்களின் பொருளா

தாரப் பட்டியலைத் தயார் செய்வது மிகவும் அவசரமானதும், அவசியமானதும் ஆகும். அந்தப் பட்டியலில் மொத்தமுள்ள நபர்கள் எத்தனை, மொத்தம் எத்தனை பேர்கள் வீடு இல்லாமல் இருக்கிறார்கள், நிலம் இல்லாமல் இருக்கிறார்கள், எத்தனை பேர் படித்து ஜோலி இல்லாமல் இருக்கிறார்கள். கிருஷித் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் எத்தனை பேர் என்பன போன்ற புள்ளி விவரங்களை எடுத்துக் கொடுத்தார்கள் என்றால் மூன்று கோடி மக்களுக்கும் நாம் போடுகிற அபிவிருத்தித் திட்டங்களில் அதிகமான ஊக்கமும், உற்சாகமும் உண்டாகும். பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைச் சமாளிப்பது எப்படி என்று மூன்றுகோடி மக்களும் சிந்திக்க ஆரம்பிப்பார்கள். ஆகவே உடனடியாக இத்தகைய பொருளாதாரப் பட்டியல் ஒன்றை பஞ்சாயத்து வாரியாக, முனிஸிபாலிட்டி வாரியாகத் தயாரிப்பது இன்றியமையாதது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இன்று நம் நாட்டிலே ஜோலி இல்லாதவர்கள் திண்டாட்டம் மிக அதிகமாக இருக்கிறது என்பதை நாம் அறிந்திருக்கிறோம். இத்தனை லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்பட வசதியிருக்கிறது என்கிற கணக்கு விவரம் இருக்கிறதேயொழிய எத்தனை பேர்களுக்கு ஜில்லாவாரியாக ஜோலி கிடைத்திருக்கிறது, இன்னும் ஜோலி கிடைக்காமல் இருக்கிறவர்கள் எத்தனைபேர் என்கிற விவரம் இல்லை. ஆகவே ஜோலி இல்லாதவர்களுடைய விவரம் ஒவ்வொரு ஆண்டும் பஞ்சாயத்து வாரியாக எடுக்கப்படவேண்டும்.

மேலும் இன்று நம் நாட்டிலே மருத்துவப் பட்டம் பெற்றவர்கள் குறைவாக இருக்கிறார்கள். எம்.பி.பி.எஸ். படிப்பு ஏழு வருஷமாக இருக்கிறதை இன்னும் கொஞ்சம் குறுகிய காலத்தில் மூன்று வருஷமோ, நான்கு வருஷமோ படித்து ஒரு டிகிரியோ, டிப்ளமாவோ, சர்டிபிகேட்டோ பெற்று மருத்துவப் பணியாற்றுவதற்கு முன் வர ஏற்பாடு செய்தால் டாக்டர்கள் கிடைக்கவில்லையென்ற ஒரு குறைபாட்டை போக்க முடியும். அப்படி ஒரு டிப்ளமா, சர்ட்டிபிகேட் கோர்ஸை ஏற்படுத்துவதாக இருந்தால் கிராமங்களுக்கு எல்லாம் வைத்திய வசதி சீக்கிரத்தில் கிடைக்கும்படி செய்வதற்கு அனுகூலமாக இருக்கும். அதோடு இன்று மருத்துவக் கல்லூரிப் படிப்பைப் பெற்ற பிறகு டாக்டர்கள் ஒன்றிரண்டு வருஷங்கள் அரசாங்கப் பணியாற்றுகிறார்களே தவிர அப்புறம் தாங்களாகவே தனியாகப் பிராக்டீஸ் செய்ய ஆரம்பித்துவிடுகிறார்கள். காரணம் அரசாங்கத்தில் கொடுக்கிற சம்பளம் குறைவாக இருக்கிறது என்கிறார்கள். இப்பேர்ப்பட்ட நிலையை மாற்றுவதற்கு ஒருவர் மருத்துவக் கல்லூரிப் பட்டம் பெற்ற பிறகு கட்டாயமாக 2 வருஷ காலமாவது கிராமங்களில் மருத்துவப் பணி செய்ய வேண்டும் என்ற கட்டுப்பாட்டை ஏற்படுத்தினால் நலமாக இருக்கும். இதனால் கிராம மக்களுக்கு நன்மையாக இருக்கும் என்று நம்புகிறேன்.

11th December 1961] [Sri T. T. Daniel]

மேலும் இன்று நம் நாட்டில் உள்ள நிலைமை எல்லோருக்கும் தெரியும். தேச ஒற்றுமையைக் காப்பாற்றி, நாட்டில் அமைதியை ஏற்படுத்துவதற்கு பள்ளிக்கூடத்தில் படிக்கிற மாணவர்களுக்கே—நாஷனல் மிலிட்டரி ட்ரெயினிங் என்று யுத்தப் பயிற்சி கொடுத்தால் மிகவும் நலமாக இருக்கும். இப்படிப்பட்டதொரு பயிற்சி வருங்கால சந்ததிகளுக்குக் கொடுத்துக்கொண்டே இருந்தால் தான் உலகம் போகிற போக்கில் நம் நாட்டிற்கு எவ்வித ஆபத்தும் இன்றி நம்மை நாமே பாதுகாத்துக்கொள்ள வாய்ப்பு ஏற்படும். வருங்கால சந்ததிகளிடையே நம்முடைய நாட்டை நாம் பாதுகாத்துக் கொள்ளவேண்டுமென்ற உணர்ச்சி சின்னஞ்சிறு வயதில் இருந்தே ஏற்படுவதற்கு இத்தகைய ஒரு திட்டத்தைத் தயாரித்து, மத்திய சர்க்காருக்கும் அனுப்பி அனுமதிப் பெற்று நிறைவேற்றவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் குறிப்பாக எங்கள் மாவட்டத்தைப் பொறுத்தவரையில் சில விஷயங்களை எடுத்துச் சொல்வது என் கடமை என்று நினைக்கிறேன். ஐந்து வருஷங்களுக்கு முன்பு பலவிதமான கஷ்டங்களை அனுபவித்து தாய்த் தமிழகத்துடன் சேர்ந்தோம். எங்கள் மாவட்ட தாய்மார்களும், சகோதரிகளும், அண்ணன்களும், தம்பிகளும் "தாய் தமிழகத்துடன் சேரவேண்டும், சேர்ந்து பெரிய தலைவர்களாக வரவேண்டும்" என்றே தங்கள் குழந்தைகளைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுப் பாடினார்கள். தாய்த் தமிழகத்துடன் சேர்ந்து இங்கே வந்து உட்கார்ந்தபோது நாங்கள் முதன் முதலில் "ஒன்பது லட்சம் மக்களாகிய எங்களை நீங்கள் செல்லப் பிள்ளைகளாகப் பார்த்துக் கொள்ளவேண்டும்" என்றுதான் கேட்டோம். அதை அரசாங்கமும் கவனித்து நாங்கள் கேட்ட நன்மைகளை எல்லாம் செய்து வந்திருக்கிறார்கள். அதுவும் குமரி மாவட்டத்தில் கடந்த ஐந்து ஆண்டுகாலமாக பல அபிவிருத்தித் திட்டங்களைச் செய்திருக்கிறார்கள். அதற்காக ஒன்பது லட்சம் மக்கள் சார்பாக அரசாங்கத்திற்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்வது என் கடமை என்று சொல்ல விரும்புகிறேன். எங்கள் மாவட்டத்தில் போக்குவரத்து வசதிகளை அபிவிருத்தி செய்வதற்காக நூறு பஸ்களுக்கு மேல் புதிதாக விடப்பட்டு இருக்கின்றன. அதற்காக 50 லட்சம் செலவிடப்பட்டது. முன்பு இருந்ததைவிட பல கிராமத்து மக்கள் மின்சார வசதியைப் பெறத்தக்க வகையில் 52 லட்சம் ரூபாய் வரையிலே செலவிட்டிருக்கிறார்கள். அதே போல நடுத்தர பாசனத் திட்டத்திற்காக 22 லட்சம் ரூபாய் செலவிடப்பட்டிருக்கிறது. சிறிய நீர்ப்பாசனத் திட்டத்தின் கீழ் 260 குளங்களை ஆழப்படுத்துவதற்காக 43 லட்சம் ரூபாய் வரை செலவிட்டிருக்கிறார்கள். சிற்றார் பட்டணங்கால் திட்டம் அந்த மாவட்டத்தில் ஒரு பிரச்சனையாக இருந்தது. அதை நிறைவேற்றித் தர வேண்டுமென்று நாங்கள் எடுத்துச் சொன்னோம். அதன்பேரில் ஆரம்ப வேலைகளைச் செய்திருக்கிறார்கள். இந்தத் திட்டத்திற்காக 2.7 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இந்தத் திட்டத்தினால் அந்த மாவட்டத்திலுள்ள கிருஷிகர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும். எங்கள் மாவட்டத்தில் ரப்பர் பயிரிடுவதற்கு மிகுந்த வசதிகள் இருக்கின்றன என்று சொன்னோம். இதை

அரசினர் உணர்ந்து மூன்றுயிரம் ஏக்காவில் 43 லட்சம் ரூபாய் செலவில் ரப்பர் பயிரிட்டிருக்கிறுர்கள். இதைபோல 32 லட்சம் ரூபாய் செலவில் தீக்குச்சி மரம் 220 ஏக்கரா நிலத்தில் நட்டிருக்கிறுர்கள். இப்படி ஒவ்வொரு இலாகாவின் கீழும் எடுத்துப் பார்ப்போமேயானல் பல நன்மைகள் அந்த மாவட்டத்திற்குச் செய்யப்பட்டிருக்கின்றன. நாளுக்குநாள் அது அபிவிருத்தி அடைந்துகொண்டும் வருகிறது. படிப்பு வசதி, ஜோலி வசதி எல்லாம் பெருகியிருக்கின்றன. ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் 5 ஆயிரம் பேர்களுக்கு ஜோலி கிடைத்திருக்கிறது. ஒரு நேரப் படிப்பை 2 நேரம் ஆக மாற்றியமைக்கவேண்டுமென்று கூறினேம். அதையும் அரசாங்கம் ஏற்றுக்கொண்டு 2 நேரப் படிப்பாகச் செய்தார்கள். இதனுல் 1,200 ஆசிரியர்களுக்கு ஜோலி கிடைக்க வாய்ப்பு ஏற்பட்டது. மேலும் மற்ற தொழில் கல்லூரிகளிலும் எங்கள் மாவட்ட மாணவர்களுக்கு படிக்க வசதி அளிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக எல்லாம் பாராட்டுகிறேம். இருந்த போதிலும் கடைசியாக திரு-கொச்சி இணைப்பின் காரணமாக இங்கே வந்துள்ள அரசாங்க சிப்பந்திகளின் நிலைமைதான் அப்படியே இருக்கிறது. அதையும் கவனித்து சாதகமாக விரிவாக அந்தப் பிரச்சனையைத் தீர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பல இலாக்காக்களில் சர்விஸ் இணைப்பு காரணமாக இன்னும் சரியான முடிவு எடுக்கப்படவில்லை. அவர்களுக்கு ஏற்பட வேண்டிய உத்யோக உயர்வு கவனிக்கப்படவில்லை. இதனுல் அவர்கள் மனதில் ஏற்பட்டிருக்கிற வருத்தத்தைப்போக்க சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும். அங்குள்ள ஆசிரியர்கள் பிரச்சனை பெரும் தலைவேதனையாக இருக்கிறது. இங்கு கொடுக்கப்பட்ட சம்பள உயர்வு அங்கு கொடுக்கப்படவில்லை. இன்னும் பென்ஷன் திட்டம், பிராவிடெண்டு பண்டு திட்டம் நீட்டப்படவில்லை. இதனுல் பல்லாயிரக்கணக்கான ஆசிரியர்கள் மனவேதனையோடு இருக்கிறுர்கள். அதையும் கவனிக்கவேண்டும் . .

**DEPUTY SPEAKER :** The hon. Member's time is up. The hon. Member, Sri Matha Gowder will now speak.

**Sri J. MATHA GOWDER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஆண்டு நிதியமைச்சர் அவர்கள் சமர்பித்திருக்கும் இந்த நிதிநிலை அறிக்கை மீது ஒரு சில கருத்துக்களை நான் சொல்ல ஆசைப்படுகிறேன். கடந்த ஐந்தாண்டு காலமாக இந்த நிதிநிலை அறிக்கையைச் சேர்த்து ஆறு அறிக்கைகள் இந்த மன்றத்தில் அமைச்சர் அவர்கள் சமர்பித்திருக்கிறுர்கள். ஒவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு புரட்சிகரமான திட்டங்களைத் தீட்டி மக்கள் அதிவேகமாக முன்னேறுவதற்கு என்னென்ன சாதனைகளை செய்ய முடியுமோ அத்தனையும் செய்திருக்கிறுர்கள் என்பதற்காக அவர்களை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது. இப்பொழுது 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை இடைக்கால மான்யக் கோரிக்கையாக சமர்ப்பித்திருக்கிறுர்கள். வரும் பொதுத் தேர்தல் முடிந்த பிறகு, சர்க்கார் அமைத்த பிறகு வரவு-செலவுத் திட்டத்தை இம்மன்றத்திலே மறுபடியும் சமர்ப்பிக்கப்போகிறுர்கள். நமது மதிப்பிற்குரிய

11th December 1961] [Sri J. Matha Gowder]

நிதியமைச்சர் அவர்கள் அடுத்த நிதிநிலை அறிக்கையை இங்கு சமர்ப்பிப்பதற்குப் பதிலாக மத்திய அரசின் நிதிநிலை அறிக்கையை சமர்ப்பிப்பார் என்று நான் நினைக்கிறேன். பார்லிமென்ட்டிற்கு அவர்கள் செல்லுகிறார்கள் என்று பார்க்கும்போது ஒரு புறம் ஆனந்தமாயிருந்தாலும் மறுபுறத்தில் அவர்கள் இங்கு வராது நல்லதொரு நிதிநிலை அறிக்கையை சமர்பித்து எங்களைப் போன்றவர்களுக்கு ஒரு ஆர்வம் கொடுப்பதற்கு நிதியமைச்சர் அவர்கள் இங்கு இல்லையே என்பதைப் பார்த்து வருத்தமும் ஏற்படுகிறது. தேர்தல் முடிந்து நாம் எல்லோரும், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் இங்கு நிச்சயமாக திரும்ப வரப் போகிறோம். அதுபற்றி எந்தவிதமான சந்தேகமும் கிடையாது. அப்பொழுது நிதியமைச்சர் அவர்களும் இங்கு இருந்தால் மிக மிக நன்றாக இருந்திருக்கும். நிதியமைச்சர் அவர்களின் திட்டத்தைப் பார்த்து இதற்கு முன் பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர் மிகவும் சங்கடப்பட்டுக் கொண்டார்கள். ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு புரட்சிகரமான நிதிநிலை அறிக்கையை சமர்ப்பித்து மக்களின் செல்வாக்கையெல்லாம் காங்கிரஸ் கட்சி பெற்றுக் கொள்கிறதே, நாங்கள் என்ன செய்வோம் என்று ஓலமிடக் கூடிய அளவில் அவர்கள் இன்றைக்கு இருக்கிறார்கள். குறிப்பாக இந்த ஆண்டு, தேர்தல் நெருங்கக் கூடிய சமயத்தில் இந்த அறிக்கையில் மிக மிக முக்கியமான ஒரு மாறுதலை நிதியமைச்சர் அவர்கள் செய்து விட்டார்கள். அதைப் பார்த்து அவர்கள் பதறுவது இயற்கை. 65 வயதிற்கு மேற்பட்ட முதியவர்களுக்கு மாதம் 20 ரூபாய் நாங்கள் ஊதியம் கொடுக்கிறோம் என்று இந்த அறிக்கையில் இருப்பதைக் கண்டு அவர்கள் பயந்து போய் விட்டார்கள். ஆறு மாதங்களுக்கு முன்பு நமது மதிப்பிற்குரிய முதன்மந்திரி ஸ்ரீ காமராஜ் அவர்கள் ஒருயிடத்தில் ஒரு பொது மேடையில் பேசியிருக்கிறார்கள். அங்கு ஒரு மூதாட்டி அம்மையார் அவர்கள், "அப்பா, எங்களுக்கு எப்பொழுது பணம் கொடுக்கிறாய்" என்று காமராஜ் அவர்களைக் கேட்டாராம். அதற்கு அவர் பார்ப்போம் என்று தான் சொன்னார்கள். பார்ப்போம் என்று சொன்ன அந்த மந்திர வாசகம் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்று பார்க்கிறோம். ஆறு மாதங்களுக்கு முன்பு பார்ப்போம் என்று சொன்னது, சொல்லில் மட்டும் சொல்லவில்லை, அதைச் செயலிலும் காட்டி, ஆறு மாதங்களுக்குள்ளாக உங்களுக்கு மாதம் ஒன்றுக்கு 20 ரூபாய் உதவித் தொகை கொடுத்து உங்களையும் நாங்கள் காப்பாற்றுகிறோம் என்ற முறையில் அவர்கள் இதைச் சாதித்திருக்கிறார்கள். கர்ம வீரர் காமராஜ் அவர்கள் ஆட்சியில் யாருக்கும் எந்தக் குறையும் ஏற்படாது என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டாக இருக்கிறது என்பதை எதிர்கட்சியினரும் புரிந்து கொண்டிருக்கிறார்கள். அப்படி புரிந்து கொண்டாலும் தேர்தல் வருகிறதே என்ன செய்ய என்று நினைக்கிறார்கள். இந்த முதியவர்கள் வோட்டுக்கள் எதிர்க்கட்சிக்கு கிடைக்குமா என்றால் ஒரு வோட்டு கூட கிடைக்காது, எப்படி கிடைக்கும்? அதைக் கண்டு அவர்கள் பயப்படுகிறார்கள். ஐயையோ, இந்த 20 ரூபாய் போதுமா? என்று ஒரு யானையைப் போட்டு ஒரு தட்டில் நிதியமைச்சர் அவர்

கள் ஏதோ கொண்டு போவதுமாதிரி அதை யானை சாப்பிடுவது மாதிரி பத்திரிகைகளில் படம் போட்டிருக்கிறார்கள். ஏதோ சிறிது கொடுக்கிறோம், என்றால், சட்டமன்றத்தில் எதிர்க்கட்சியினர் முதியவர்களுக்கு ஏதாவது கொடுக்கவேண்டுமென்ற யோசனையைச் சொன்னார்களா? அப்படி சொன்னதுண்டா? பெரியார் சொன்னார் என்றால் அவர் காங்கிரஸ் கட்சியை ஆதரிப்பவர் என்று இப்பொழுது நீங்கள் சொல்வீர்கள். எதிர்க்கட்சியினர் யாராவது அப்படி இந்த மன்றத்தில் சொல்லியிருக்கிறார்களா? கடந்த ஐந்து வருடமல்ல 50 வருடத்தில் அப்படி யாரும் சொல்லவில்லை. ஆனால் ஸ்ரீ காமராஜ் அவர்கள்தான் முதியவர்களுக்கு உதவி கொடுக்கவேண்டுமென்ற திட்டத்தை முதன் முதலாக ஆரம்பித்திருக்கிறார்கள். எதிர்க்கட்சியிலுள்ள கோதண்டராமன் அவர்கள் பிச்சைக்காரர்களுக்கும் கொடுக்கவேண்டுமென்று பரிந்து பேசினார்கள். வீட்டிலுள்ள முதியவர்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஓட்டு தரமாட்டார்கள், ஆகவே பிச்சைக்காரர்களாவது ஓட்டு போடுவார்களா என்ற நிலை அவர்களுக்கு வந்துவிட்டது. பிச்சைக்காரர்கள் சார்பில் பேசினால் அவர்கள் ஓட்டாவது கிடைக்காதா என்ற நிலையில் பேசினார்கள். அதைப் பார்க்கும்போது, கம்யூனிஸ்ட் கட்சியைப் பார்த்து பரிதாபப்படும் நிலைதான் இருக்கிறது. பிச்சை எடுப்பதை தொழிலாகக் கொள்வதற்கு நாம் ஊக்கம் கொடுக்கவேண்டுமா என்பதுபற்றி இம்மன்றத்திலுள்ள அங்கத்தினர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். நாட்டிலே பிச்சை எடுப்பதை தடை செய்ய வேண்டுமென்று நாம் நினைத்துக் கொண்டிருக்கும்போது 20 ரூபாயும் கொடுத்து மேலும் பிச்சை எடுத்துக் கொண்டிருக்க ஊக்கம் கொடுத்தால் அது எவ்வளவு அபாயகரமானது என்று சிந்திக்கவேண்டும். பின்னர், அங்கஹீனமானவர்கள் எல்லோருக்கும் ஏன் கொடுக்கவில்லையென்றால் பணக்காரர்கள் குழந்தைகள் அங்கஹீனமானவர்களாயிருந்தால் அவர்கள் இந்த காசைக் கேட்கிறார்களா? பணக்காரர்களை ஒழிக்கவேண்டும். ஒழிக்க வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி சொல்லிக் கொண்டிருக்கும்போது பணக்காரர்களுக்கும், அவர்களில் அங்கஹீனமானவர்களுக்கும் ஏன் கொடுக்கவில்லை என்று கேட்கிறார்கள். ஆக ஒன்றுக்கு ஒன்று முரணாக பேசிக் கொண்டு இருக்கிறார்கள். நிதிநிலை அறிக்கையை படித்து நாட்டுக்கு நன்மை பயக்கும் எதை சொல்வது என்று சிந்திப்பதில்லை. தற்போதைய நிலையைக் கண்டு எதிர்கட்சிக்காரர்கள் பயப்படும் நிலை வந்துவிட்டது. தேர்தல் நெருங்கும்போது அவர்களுக்கு பீதி ஏற்படுவது சகஜம்தான். 1957-வது ஆண்டிலே அவர்களில் எத்தனை பேர்கள் இந்த மன்றத்திற்கு வந்தார்களோ அதில் பாதியாவது வரும் தேர்தலுக்கு பிறகு வருவதற்கு வாய்ப்பிருக்கிறதா என்று பார்த்தால்—இந்த நிதிநிலை அறிக்கையை நன்றாக அமைத்து விட்டால் எப்படி அவர்கள் வரமுடியும்? நான் ஒன்று கூற விரும்புகிறேன். அடுத்த சட்டமன்றம் கூடும்போது இங்கு எதிர்கட்சியே இருக்குமோ இல்லாமல் போகுமோ, சர்க்காரே ஒரு எதிர்கட்சியை உண்டு பண்ண வேண்டிய நிலை ஏற்படுமோ என்று தோன்றுகிறது. (இன்டரப்ஷன்) மாதா கௌடர் வரமாட்டார், அவர் இந்தக்

11th December 1961] [Sri J. Matha Gowder]

கட்சியிலேயே இருப்பார், எதிர்கட்சியில் வந்து அமரக் கூடியவர் அல்ல. புதுத் திட்டங்கள் சேர்க்கவில்லையென்றால், ஐந்தாண்டு களில் நாம் சேர்ந்திருக்கும் திட்டங்கள் இல்லாது இவ்வாண்டு அறிக்கையில் 100 புதுத் திட்டங்கள் சேர்த்திருக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் காண்பித்து எந்தத் திட்டம் வேண்டுமென்று கேட்டால் அவர்களால் சொல்ல முடியவில்லை. ஏதோ குறை சொல்ல வேண்டுமென்ற நிலையில் பேசுவது சரி யல்ல. இந்த 1962-63-ம் ஆண்டு அறிக்கையின்படி நமக்கு 6 கோடி சொச்சம் துண்டு விழுகிறது. அதற்கு புது வரிகள் விதிக்கவில்லை. அப்படி விதித்தால் வோட்டு கிடைக்காது எடுத்துச் சொன்னார். இந்த ஐந்தாண்டுகளாக நிதியமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த நிதிநிலை அறிக்கைகளில ஒவ்வொன்றின் போதும் நமக்கு எவ்வளவு துண்டு விழும், அத்துண்டை மத்திய வரியிலிருந்து சரிக்கட்டிக் கொள்ள முடியுமென்று நம்பிக்கையை தெரிவித்திருந்தார்கள். அது எந்நேரத்திலும் வீண் போகவில்லை. சரிக்கட்டிக் கொள்ளப்பட்டு சர்ப்ளஸ்-ஆகவும் வந்திருக்கிறது. அதேபோன்று இந்தத் துண்டையும் கூட அடுத்த ஆண்டு சரிக்கட் டிக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கையிருக்கிறது. சம்பளக் கமி ஷன் சிபார்சுபடி 5 கோடி ரூபாய் அதிகரித்திருப்பதை பார்க்க வேண்டும். அதையும் சேர்த்திருக்கிறார்கள். பின்னர், கல்வித் துறையானாலும் சரி, மருத்துவத் துறையானாலும் சரி, சமுதாய வளர்ச்சித் துறையானாலும் சரி, எல்லாவற்றிலும் லட்சக்கணக்கில் அதிகரித்திருக்கிறோம். அது நம் நாட்டில் அதிக அபிவிருத்தி ஏற்பட்டிருப்பதை எடுத்துக்காட்டுகிறது. ஆகவே துண்டு விழு வது என்பது ஒரு பெரிய காரியமல்ல. பின்னர், திருச்சியிலும் சேலத்திலும் பொறியியற் கல்லூரிகள் நிறுவப் போகிறார்கள். அதற்கு மத்திய அரசினர் அனுமதி கொடுத்திருக்கிறார்கள். இன்று காலையில் கூட பொறியியற் கல்லூரியில் எவ்வளவு பேர்கள் சேர்க் கப்பட்டிருக்கிறார்கள் என்று கேட்கப்பட்டது. ஆக, இரண்டு கல்லூரிகள் ஏற்படுவதின் மூலம் அதிகப்படி மாணவர்களுக்கு இக் கல்வி புகட்ட முடியும். பின்னர், ஒவ்வொரு மாவட்டத்திலும் மாவட்ட வாரியாக பாலிடெக்னிக் ஏற்படுத்துவதாக சென்ற வரவு செலவுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒவ்வொரு பாலிடெக்னிக் ஏற்படுத்துவதற்கு வேண்டியதைச் செய்யவேண்டுமென்று இச்சந்தர்ப்பத்தில் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக சைனிக் பள்ளி. குழந்தைகள் பள்ளிகளில் சைனிக் பள்ளி ஆரம்பிப்பதாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் வரவேற்கத் தக்கது. இதன் மூலம் நல்ல ஒழுக்கத்தைச் சொல்லிக்கொடுக்கும் நிலையில் நல்ல மாணவர்களைத் தயாரித்து விட முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. இந்த மாதிரியான நல்ல காரியங்களை வருஷந்தோரும் செய்திருப்பதைப் பற்றி மிக வும் சந்தோஷமடைகின்றேன்.

அடுத்தபடியாக இன்றைக்கு நில அடமான பாங்குகளைப் பொறுத்த வரையில் ஜில்லா அளவில் ஒரு பாங்க் என்று இருந் ததை பிர்க்காவாரியாகப் பிரித்து சிறு சிறு யூனிட்டாக ஏற்படுத்து

கிறேம் என்று சென்ற கூட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதை உடனடியாகச் செய்வதில் தாமதம் ஏதும் ஏற்படக் கூடாது. மாவட்ட ரீதியாக இருக்கும்போது மக்களுக்கு அதிக நன்மை பெற முடியாத நிலைமை இருக்கிறது. இதை உடனடியாக பிர்க்கா வாரியாக ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நில அடமான பாங்குகள் ஏற்படுத்தி ரூரல் பார்ட்ஸுக்கு நன்மை செய்வது போல அர்பன் பார்ட்ஸில் பெரிய பெரிய வீடுகள் இருக்கின்றன, நிலங்கள் இல்லாவிட்டாலும், அத்தகைய வீடுகளை அடமானம் வைத்து கடன் பெற்று நல்ல விதமாகப் பயனடையும் நிலையில் விட்டு அடமான பாங்குகள் ஒவ்வொரு நகரப் புறத்திலும் ஏற்படுத்த ஆவன செய்யவேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

குறிப்பாக ரோடுகள் பொறுத்த வரையில் நாம் சற்று சிந்திக்க வேண்டும். முன்பு ஜில்லா போர்டு இருந்த காலத்தில் ரோடுகளுக்காக ஜில்லா போர்டுக்கு தனியாக மான்யம் சர்க்கார் மூலமாகக் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது ஜில்லா போர்டு போய்விட்டதன் காரணமாக இந்த ரோடுகள் பஞ்சாயத்து யூனியனோடு சேர்ந்து வருஷந்தோறும் இத்தனை மைல் ஹைவேஸ் மூலமாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்று வரையறுத்திருக்கிறார்கள். இப்படி படிப்படியாக எடுப்பதற்குள்ளாக, இடைக்காலத்தில் இந்த ரோடுகளைப் பராமரிப்பது யார் என்பது பற்றி பல சிக்கல்கள் எழுந்துகொண்டிருக்கின்றன. கிராம ரோடுகளை பஞ்சாயத்து ரோடுகள் என்று சொல்லுகிறார்கள். இணைப்பு ரோடுகளை பஞ்சாயத்து யூனியன் ரோடுகள் என்று எடுத்துக்கொள்ளுகிறார்கள். பெரிய ரோடுகள்—பஸ் போக்குவரத்து ரோடுகள்—மாவட்ட போர்டினால் நிர்வகிக்கப்பட்டு வந்த ரோடுகள் செப்பனிடக் கூட முடியாத நிலைமை இருக்கின்றது என்று அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக எனது மாவட்டமான நீலகிரியை எடுத்துக்கொண்டால் ரோடுகளை அடிக்கடி செப்பனிடவில்லையென்றால் மழை பெய்து விட்டால் ரோடே இருக்கும் நிலை தெரியாமல் மோசமாகப் போய்விடும் என்று நான் பல தடவைகள் இந்த மன்றத்திலே எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஆகையால் ஜில்லா போர்டு ரோடுகளை சர்க்கார் எடுத்துக்கொள்ளும் வரையில் செப்பனிடுவதற்கு என்ன செய்யவேண்டுமென்று சிந்திக்கவேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சென்ற கூட்டத்தில் நான் நிதி அமைச்சர் அவர்களிடத்தில் ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தேன். இப்போது நீலகிரிக்கும் ப்ளெயின்ஸுக்கும் பர் காபிடா முறைப்படி பணம் ஒதுக்கிக்கொண்டிருக்கிறார்கள். மலைப் பிரதேசத்திற்கும் இதே பர் காபிடா முறைப்படி கொடுத்தால் எப்படி புதிய ரோடுகள் போடுவது என்று எடுத்துக் கூறினேன். இதற்கு அமைச்சர் அவர்களும் பதில் கொடுத்திருக்கிறார்கள். நீலகிரி மற்றும் எல்லா மலைப் பிரதேசங்களைப் பொறுத்த வரையில் இந்த பர் காபிடா முறையை மாற்றி அமைக்கிறேன் என்று சொன்னார். அது சம்பந்தமாக

11th December 1961] [Sri J. Matha Gowder]

இது வரையில் உத்திரவு வரவில்லை என்று அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறும் தருவாயிலாவது பங்கீட்டு முறையை மாற்றி மலைப் பிரதேசங்களுக்கு அதிகமாகக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நீலகிரி ஜில்லாவில் சம்பளக் கமிஷன் சிபாரிசுகளின்படி தனியார்கள் நடத்தும் பள்ளி ஆசிரியர்களுக்குச் சம்பளம் போய்ச் சேரவில்லை. இதையும் சர்க்கார் உடனடியாக கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனது வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்—வணக்கம்.

SRI A. GOVINDASAMY: சட்ட மன்ற உதவி சபாநாயகர் அவர்களே, நமது நிதி அமைச்சர் அவர்கள் 1962-63- ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் படிக்கிற நேரத்தில் எதிர் கட்சிகளெல்லாம் கடந்த ஐந்து ஆண்டு காலமாக ஒத்துழைப்பை நல், ஐந்தாண்டுத் திட்டங்கள் செவ்வனே நடைபெறுவதற்கு ஆர்வத்தோடு பாடுபட்டிருக்கிருர்கள் என்ற நல்ல கருத்தை ஒத்துக்கொண்டு பேசியதற்காக நிதி அமைச்சர் அவர்களை நான் பாராட்டுகிறேன். என்னைப் பொறுத்த வரையிலும் 10 ஆண்டு காலமாக அவர்களோடு சேர்ந்து பணியாற்றுகிற நேரத்தில், திட்டத்திலே இருக்கிற குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுகிற நேரத்தில் அவர்களுக்கு வழக்கமாக இருக்கிற கோபம் பொத்துக்கொண்டு வந்தாலும், அந்தக் கோபத்தை உடனே தணிக்கின்ற முறையில் நாங்கள் அவர்களை நல்வழிப் படுத்தி அழைத்து வந்திருக்கிருேம். ஆகவே—அவர்கள் பாராளுமன்றத்திற்கு இப்போது நிற்கப் போகிருர்கள், அவர்கள் ஒரு வேளை வெற்றி பெற்று நல்ல இடத்தில் அமருவாரானல்—அவர்கள் அந்த கோபத்தை மட்டும் கொஞ்சம் அடக்கிக்கொண்டு, திறமையைக் காட்டி, அங்குள்ளவர்களுடைய பாராட்டைப் பெறும் வகையில் வரவேண்டுமென்று இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவர்களுக்கு வயதின் காரணமாக—இளமையின் காரணமாக—வருகிற கோபத்தை மாற்றிக்கொள்ள வேண்டுமென்ற எனது வேண்டுகோளை விடுத்துக்கொள்கிறேன்.

எதிர் கட்சிக்காரர்கள் ஒத்துழைப்பதில்லை—திட்டங்களுக்கு இடையூறுகளாக இருக்கிருர்கள்—என்று ஆளும் கட்சியைச் சேர்ந்த அமைச்சர்களும், அவர்களைச் சார்ந்திருக்கின்ற கட்சி உறுப்பினர்களும் இதே மன்றத்திலேயும் மற்றும் பொதுக் கூட்டங்களிலேயும் குற்றங்கள் கண்டாலும் அமைச்சர் அவர்கள் இந்த முறையில் ஒப்புக்கொண்டது உண்மையிலேயே அவர்களுடைய பெருந்தன்மையைக் காட்டுகிறது. அதிலும் அவர்கள் இந்த ஆண்டு ஒரு அற்புதமான திட்டத்தை வழங்கியிருக்கிருர்கள். கிழவர்கள்—வயதானவர்கள் ஓட்டெல்லாம் காங்கிரஸ் கட்சிக்குக் கிடைக்கும் என்று தப்புக் கணக்கு போட்டுக்கொண்டு ஒரு அங்கத்தினர் இந்த மன்றத்தில் பேசினுர்கள். அவர் இந்த மாதிரி லாபியில் பேசினுரென்ருல் நான் வருத்தப்பட்டிருக்கமாட்டேன். இந்த மன்றத்திலேயே பேசினுர். ஆனல், இந்த வயதானவர்

[Sri A. Govindasamy] [11th December 1961

களுக்குக் கொடுப்பதற்காக எவ்வளவு லட்சம் ஒதுக்கியிருக்கிறார்கள்? இரண்டு லட்சம் ஒதுக்கியிருக்கிறார்கள். எத்தனை ஆயிரம் பேர்களுக்குக் கொடுக்க முடியும்? 10,000 பேர்களுக்கு வேண்டுமானால் கொடுக்கலாம். தமிழ் நாட்டிலே ஒரு தொகுதியிலே எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்று பார்த்தால் 300 அல்லது 400 பேர்கள்தான் இருக்கலாம். இப்படி அவர்களுடைய ஓட்டுகளைப் பெற்று வெற்றி பெறலாம் என்று நினைப்பதைப் பார்த்தால் அது வேடிக்கையாகத்தான் இருக்கிறது. அமைச்சர் அவர்களுடைய வாதத்தைப் பார்க்கும்போது 65 வயதான அனாதைகளுக்கு இந்தத் திட்டம் அமுலாகும் என்று சொல்லுகிறார்கள். ஆங்கிலத்தில் இருக்கும் உரைக்கும் தமிழில் இருக்கும் உரைக்கும் வித்தியாசம் இருக்கிறது. எல்லா அனாதைகளுக்கும் என்று ஆங்கிலத்தில் இருக்கிறது. அனாதைகள் என்றால் யார் அனாதைகளாகக் கருதப்படுவார்கள்? காப்பாற்றுகிறவர்கள் இல்லையென்றால் அவர்கள் அனாதைகளாகிறார்கள். அப்போதுதான் அவர்கள் பிச்சைக்காரர்களாக மாறுகிறார்கள். இந்தத் திட்டத்தின் அடிப்படையில் பிச்சைக்காரர்கள் வர மாட்டார்கள் என்று சொல்லுகிறார்கள். பரம்பரை பிச்சைக்காரர்கள் என்று யாரும் கிடையாது. பிச்சைக்காரன் மகன் பிச்சைக்காரனாக இருக்கிறான் என்று சொல்ல முடியாது. வறுமை வரும் போது, நல்ல நிலையில் இருந்தவர்கள் கூட ஒரு மாவட்டத்திலிருந்து வேறு மாவட்டத்திற்குச் சென்று அல்லது அதே மாவட்டத்தில் பிச்சை எடுத்து ஜீவிக்கிறார்கள். உயர்ந்த சமூகத்தில் உள்ளவர்களும் அப்படிப்பட்ட நிலையில் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட பிச்சைக்காரர்களுக்கு இடம் இல்லை என்று சொல்லுகிறார்கள். பிச்சைக்காரர்களில்தான் தொழு நோய்க்காரர்கள், கண், கை, கால் இழந்தவர்கள் இருந்து ஆண்டவன் சந்நிதானத்தில் வந்து உட்கார்ந்து பிச்சை எடுக்கிறார்கள். தனியாக மட்டுமல்லாமல் குடும்பம் குடும்பமாகப் போய் பிச்சை எடுக்கும் நிலைமையையும் பார்க்கிறோம்.

இன்றையத் தினம் பிச்சைக்காரர்களுடைய ஓட்டை நம்பித் தான் காங்கிரஸ் கட்சி இருப்பதுபோல் பொருள்பட ஒரு அங்கத்தினர் அவர்கள் பேசினார்கள். அப்படி இருந்தாலும் அவர்கள் காங்கிரசுக்கு தங்கள் ஓட்டை அளிக்க மாட்டார்கள். இன்றையத் தினம் பிச்சைக்காரர்கள் மகாநாடு நடத்த வேண்டுமென்று சொன்னால், அதற்கு அனுமதி கொடுக்க அமைச்சர் அவர்கள் வேண்டுமானால் தயாராகக்கூட இருக்கலாம். எதிர்க்கட்சிக்காரர்கள் யாரும் இருக்க முடியாது. 65 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு 20 ரூபாய் கொடுக்கலாம் என்று சொல்லிவிட்டு, பிறகு 60 வயது என்று ஒரு கணக்குப் போட்டிருக்கிறார்கள். இது நமக்கு எந்த வகையில் போடப்பட்டிருக்கிறது என்று ஒன்றும் புரியவில்லை. நண்பர் ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் ஏழ்மையான அங்கஹீனர்களுக்குத் தான் நிதி வழங்க வேண்டுமென்று சொல்வாரே தவிர, பணக்கார குடும்பத்திலே உள்ள குருடு, செவிடு, ஊமைப் போன்றவர்களுக்கு நிதி வழங்க வேண்டுமென்று சொல்லவில்லை. சொல்ல

11th December 1961] [Sri A. Govindasamy]

வும் மாட்டார்கள். வருகின்ற தேர்தலிலே எதிர்க்கட்சிக்காரர்களுக்கு இடமில்லை; ஆளும் கட்சிக்குத் தான் எல்லா இடமும் என்னும் பொருள்பட ஒரு அங்கத்தினர் தெரிவித்தார்கள். அவர்கள் மனதிலே எதிர்க்கட்சியே வரக்கூடாது என்ற எண்ணம் போலும். அதற்குத் துணைபுரிகின்ற வகையிலே தான் போலீஸ் இலாகாவும் துணை புரிந்து வருகின்றது என்பதற்கு ஒரு எடுத்துக் காட்டுச் சொல்ல விரும்புகின்றேன். போலீஸ் இலாகாவை நிர்வகித்து வரக்கூடிய நமது மதிப்பிற்குரிய ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் செங்கற்பட்டு மாவட்டத்தை சேர்ந்தவர். அவர்கள் மாவட்டத்திலே ஆளும் கட்சிக்குச் சாதகமாக மாற்றுக் கட்சியினர் கேவலமாக நடத்தப்படுகிறார்கள். அவர்கள் மாவட்டத்திலே மதுராந்தகம் தாலுகாவிலே, அச்சரப்பாக்கம் என்ற ஊரிலே உள்ள ஸ்ரீ ஓ. எம். துரைபாபு என்பவர் சென்ற தேர்தலிலே 24,000 ஓட்டுகள் வாங்கியவர். அவர் இப்போது கேடி லிஸ்டில் சேர்க்கப்பட்டிருக்கிறார். போலீஸ்காரர்கள் அவரிடம் அடிக்கடி சென்று தொந்திரவு கொடுத்து வருகிறார்கள். அதேபோல் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் இன்றையத் தினம் அங்குள்ள பஞ்சாயத்துப் போர்டின் தலைவராக இருக்கின்ற ஒரே காரணத்திற்காக இரவு நேரத்தில் சென்று அவரைப் போலீஸ் தேடுகிறது. இவர்கள் எல்லாம் தேர்தலிலே ஈடுபடுவதைத் தவிர்ப்பதற்காகத் தான் இந்த வழிகள் எல்லாம் கடைப்பிடிக்கின்றன. இம்மாதிரித் தவறுகளை நாங்கள் சொல்வது எதற்கு என்று சொன்னால், ஆளும் கட்சியினர் எதிர்க் கட்சிகளை மேலும் மறைமுகமாக இப்படியெல்லாம் செய்யவேண்டாம், இம்மாதிரியெல்லாம் தப்புக் கணக்குப் போடவேண்டாம் என்பதை இந்த நேரத்திலே சுட்டிக் காட்டுவதற்காகத்தான்.

இந்த நோத்திலே அமைச்சர் அவர்கள் போகிற போக்கிலே வரியே கிடையாது என்ற உத்திரவாதமும் சொல்லவில்லை. அப்போது துண்டு விழுவதை எப்படிச் சரிக் கட்டுவார்கள்? புதிய துண்டு விழும் பட்ஜெட்டை போட்டிருக்கிறார். அதே சமயத்திலே மந்திரிசபை கொள்கை வகுப்பதிலே துண்டு விழுவதை சரிக்கட்டும், எங்களுக்கு எவ்வித அதிகாரமும் இல்லை என்று சொல்லலாம். வருகின்ற மந்திரி சபை எப்படியாவது செய்து கொள்ளட்டும் என்கிற முறையிலே, மேலும் வரிகள் கிடையாது என்று பொதுமக்கள் முன்னாலே உத்திரவாதம் அளிக்கவில்லை. இந்த அடிப்படையிலே தப்பித்துக் கொள்வதற்கு வழிவகுத்து விட்டு, துண்டு பட்ஜெட்டாக இருந்தாலும், போகிற போக்கிலேயும்கூட 100 புதிய திட்டங்களைச் செய்திருக்கிறோம் என்று சொல்லிக் கொள்கிறார்கள். அப்படி என்ன திட்டங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன என்று பார்க்கும்போது, தென் ஆற்காடு ஜில்லாவிலே சிதம்பரத்திலே 51-சாக ஒரு திட்டத்தை சேர்த்திருக்கிறார்கள். இணைப்புத் திட்டத்திலே வேண்டுமானால் சில திட்டங்கள் இருக்கலாம். தனிப்பட்ட முறையில் இந்த ஒரே ஒரு திட்டம் தான் இருக்கிறது என்பதை நான் நன்கு படித்துச் சொல்கிறேன். குறைந்த சம்பளம் பெறும் ஊழியர்களுக்காக மத்திய சர்க்கார் தந்துவந்த 2.5 கோடி ரூபாய் நிறுத்தப்பட்டிருக்கிறது. ஏன் இதை நிறுத்துகிறார்கள்? மத்

[Sri A. Govindasamy] [11th December 1961

திய சர்க்கார் இந்த சர்க்காரை புறக்கணிக்கிறார்கள் என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டாகும். நிதி அமைச்சர் அவர்கள் எல்லா ராஜ்யங்களுக்கும் இத்தொகை நிறுத்தப்பட்டிருக்கிறது என்று சொன்னாலும், அவர்களிடம் நாம் சண்டைபோட்டு வாங்கக்கூடிய துணிவு நமக்கு ஏற்பட வேண்டும் என்பதை இந்த நேரத்திலே வற்புறுத்திச்சொல்ல விரும்புகிறேன். மத்திய சர்க்கார் சில இனங்களின் மீது வரிபோட்டு வருமானத்தில் வளர்ச்சி பெற்றுக் கொண்டு வருகிறது. அந்த வருமானம் மேலும் மேலும் பெருகுகிறது. அதிலிருந்து ஓரளவுக்கு நமக்கு கிடைக்கும் என்று சொல்கிறார்கள். இந்த ஓரளவு என்று சொல்வதை நாம் நினைத்துப் பார்க்கும்போது, பாக்கு மீது வரி, வத்திப்பெட்டி மீது வரி, புகையிலை மீது வரி என்று சொல்லும்போது, இதன்மூலம் ஏழைகள் தான் பாதிக்கப்படுகிறார்கள் என்பதைப் பார்க்கிறோம். ஆனால் அவர்கள் சொல்கிறார்கள், இதெல்லாம் போடாமல் எப்படி சர்க்காரை நடத்த முடியும் என்று. ஆனால் இப்படி வரிப் போடுவதன் மூலம், நமக்குரிய பங்கு வருகிறதா என்பதைப் பார்க்க வேண்டும். நமக்கு உரிய பங்கு வருவது கிடையாது. அதற்கு பதில் துண்டு விழும் பட்ஜட்டைத்தான் பார்க்கிறோம். இந்த துண்டை கடைசியிலே உபரி வருவதன் மூலம் ஈடுகட்டுவதாகச் சொல்லி, சில திட்டங்களிலே அதன் செலவைக் குறைத்து, அல்லது சில திட்டங்களை விட்டு ஈடுகட்டி விடுகிறார்கள். இந்த நிலைமையைத் தான் நாம் பார்க்க முடிகிறது.

அடுத்து, 6 வயது முதல் 11 வயது முடிய உள்ள குழந்தைகளுக்கு கட்டாய கல்வி என்று சொல்லப்படுகிறது. இந்த 6 வயது முதல் 11 வயதுவரை உள்ள குழந்தைகளுக்கு கட்டாயக் கல்வி என்பதை அரசியலில் சட்டம் இயற்றப்பட்டபோதே எழுதியிருக்கிறார்கள். ஆனால் அமுல் நடத்துவதிலே தான் 10 ஆண்டுகளுக்குள் அமுல்நடத்த முடியாமல், இப்போது உத்திரவாதம் கொடுத்திருக்கிறது. அதோடு பகலுணவுத் திட்டம் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்த பகலுணவுத் திட்டத்திற்கு கொடுக்கப்படும் தொகை போதாது. அதிலேயும் சில ஊழல்கள். அதை கமிட்டி எடுத்துச் சொல்லியிருக்கிறது. ஆகவே, இந்தத் திட்டத்தைச் சரியான முறையிலே நடத்துவதற்கு அரசாங்கம் முன்வர வேண்டும். அதேபோல், 2 வயது முதல் 5 வயது வரையுள்ள குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்காக ஒரு புதிய திட்டம். இந்த புதிய திட்டத்தால், பணக்கார குழந்தைகள் தான் நல்ல பயன் பெறுமென்றுநான் கருதுகின்றேன். கிராமங்களிலேயும் இவ்விதத் திட்டம் கொண்டு வரப்பட வேண்டும். இதை அமைச்சர் அவர்கள் பதிலுரைக்கின்ற நேரத்திலே விளக்க வேண்டும். என்னுடைய பகுதியிலே ஒரு கிராமத்தில் மட்டும் ஒரு சங்கம் இருக்கிறது. அங்கு பெயர் பலகை ஹிந்தியிலே உள்ளது; எனக்குச் சரியாகப் புரியவில்லை. இப்படி ஏதோ ஆங்காங்கு ஒன்றிரண்டு இருக்கின்றன. ஏதோ ஒரு சில குழந்தைகள் என்றைக்காவது ஒருநாள் சோஷியல் வெல்பேர் போர்டிலிருந்து ஆட்கள் வரும் போது விளையாட்டு காட்டப்படுகின்றது. ஆகவே, ஒழுங்கான முறையிலே நடப்பதற்கு வழிவகைகளை நாம் வகுக்க வேண்டும்.

11th December 1961] [Sri A. Govindasamy]

தவிர, இதைப் பரவலான முறையிலே எல்லா இடங்களிலேயும் ஏற்படுத்தவேண்டுமென்று இந்த நேரத்திலே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

தவிர, சென்னையிலே வாழக்கூடிய குழந்தைகளுக்கு தனியாக ஒரு மருத்துவசாலை ஏற்படுத்த உள்ளது. சென்னையிலே ஆஸ்பத்திரிகளுக்கு குறைவில்லை. குழந்தைகளுக்காகவும், தாய்மார்களுக்காகவும் எக்மோரிலே ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது. கிராமப் பகுதிகளிலே ஜில்லாவாரியாக, தாலூகாவாரியாகப் பார்க்கின்ற போது ஆஸ்பத்திரியில் மருந்து இருக்கும், டாக்டர் இருக்க மாட்டார்; டாக்டர் இருப்பார், அங்கு மருந்து இருக்காது. இந்த நிலைமை இருக்கிறது. ஆகவே, கிராமப் பகுதிகளிலே உள்ள ஆஸ்பத்திரிகளில் நவீன முறைப்படி வசதிகள் இல்லாவிட்டாலும், தேவையான அளவுக்கு வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். ஆகவே, அங்கெல்லாம் நல்ல முறையில் ஆஸ்பத்திரிகள் ஏற்படுத்த வேண்டும். அதற்கு ஜில்லா போர்டிலே இருக்கக்கூடிய, பஞ்சாயத்து யூனியனிலே இருக்கக்கூடிய, படுக்கையோடு இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகளை சர்க்கார் எடுத்துக் கொண்டதுபோல், எல்லா இதர ஆஸ்பத்திரிகளையும் சர்க்கார் எடுத்துக்கொண்டால், ஓரளவு வசதியாக இருக்கும். அந்த அளவுக்கு அரசாங்கம் முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மாணவர்கள் தொழிற்கல்வி கற்றுக்கொள்ள வட்டியில்லாக் கடன் கொடுப்பதாகத் திட்டமிட்டிருக்கிறார்கள். வட்டியில்லாக் கடன் என்று சொல்லும் போது, இது எந்த அளவுக்கு யாருக்கு கொடுக்கப்படும் என்பதெல்லாம் விளங்க வில்லை. இன்றையத் தினம் பின்தங்கிய மக்களுக்கு குறைவான அளவிலே சம்பளம் வருகிறபோது, அவர்களுக்கும் இந்தச் சலுகைகள் அளிக்கப் படுமா என்பதை அறிய விரும்புகிறேன். ஆகவே, இந்த உதவி சமூகத்தின் அடிப்படையிலே கொடுக்கப்படுமா என்பதையெல்லாம் விளக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

கடைசியாக, ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். மத்திய சர்க்காரிலே ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதிலே, கரும்பு சாகுபடி செய்யக்கூடிய விவசாயிகள் 10 சத விகிதம் குறைத்துக் கொள்ள வேண்டுமென்று உத்திரவிடப்பட்டிருக்கிறது. அதாவது ஆலை முதலாளிகள் தங்கள் உற்பத்தியிலே 10 சத விகிதம் குறைத்துக் கொள்ள வேண்டும். இந்த அளவிலே மசோதா நிறைவேற்றப் பட்டிருக்கிறது. அதாவது 40 டன் சர்க்கரை உற்பத்தி செய்வதாக இருந்தால் அதை 30 டன்னாக குறைத்துக் கொள்ளவேண்டும். இப்படி 10 டன் அளவுக்கு சாகுபடியை குறைத்துக் கொள்ள வேண்டுமென்றால், அதிகப்படியாக கரும்பைச் சாகுபடி செய்யக்கூடிய விவசாயிகள் ஒன்று, அதிகப்படியான கரும்பை வெல்லமாகக் காய்ச்ச வேண்டும் அல்லது மீதியுள்ள கரும்பை விறகாகத் தான் உபயோகிக்க வேண்டும். இதனால் விவசாயிகள் மிகவும் பாதிக்கப்படுவார்கள். ஆகவே, அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதேபோல, இன்றைய தினம் விவசாயத்திற்கு வேண்

டிய ரசாயன உரம், சிமெண்ட் போன்றவை வேண்டுமென்றால் அவைகள் போதிய அளவில் கிடைப்பதில்லை. தாசில்தாருக்கு 20, 30 மூட்டை வேண்டுமென்று எழுதிக் கேட்டால் 1, 2 மூட்டைகள் தான் கிடைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இவைகள் எல்லாம் போதிய அளவிலே கிடைப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். கடைசியாக, முக்கியமான விஷயம் ஆதி திராவிட மக்களுக்கு மனைக்கட்டு வழங்குவதாகும். அதேபோல் அவர்களுக்கு சுடுகாட்டுக்குப் போவதற்கான பாதையை நல்ல வகையிலே அமைத்துத் தர வேண்டும். இவர்களுக்கு இந்த மனைக்கட்டு கொடுப்பதிலே மிகவும் அக்கறை எடுத்துக் கொண்டு, அதை விரைவிலே கொடுக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri K. S. ARDHANAREESWARA GOUNDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சபையின் முன் வைத்திருக்கக்கூடிய இடைக்கால வரவு-செலவுத் திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். குறிப்பாக, கனம் அமைச்சர் அவர்கள் இந்தச் சபையில் கடைசி வரவு-செலவுத் திட்டத்தை சமர்ப்பிக்கின்றேன் என்று சொன்னாலும்கூட, மிகவும் கஷ்ட நிலையிலே இருக்கக்கூடிய பொது மக்களுக்கு நன்மை பயில்விக்கக்கூடிய முறையிலே பல நல்ல திட்டங்களை சமர்ப்பித்திருப்பதானது மிகவும் போற்றத்தக்கது. இங்கு கடைசியாக பட்ஜெட் திட்டத்தை சமர்ப்பிப்பதாகச் சொன்னாலும் கூட, கனம் அமைச்சர் அவர்கள் இந்தச் சபையில் இல்லாவிட்டாலும் மத்திய சர்க்காரில் சென்று அங்கு நல்ல பணிகளைச் செய்வார்கள் என்பதிலே கொஞ்சமும் சந்தேகம் இல்லை, என்பதை எனக்கு முன்பு பேசிய நண்பர் கோவிந்தசாமி அவர்களே ஒப்புக் கொண்டார்கள். நண்பர் கோவிந்தசாமி அவர்களோடு நான் 10 ஆண்டுகள் பழகியிருக்கிறேன். அநேகமாக அவர்கள் பேச்சிலே பார்த்தால் வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்பதுபற்றி சொல்லாமல் இருக்கமாட்டார். ஆனால் இந்த இடைக்கால பட்ஜெட் விவாதத்தின்போது அதைச்சொல்ல மறந்துவிட்டார். காரணம் என்னவென்றால் வடக்கு, தெற்கு என்பதையெல்லாம் விட்டுவிட்டு பலருடன் கூட்டுச் சேருவதாக இருப்பதால் தான். இங்கு அதைச் சொல்லவில்லை, இங்கு சொன்னால் தேர்தல் பாதிக்குமோ என்ற காரணத்தினால் தான் இந்த இடைக்காலத்தில் அதை மறந்து, நம்முடைய நாட்டினுடைய முன்னேற்றத்தில் அவர்கள் பங்கு கொண்டதானது மிகவும் போற்றத்தக்கது. கனம் நிதி அமைச்சர் அவர்களுடன் 10 ஆண்டுகள் பழகியபிறகு வடக்கு, தெற்கு என்பதை மறந்ததுபற்றி கனம் அங்கத்தினர்கள் சார்பிலும், மக்கள் சார்பிலும் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். இங்கு இருக்கக்கூடிய எதிர்க்கட்சியைச் சேர்ந்த திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் தேர்தல் முடியும் வரை வடக்கு, தெற்கு என்பதை மறந்துவிடுவார்கள் என்று நினைக்கிறேன். ஏனென்றால் அதுமாதிரி கூட்டுச் சேருகிறார்கள். கனம்

11th December 1961] [Sri K. S. Ardhanareeswara Gounder]

நிதி அமைச்சர் அவர்களுடைய பார்லிமெண்டு தொகுதியிலே திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினரை போடப்போவதில்லை என்று சொன்னதானது மிகவும் போற்றத்தக்கது. அவர்களுடைய சேவையை நன்கு புறிந்துகொண்டிருக்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரியவருகிறது. இருந்தாலும் கூட, எந்தவிதத்தில் அவர்கள் பிரசாரம் செய்யப்போகிறார்கள் என்பது தெரியவில்லை.

நமது அங்கத்தினர் கனம் வி. கே. கோதண்டராமன் அவர்கள் இந்த பட்ஜெட் உரையை தேர்தல் பிரசாரம் என்று சொன்னார்கள். ஆனால், நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையிலும், தேர்தலிலே இதுமாதிரி பிரசாரம் தேவையில்லை. ஏனென்றால், நமது நிதி அமைச்சர் அவர்கள் 1952-லிருந்து 1962 வரையிலும் இருந்த காலத்தில் நம்முடைய மாகாணத்தை 1952-க்கு பின் நோக்கிப் பார்த்து, இப்பொழுது 1962-ல் இருக்கக்கூடிய நிலைமையைப் பார்த்தால் எந்த விதத்திலும் குறை சொல்லக்கூடிய நிலையில் இல்லாமல் இந்த மாகாணம் முன்னேற்றத்தில் இருக்கிறது என்பதை இந்தச் சபையின் முன்பு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

குறிப்பாக, நண்பர் கோவிந்தசாமி அவர்கள் இந்த 10 ஆண்டுகளில் புதிய திட்டத்தை ஏதாவது சமர்ப்பித்திருக்கிறார்களா என்று பார்த்தால் கிடையவே கிடையாது. கட்டின வீட்டிற்கு பழுது சொல்வது போல், சர்க்கார் கொண்டு வந்திருக்கக்கூடிய திட்டங்களுக்கு பல குறைபாடுகள் சொல்லிக்கொண்டிருக்கிறார்களே தவிர, வேறு அல்ல. நான் மிகவும் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன், கடைசியில் இந்த இடைக்கால வரவு-செலவுத் திட்ட விவாதத்தின் போதாவது ஒரு இன்ப மயமான திட்டத்தை, வளர்ச்சிகரமான திட்டத்தை, ஒரு புதிய திட்டத்தை, கருத்துக்களை கூறுவார்கள் என்று. அதிலே நான் ஏமாந்து போய்விட்டேன். கனம் அங்கத்தினர் அவர்கள் மறுபடியும் வரப்போகிறார்களோ என்னவோ தெரியவில்லை. இந்த கடைசி காலத்திலாவது ஏதாவது புதிய கருத்துக்களை சொல்லுவார்கள் என்று எதிர்பார்த்து ஏமாந்து போய் விட்டேன் என்பதை இந்தச் சபை முன்பு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சேலத்தைப் பொறுத்தவரையிலே, 1952-ல் சேலம் ஜில்லா மிகவும் கல்வியிலே பிற்போக்கான ஜில்லா. குறிப்பாக 100-க்கு 10 பேர்கள் தான் படித்தவர்கள் இருந்தார்கள். ஆனால், இப்பொழுது தென் சேலத்தைப் பார்க்கப்போனால், அங்கு இருக்கக்கூடிய கிராமங்களில் எல்லாம் பள்ளியில்லாத கிராமம் இல்லை, பள்ளிகளில் சேர்க்கக்கூடிய குழந்தைகள் பாக்கியில்லை என்ற நிலைமையிலே நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது மிகவும் போற்றக்கூடியது. அதுவும் தவிர, சேலம் ஜில்லாவிலிருந்து வந்திருக்கக்கூடிய அங்கத்தினர்கள் சேலத்தில் ஒரு பொறியியல் கல்லூரி வேண்டும் என்று பல நாட்களாக கேட்டிருந்தாலும், நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த இடைக்கால பட்ஜெட்டில் அதைப் பற்றி கூறுவார்களோ என்று சந்தேகமாக இருந்தது. இருந்தாலும் அங்கு ஒரு புதிய பொறியியல் கல்லூரி நிறுவ முடிவு செய்யப்பட்டுள்ளது என்று கூறியிருப்பது மிகவும் போற்றத்தக்கது.

[Sri K. S. Ardhanareeswara Gounder] [11th December 1961

குறிப்பாக மேட்டூரில் அங்கு இருக்கக்கூடிய அவ்வளவு பேர் களும் தொழிலாளர்களாக இருப்பதனல், தொழிலாளர்களுடைய குழந்தைகளுக்கு நல்ல முறையில் தொழில் வளர்ச்சியில் பயிற்சி கொடுக்கவேண்டும் என்று பல தடவை எடுத்துச் சொன்னதின் காரணத்திஞல், கனம் அமைச்சர் அவர்கள் ஒரு தொழில் பயிற்சி கூடத்தை அங்கு நிறுவ முன் வந்திருப்பது மிகவும் போற்றத் தக்கது. அதற்காக மக்கள் சார்பிலும், என் சார்பிலும் அவர் களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

சிறு குழந்தைகளுக்கு மதிய உணவு திட்டம், சீர் உடைத் திட் டம் ஆகிய திட்டங்களை ஏற்படுத்தியிருப்பதோடு கூட, அந்தக் குழந்தைகள் படித்துவிட்டு மேலும் கல்லூரிக்கு வந்தால், ஏழை மாணவர்கள் படிப்பதற்கு வட்டி இல்லாமல் கடன் கொடுத்து அவர்களை படிப்பிலே முன்னேற்றம் செய்வதற்கு திட்டம் போட்டு ஏற்பாடு செய்திருப்பதானது உண்மையிலேயே நமது மாகாணத் திற்கு மட்டுமல்ல, நாட்டிற்கே ஒரு தொண்டு செய்திருக்கிறார்கள் என்று சொல்லவேண்டும்.

அதுவும் தவிர, முதியவர்களுக்கு ஓய்வு ஊதியம் கொடுக்க முன் வந்திருப்பதில் கூட குறைபாடு சொல்லுகிறார்கள். ஏன் பிச்சைக் காரர்களுக்குக் கொடுக்க வில்லை என்று கேட்கிறார்கள். பிச்சைக் காரர்களுக்கு மறுபடியும் அந்தப் பணத்தைக் கொடுத்து அவர்களை மறுபடியும் பிச்சைக்காரர்களாக ஆக்காமல், அவர்கள் முன்னேற் றத்திற்காக பல நல்ல தொழில்களை ஏற்படுத்தி அவைகளில் பிச்சைக்காரர்களை ஈடுபடுத்தி முன்னேறச் செய்வது தான் சர்க்கா ரின் திட்டம். பிச்சைக்காரர்களிடமிருந்து வோட்டுக் கிடைக்கப் போவதில்லை என்பதுதான் காரணமாக இருக்கலாம். அவர்களை இந்தத் திட்டத்தில் சேர்க்காமல் விட்டிருப்பது என்று நண்பர் கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள். ஆனல், சர்க்கார் கொள்கை அவர்கள் மறுபடியும் பிச்சைக்காரர்களாக ஆகக் கூடாது என்பதுதான். அந்தக் காரணத்தினல் அவர்கள் இந்தத் திட்டத்திலிருந்து நீக்கப் பட்டிருப்பது போற்றத்தக்கது தான்.

அடுத்தபடியாக, மேட்டூரில் பல தொழிற்சாலைகள் ஏற்பட்டா லும்கூட, அந்த நகரமானது மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கிறது. இங்கே 'ஸிடி இம்ப்ரூவ்மெண்டு டிரஸ்டு' என்று எப்படி இருக்கிறதோ, அதேமாதிரி நகர அபிவிருத்தி திட்டத்தில் அந்த நகரத்தையும் சேர்த்து, அங்கே இந்தத் திட்டத்தை விஸ் தரித்துக் கொடுக்குமாறு சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூருக்கு வெளி நாடுகளிலிருந்தும், நம் முடைய மாகாணத்திலிருந்தும், பிற மாகாணங்களிலிருந்தும் பலர் வருகிறார்கள். அங்கு மக்கள் தங்குவதற்கு வசதி இல்லாமல் இருக்கிறது. பல தினங்களில் பஸ்களில் குறிப்பாக பள்ளிக் கூடத்து குழந்தைகள் அங்கு வருகிறார்கள். அவர்கள் அங்கே தங்கி ஓய்வு எடுத்துக்கொள்வதற்கு வேண்டிய வசதி இல்லாமல் இருக்கிறது. உடனடியாக அந்த இடத்திலே அவர்களுக்கு தங்கு வதற்கு நல்ல வசதி செய்து கொடுக்குமாறு சர்க்காரின் கவனத் திற்குக் கொண்டு வருகிறேன்.

11th December 1961] [Sri K. S. Ardhanareeswara Gounder]

மேட்டூரைப் பொறுத்தவரையில் பால் பண்ணை வைப்பதற்கு மேய்ச்சல் தரை இருக்கிறது. குறிப்பாக அங்கு இருக்கக்கூடிய 'ஸூயேஜ் பாரத்தில்' அநேக மாடுகளை வைத்து வளர்ப்பதற்கு வேண்டிய வழி வகை இருக்கிறது. பக்கத்தில் ஈரோட்டிலிருந்து மதராஸுக்கு பால் கொண்டுவருவதற்கு திட்டம் வைத்திருக்கிறார்கள். ஈரோட்டில் ஆரம்பித்திருக்கிற திட்டம் நல்ல முறையில் முன்னேறவேண்டும் என்று சொன்னால், மேட்டூரில் உள்ள தரிசு நிலங்களை மேய்ச்சல் தரைக்கு உபயோகப்படுத்தி, அங்கு இருக்கக் கூடிய 'ஸூயேஜ் பாரத்தையும் உபயோகப்படுத்துவதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் ஈரோட்டில் உள்ள பால் திட்டத்திற்கு இது உதவியாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, அங்கு பல தொழிற்சாலைகள் வருவதினால், ஒவ்வொரு தொழிற்சாலைக்கும் நிலம் விநியோகம் செய்வதிலே பல குறைபாடுகள் இருக்கின்றன. குறிப்பாக, இப்பொழுது அலுமினியம் தொழிற்சாலை ஏற்படுத்தப்போகிறார்கள் என்பதினால், வேறு தொழிற்சாலைகளை ஏற்படுத்தவேண்டும் என்று பலர் கேட்டால், எந்த நிலத்தை எடுத்தாலும் அலுமினியம் தொழிற்சாலைக்கு நிலம் ஒதுக்கப் பட்டிருக்கிறது என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இந்த விஷயத்தைப் பொறுத்த வரையிலும் உயர்தர அதிகாரிகளைக் கொண்டு ஒரு கமிட்டி நியமித்தாவது, அங்கு வரக்கூடிய பல தொழிற்சாலைகளுக்கு நிலங்களை ஒதுக்குவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டும். ஏனென்றால், அங்கு இப்பொழுது கெமிகல் கம்பெனியார் அடுத்தபடியாக அவர்களுடைய கெமிகல் தொழிற்சாலையில் இன்னும் உற்பத்தியை இரண்டு மடங்கு பெருக்குவதற்கு திட்டம் போட்டு, அதற்கு சர்க்காரில் அனுமதியும் கொடுத்திருக்கிறார்கள். ஆனால், நிலம் இல்லாததின் காரணத்தினால், அவர்கள் திட்டத்தை இயற்றுவதில் காலதாமதம் ஏற்படுகிறது. அதேமாதிரிதான் ப்ளாஸ்டிக் பைப் பாக்டரி வைக்கவும் சர்க்கார் அனுமதி கொடுக்கும் நிலையில் இருக்கிறார்கள். 11-00 a.m. அந்த பாக்டரிக்கும் இடம் இல்லாமல், தொழிற்சாலைவேலை பாதிக்கப்பட்டிருக்கிறது. சாணை கற்கள் செய்யும் தொழிற்சாலையையும் அங்கே வைக்க சர்க்கார் அனுமதி கொடுக்கும் நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும், நிலம் இல்லாததால், தொழிற்சாலைகள் வைக்க இடம் இல்லாமல் கஷ்டம் ஏற்படுகிறது. நிலம் இல்லை என்பதில்லை. சர்க்காரிடம் தரிசு நிலங்கள் இருப்பதை வினியோகம் செய்வதில் கவனம் செலுத்தப் படவேண்டும். நல்ல ஒரு கமிட்டியைப் போட்டு, அந்த வேலையைச் செய்து கொடுத்தால், அங்கே இந்த தொழிற்சாலைகள் ஏற்பட்டு, அந்த நகரம் நல்ல முறையிலே வளர ஏதுவாக இருக்கும். ஆகவே, இந்த நில வினியோகம் உடனடியாகக் கவனிக்கப் படவேண்டும்.

அடுத்தபடியாக மேட்டூர் இண்டஸ்ட்ரீஸ் பொறுத்த வரையில், அந்தக் கம்பெனியைச் சேர்ந்தவர்கள் ஆங்கிலேயர்களாக இருந்ததால், தேவைக்கு அதிகமாகவே நிலங்களை வாங்கி விட்டார்கள்.

[Sri K. S. Ardhanareeswara Gounder] [11th December 1961

200 ஏக்கர் அவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் 50 ஏக்கரில் தான் தொழிற்சாலையை கட்டிக்கொண்டு இருக்கிறார்கள். மீதி இருக்கும் நிலங்களைத் தரிசாக வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட தரிசு நிலங்களை புதிய தொழிற்சாலைகளுக்கு ஒதுக்கிக் கொடுத்தால், பல தொழிற்சாலைகள் ஏற்பட வழிவகை ஏற்படும்.

கடைசியாக என் ஜி.ஓ.-க்களைப் பொறுத்த வரையில், கனம் நிதி அமைச்சரவர்கள் மத்திய சர்க்காருக்குப் போகிறார்கள். அவர்கள் அங்கே இருக்கும் காலத்தில் மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும், இங்கே மாநில சர்க்கார் ஊழியர்களுக்கும் இடையே உள்ள பாகுபாட்டை நிவர்த்திக்க வழிவகை செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

மின்சார இலாகா சம்மந்தப்பட்டவரை, நாம் முன்னேற்றப் பாதையிலேதான் செல்கிறோம். மேட்டூரைப் பொறுத்தவரை, அது ஒரு மின்சார உற்பத்தி ஸ்தலமாக இருந்தபோதிலும், பல திட்டங்கள் வருவதன் காரணமாக அங்கு வாழும் பல ஊழியர்களுக்கும் வசதிகள் செய்து கொடுத்தாலும், ஏற்கனவே அங்கு வேலையில் இருக்கும் பல தொழிலாளிகள் வீட்டுவசதி இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அது வருந்தத்தக்க நிலையில் இருக்கிறது. ஆகவே, அவர்களுக்கும் வீடுகள் கட்டிக்கொடுக்க திட்டத்தின் கீழேயே வழிவகை செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மேட்டூரைப் பொறுத்தவரை, அங்கே நல்ல அணை இருந்தாலும், பக்கத்தில் இருக்கும் பூங்கா நல்ல முறையிலே அமையவில்லை. பல வெளிநாட்டு யாத்திரீகர்கள் வரும் அந்த இடம் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது. அதற்கு என்று ஒரு திட்டம் சர்க்காரிலே தயாரிக்கிறார்கள் என்று அறிகிறேன். கனம் அமைச்சரவர்கள் இருக்கும்போதே, அந்த திட்டத்திற்கும் பணம் ஒதுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

விவசாயிகளுக்கு அமோனியம் சல்பேட் உரம் அளிக்கும் சம்மந்தமாக இன்னும் குறைபாடுகள் இருக்கின்றன. சில சமயங்களில், சர்க்காரிலேயிருந்து விலை வரவில்லை, மத்திய சர்க்கார் விலைக்கும் நம் விலைக்கும் ஏற்றத்தாழ்வு இருக்கிறது, 80 நயாபைசா தகராறு இருக்கிறது என்று தெரிகிறது. இப்படியெல்லாம் சொல்கிறார்கள். ஆகவே அமோனியம் சல்பேட் வினியோகம் முறையிலே நடைபெறாவிட்டால் விவசாயிகளுக்கு நன்மை ஏற்படாது. ஆகவே, அதை நல்ல முறையில் விநியோகம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் விவசாய அபிவிருத்திக்கு ட்ராக்டர்களை உடனடியாக அவர்களுக்கு கொடுக்க வேண்டும். ஏனென்றால் இப்பொழுது புது முறையில் விவசாயம் செய்யும் காரணத்தினால், அடிக்கடி நாம் யோசனைகளைச் சொல்லும்போது, அவர்களுக்குப் போதிய

11th December 1961] [Sri K. S. Ardhanareeswara Gounder]

டிராக்டர்களை நிறைய வாங்கிக் கொடுத்து ஒவ்வொரு கூட்டுறவு சங்கத்திற்கும் ஒரு டிராக்டர் என்ற முறையில் கொடுத்தால் நல்ல முன்னேற்றம் ஏற்படும்.

கனம் நிதி அமைச்சரவர்கள் இந்த சபையில் பத்து ஆண்டு களாக நல்ல முறையிலே பணியாற்றி நல்ல பெயர் பெற்றிருக் கிறார்கள். அவர்கள் இப்பொழுது மத்திய சர்க்காரிலும் பணி யாற்றி நல்ல பெயர் வாங்கித் தருவார்கள் என்ற நம்பிக்கை நமக்கு இருக்கிறது. அவர்கள் எப்படி சென்னை மாகாணத்திற்கு ஒரு பெரிய அஸெட்டாக இருந்தார்களோ, அதே மாதிரி, மத்திய சர்க்காரிலும் பணியாற்றும் பெரிய அஸெட்டாக, அவர்களை நாம் அங்கே அனுப்பிக் கொடுக்க வேண்டும்; அதற்கு அவர்களுக்கு தேக ஆரோக்கியமும், அறிவு வளர்ச்சியும் மேலும் மேலும் அதிக மாக வேண்டும் என்று சொல்லிக்கொண்டு, என் உரையை முடிக் கிறேன்.

* DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN: சட்டசபை உப தலைவர் அவர்களே, நம் சட்ட சபையின் இந்தக் கடைசிக் கூட்டத்தில் ஸ்ரீ. ஸி. சுப்பிரமணியம் அவர்கள், ஏதோ எலெக்ஷனுக்கு முந்திய ஒரு பட்ஜெட் என்று, ஏனோ, தானோ என்று கொண்டு வந்துவிடாமல், மூன்றுவது திட்டம் நல்ல முறை யில் நிறைவேறும் வகையில், ஒரு முழுமையான பட்ஜெட்டாக அமைத்துக் கொடுத்தது பற்றி மகிழ்ச்சி தெரிவிக்கிறேன். இப் பொழுது அவர்கள் பார்லிமெண்டு தொகுதிக்கு நின்று, பாராளு மன்றத்திற்குப் போகிறார் என்பது நமக்கு எல்லோருக்கும் தெரியும். இங்கே அவருக்குப் புகழ்மாலை சாத்த வேண்டிய அவசியம் இல்லை. இருந்தபோதிலும், பின்னால் வரப்போகும் அங்கத்தினர்களுக்கு அவர்கள் பேச்சைக் கேட்கும் வாய்ப்பு இருக்காது. அவர் காரசாரமாகவும் பேசுவார்கள், சிரிக்கவும் பேசுவார்கள், கோபத்தில் சொல்வதைப் படபடப்பாகப் பேசின லும், பின்னால் எதிர்க் கட்சிக்காரர்களையும் சிரிக்க வைக்கும்படி பேசுவார்கள். முக்கியமாக அவருடைய சாதுரியம் மிகுந்த பேச்சைக் கேட்க அவர்களுக்கு வாய்ப்பு இருக்காது. ஆனால், பாராளுமன்றத்தில், அவர்கள் நம் மெட்ராஸின் பிரதிநிதியாகப் போவார்கள்; "வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது" என்பவர் களுக்கும் சேர்ந்த பிரதிநிதியாக அனுப்பி வைக்கிறோம். நம்பிக் கைக் குறைவாக இருக்கிறவர்களுக்கும் எதிர்காலத்தில் நம்பிக்கை அதிகப்படும் என்று நினைக்கிறேன். தமிழ் நாட்டின் நல்ல ஒரு சக்தி வாய்ந்தவரை அனுப்புகிறோம். அவருக்குக் கிடைக்கும் நல்ல பெயர் எல்லோருக்கும் கிடைத்ததாகும். அவர்கள் நம் நல்லாசிகளுடன் செல்லட்டும். ஆகவே, அவருடைய பணிக்கும், இந்த பட்ஜெட்டுக்கும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

பல வருஷங்களாக நாங்கள் ஆசைப் பட்டுக் கொண்டிருந்த திட்டங்களை இதில் புகுத்தி இருக்கிறார்கள். அதன் விவரங் களுக்குப் போவதற்கு முன் பொதுவாக ஒன்றிரண்டு விஷயங்களை

[11th December 1961

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

மட்டும் சொல்ல விரும்புகிறேன். சம்பளங்களைக் குறைக்க முடியாது; விலைவாசிகளைக் கணிசமான அளவில் கட்டுப்படுத்த முடியாமல் இருக்கலாம். ஆனால், ஒவ்வொரு ஊழியரும், ஒவ்வொரு திட்டமும் பரிபூரண பலன் கிடைக்கும் அளவில் அவைகளை நாம் உபயோகிக்கக்கூடும் முறையிலே, நல்ல சிக்கன முறையிலே, ரூபாய் நூற்றுக்கு நூறு பலன் கிடைக்கும் முறையிலே நாம் பணியாற்ற வேண்டும். நாம் "எபிஷியன்ஸி டார்ஜெட்" வைத்து வேலை செய்யாவிட்டால், பணத்தின் அளவு உயர்ந்துக் கொண்டே போகும், கிடைக்கக்கூடிய பலத்தின் தரம் குறைந்துக் கொண்டே போகும். ஆகவே, இது இரண்டையும் இணைக்கும் முறையிலே, திட்டம் தீட்டுவது மட்டும் போதாது, பலனை முழுக்க முழுக்க அடைய "எபிஷியன்ஸி டார்ஜெட்", "ஒர்க் லோட்" முதலியவற்றைக் கருத்தில் கொள்ள வேண்டும். அப்படி எல்லாக் கட்சிக்காரர்களும், பேதமில்லாமல் ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கல்வித் துறையில், பாலர் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்து, 2 வயது முதல் 5 வயது வரை தனிக் கல்வி முறை வேண்டுமென்று பல வருஷங்களாகக் கேட்டுக் கொண்டு வந்திருக்கிறோம். அதற்காகவே பூர்வாதார முறையை கஸ்தூர்பா நிதியின் கீழ் 16 வருஷத்திற்கு முன் ஆரம்பித்தோம். அந்த ஆசையைப் பூர்த்தி செய்யும் முறையில் பாலர் பள்ளிக்கு அரசாங்கமே முன்வந்து ஏற்பாடு செய்வது போற்றத்தக்கது. இதிலே ஒன்று சொல்ல விரும்புகிறேன். ஏதோ தாயி என்று பயிற்சி கொடுத்து ஒரு பெண்ணை ஏற்பாடு செய்வது குறைய வேண்டும். இப்பொழுது சமூக நல போர்டில் பால்வாடிகள் நடத்துகிறார்கள். இது இரண்டையும் ஒன்று சேர்க்கலாம். இம்மாதிரி இன்னும் சுகாதாரம் போன்ற காரியங்களையும் சேர்த்து ஒரு சேவிகைக்குக் கொடுப்பதன் மூலமாக, பலதுறையில் ஒருமிக்க வேலை செய்யலாம். அப்படிச் செய்தால், அதிகம் வேலையில்லாமல் இருக்கும் சேவிகைகளை வேலைக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். குடும்ப நலத்திற்காக நமக்கு ஏராளமான பணம் இருக்கிறது. கிராம அளவிலே பரப்ப வேண்டுமானால் அதையும் சேர்த்துக் கொள்ளலாம். குடும்ப நல திட்டத்தை கிராமங்களிலே பரப்புவதற்கு சமூக நல போர்டிடம் பொறுப்பை ஒப்புவித்து இருக்கிறோம். இவ்வாறு பல துறைகளை எடுத்துக் கொண்டோமானால் நல்ல சேவிகைகளை நியமித்து நன்றாக வேலை செய்யலாம்.

அடுத்தபடியாக ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். சட்டசபையிலே சொல்லவேண்டிய அவசியமில்லை யென்றாலும் நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பெண்கள், ஆண்கள் என்று தனித்து பேசவேண்டிய அவசியமில்லையென்றாலும், பொதுவாக பெண்களுக்கு கஷ்டம் அதிகமாக இருப்பதினால் தனிப்பட்ட முறையிலே அவர்கள் எஸ்.எஸ்.எல்.ஸி. பரிட்சை எழுதவேண்டுமென்று சென்ற 30 வருஷ காலமாக கேட்டுக் கொண்டிருந்தோம்.

11th December 1961]
[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

இந்த வருஷத்திலே மே மாதத்திலே அந்த அனுமதி கிடைத்தது. ஆனல் வலது கையால் கொடுத்ததை இடது கையால் பறித்துக் கொள்வதுபோல ஈ.எஸ்.எல்.ஸி. ஆங்கிலத்துடன் பாஸ் பண்ணியிருக்கவேண்டும் என்ற ஒரு உத்தரவை சமீபத்திலே பிறப்பித்து இருக்கிருர்கள். 1953-ம் ஆண்டு வரை ஆங்கிலம் இல்லாமல் பாஸ் செய்து இருந்தாலும் ஆங்கிலத்தில் மட்டும் எழுதினல் போதும் என்று சலுகை கொடுத்திருக்கிருர்கள். 1961-லே இந்த உத்தரவு வருவதினலே, 1961 மார்ச்சு வரை ஆங்கிலம் எழுதாதவர்கள் ஆங்கிலத்தில் மட்டும் எழுதினல் போதும் என்று மாற்றி அமைத்தால் வயதான பெண்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும். இல்லாவிட்டால் ஈ.எஸ்.எல்.ஸி. பரிட்சை எல்லாவற்றையும் எழுத வேண்டியிருக்கும், நாம் கொடுத்த சலுகையை பல பெண்கள் பயன்படுத்த முடியாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, நம் நாட்டிலே பல டிரெயினிங் காலேஜுகள் இருக்கின்றன. நமக்கு அதிகமான அளவிலே பி.டி. ஆசிரியர்கள் தேவைப்படுகிருர்கள். நாம் எவ்வளவு காபிட்டல் எக்ஸ்பெண்டிசர் செய்திருக்கிருேமோ அதற்குத் தகுந்தாற்போல் எண்ணிக்கை சில இடங்களிலே இல்லாமல் இருக்கிறது. சில இடங்களிலே நாம் இந்த எண்ணிக்கையை உயர்த்தலாம். அப்படி உயர்த்தினல் ஒரு நபருக்காக நாம் செலவு செய்யும் பணம் குறையும். இங்கு நான் ஒரத்தநாடு டிரெயினிங் காலேஜ், லேடி விலிங்டன் டிரெயினிங் காலேஜ் ஆகிய ஸ்தாபனங்களை குறிப்பிட்டு சொல்லமுடியும். கிராமப் புறங்களிலே அதிகமான ஆசிரியர்கள் இல்லாத காரணத்தினல் இன்னும் அதிகமான ஆண்களையும், பெண்களையும் பயிற்சி பெறும்படி செய்யவேண்டும். இட வசதி செய்து கொடுக்கவேண்டியிருந்தாலும் அதையும் செய்து கொடுக்க வேண்டும். பேசிக் டிரெயினிங் காலேஜ் ஒரு இடத்திலே மிகவும் சிறப்பாக நடக்கும்பொழுது இன்னும் சில இடங்களிலே உள்ள சாதாரண டிரெயினிங் காலேஜுகளையும் ஆதாரக் கல்வி பி.டி. காலேஜுகளாக மாற்றி அமைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு ஆதாரக் கல்வி பள்ளிகளிலும், ஹைஸ்கூல்களிலும் விவசாயம் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர்களுக்கு தனிப் பயிற்சி கொடுக்கவேண்டும் என்று இருக்கிறது. அதை நாம் அதிகமாக வற்புறுத்த வேண்டும். இப்பொழுது கறிகாய் தோட்டம் போடுவதற்கு பள்ளிக்கூடங்களுக்கு பூமி கிடைப்பதில் அதிக கஷ்டமில்லை. இவர்களுக்கு நல்லபயிற்சி கொடுப்பதுடன், ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும் எந்தப் பள்ளியிலே குறைந்த செலவிலே நிறைய உற்பத்தி செய்கிருர்களோ, அந்தப் பள்ளிகளுக்கு நாம் ஒரு பரிசோ அல்லது வேறு விதமான ரெகக்னிஷனை கொடுத்து ஊக்குவிக்க வேண்டும். குழந்தைகளின் மதியச் சாப்பாட்டிற்காக பள்ளிக்கூடங்களில் உற்பத்தியாகும் கறிகாய்களை உபயோகப்படுத்தவேண்டும் என்று கட்டாயம் செய்தால், அதன் மூலமாக அங்கு வழங்கும் சாப்பாடும் வளமாக இருக்கும்.

[11th December 1961

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

அடுத்தபடியாக பள்ளிக்கூடங்களிலே நாம் சுகாதாரத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க விரும்புகிறோம். இதைப்பற்றி சமீபத்திலே ஒரு புள்ளி விவரக் கணக்கு எடுத்தோம். அது எனக்கே மிகவும் திகைப்பாய் இருந்தது. அநேக பள்ளிகளில் சிறுநீர் கழிக்கும் இடங்கள் ஆண்களுக்காக இரண்டும், பெண்களுக்காக ஒன்றும் என்ற முறையிலே இருக்கின்றன. கக்கூஸ்கள் மிகவும் குறைவாக இருக்கின்றன. இதுபோன்ற சுகாதாரக் குறைபாடுகள் ஏராளமாக இருக்கின்றன. புதிய கட்டிடங்கள் கட்டும்போது சுகாதார முறையிலே கக்கூஸ்களையும் சிறுநீர் கழிக்கும் இடங்களையும் ஏற்படுத்த வேண்டுமென்று வற்புறுத்துவது சுலபம். ஆனால் ஏற்கெனவே உள்ள பத்தாயிரக் கணக்கான பள்ளிகளிலே சுகாதார முறையிலே போதுமான அளவுக்கு மலஜலம் கழிக்க வசதிகள் செய்து கொடுக்கவேண்டும். மாணவர்களிடம் பொறுப்பை ஒப்படைத்து அவர்கள் அதை சரியாக உபயோகப்படுத்துமாறும் நாம் செய்யவேண்டும். இதைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே, தலையிலே மலத்தை சுமந்துச் செல்லும் கெட்ட வழக்கத்தை நாம் முற்றிலும் ஒழித்து விடுவோம் என்று நான் எதிர்பார்த்தேன். "பங்கி முக்தி"த் திட்டத்தைக் கொண்டுவந்து, தோட்டி என்று அழைக்கப்படுகிறவர்களுக்கு நாம் விமோசனம் கொடுக்க வேண்டும். மூங்கில் கூடைகளிலே மலத்தை வைத்துக்கொண்டு தலையிலே சுமந்துச் செல்லும் இந்தப் பழக்கத்தை நாம் அடியோடு நிறுத்த வேண்டும். அதற்காக அதிகமான வரிகள் போட்டாலும், பொது ஜனங்கள் கொடுக்கத் தயங்கமாட்டார்கள் என்று சொல்லிக் கொள்ள விரும்புகின்றேன்.

விவசாயத்தைப் பெருக்குவதற்காக நாம் பெரிய பெரிய அணைகளைக் கட்டுகிறோம். அதற்காக கோடிக் கணக்கான பணம் செலவு செய்து வருகிறோம். ஆனால் இந்த அணைக்கட்டுகளினால் பயன் படக்கூடியவர்கள் அந்த அணைக்காக செலவாகும் பணத்தை கொடுப்பதில்லை. பெட்டர்மெண்ட் டாக்ஸ் போட்டாலும் கொடுக்க மாட்டோம் என்று கிளர்ச்சி செய்கிறார்கள். இந்த நிலையிலே விவசாயம் தீவிரமாக நடக்கிற பல இடங்களிலே 500 ஏக்கர், 1,000 ஏக்கர் நிலம் "அஸெஸ்டு வேஸ்டாக" இருக்கிறது. அந்த இடங்களையெல்லாம் சர்க்காரே எடுத்து, பாசனத்திற்கான கிணறுகளை வெட்டி, காலனிசேஷன் ஸ்கீம் மாதிரி, விதிகளை சுலபமான முறைகளில் அமைத்து, நடக்கும்படி செய்தால், ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் பாசனத்திற்கு வரும். கோடிக்கணக்கான ரூபாய்களை செலவழிப்பதற்கு பதிலாக, ஒரு ஏக்கருக்கு 1,000 அல்லது 1,500 ரூபாய் என்று செலவு செய்து காலனிசேஷன் ஸ்கீம் மாதிரி கொண்டுவந்தால் நல்ல பலன் கிடைக்கும். எப்படி நாம் அணைக் கட்டினால் நன்மை அடைந்த மக்களிடமிருந்து பெட்டர்மெண்ட்

[11th December 1961
[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

டாக்ஸ் வசூலிக்கிறோமோ, அதே முறையில் பல தவணைகளில் இந்த விவசாயப் பண்ணைகளிலிருந்து நாம் வசூல் செய்ய முடியும். சட்டசபையிலே இதைப்பற்றி சொல்லாமல் போனாலும், நாங்கள் முயற்சி செய்து வந்து வெற்றி பெறவில்லை. ஆகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நிலம் இல்லாத விவசாயிகளுக்கு இந்த காலனைசேஷன் ஸ்கீம் போட்டு எல்லாவிதமான சலுகைகளையும் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக மதுரையிலோ அல்லது திருநெல்வேலியிலோ ஒரு விவசாயக் கல்லூரி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே அறிவிக்கப்படும் என்று எதிர்பார்த்தோம். அது இல்லையென்று தான் இப்பொழுது தெரிகிறது. ஒருவேளை பின்னர் எடுத்துக் கொள்ளப்படுமோ அல்லது நான்தான் அதை சரியாகப் பார்க்க வில்லையோ. எல்லா உயர்நிலைப் பள்ளிகளிலும், 8-வது வகுப்புவரை யுள்ள பள்ளிகளிலும், விவசாயத்தைப் பற்றியும், விவசாயத்தை ஒட்டிய கைத்தொழில்களைப்பற்றியும் நாம் அவர்களுக்கு போதிப் பதற்கு ஒரு விவசாயக் கல்லூரி இருந்தால் பல தகுதியுள்ள நிர்வாகிகளை நாம் தயார் செய்ய முடியும். ஆகவே மதுரையிலோ அல்லது திருநெல்வேலியிலோ கட்டாயமாக ஒரு விவசாயக் கல்லூரி அமைப்பதற்கு திட்டமிடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக இப்பொழுது பத்திரிகைகளிலும் மற்ற இடங் களிலும் "செமி-டாக்டர்களை"ப்பற்றி நாம் அடிக்கடி கேள்விப் படுகிறோம். பெயரே விபரீதமாக இருக்கிறது. இந்த அரைகுறை டாக்டர்களை உண்டுபண்ணுவதைக் காட்டிலும் இப்பொழுது நாம் கிராமங்களுக்காக தயாரிக்கும் "ஆக்ஸிலரி நர்சிங் மிட் வொய்பு" களுக்கு இப்பொழுது கொடுக்கும் இரண்டு வருஷ பயிற்சியோடு, மேலும் ஆறு மாதம் வேண்டுமென்றாலும் சேர்த்து பயிற்சி கொடுத்து, கஸ்தூரிபாய் நிதியிலிருந்து திட்டமிட்டு செய்வது போல, சரியான பாடத் திட்டங்களை ஏற்படுத்தலாம். சொறி, சிரங்கு மற்றும் சில்லரை வியாதிகளுக்கு சிகிச்சை செய்வது, கொஞ்சம் கஷ்டமான நோயாக இருந்தால் எந்தெந்த அறிகுறிகளின் பேரில் டாக்டர்களுக்கு அனுப்பவேண்டும் என்பது, புண்களுக்கு கட்டுக் கட்டுவது, டாக்டர் அனுமதியின் பேரில் சிறிய இன்ஜக்ஷன்கள் போடுவது இம்மாதிரியான முறை களையும் இந்த "ஆக்ஸிலரி நர்ஸிங் மிட்வொய்பு" களுக்கு சொல்லிக் கொடுத்தால் அவர்கள் கிராமப் புறங்களிலே இன்னும் நல்ல சேவையை செய்ய முடியும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதில் நூற்றுக்கணக்கானவர்கள் பயிற்சி பெற்று நல்ல வெற்றி கண்டிருக்கிறார்கள். செமி டாக்டர்கள் என்ற கெட்ட பெயர் இல்லாமல் இருக்கும். நம்முடைய சுகாதார முறைப்படி சொல்லிக்கொடுத்தால் எவ்வளவோ உபயோகமாக இருக்கும். அவர்களுக்கு இப்பொழுது கொடுப்பதை விட 500 அல்லது 600 ரூபாய்க்கு அதிகமாக மருந்துகளை வாங்கிக் கொடுத் தால் போதுமானது. அதை வைத்துக்கொண்டு எவ்வளவோ நல்ல

[11th December 1961

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

வேலைகளை அவர்கள் செய்வதற்கு வசதியாக இருக்கும். இதை வைத்துக்கொண்டு அவர்கள் கிராமத்திலுள்ள குழந்தைகளை நல்ல ஆரோக்கியமான முறையில் வைத்துக்கொள்ளுவார்கள். அவர்களுக்கு உதவியாக ஒரு அட்டெண்டரைக் கொடுத்தால் போதுமானது. அதைத்தவிர வேறு செலவு கிடையாது. இந்த திட்டத்தை ஆரம்பித்தால் கொஞ்ச நாளில் கிராமத்திலுள்ள ஜனங்கள் எவ்வளவோ ஆரோக்கியமாகவும், சுகாதாரமாகவும் வாழ்வார்கள். ஆகவே இந்தத் திட்டத்தைக் கொண்டு வரவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். குழந்தைகளுக்கு பயிற்சி அளிக்கும் ஒரு திட்டம் பற்றி அரசினர் சில காலமாக ஆராய்ந்து வருகிறார்கள் என்றும், ஒவ்வொரு மாவட்டத்திலும் வயது வந்த குழந்தைகளுக்குப் பயிற்சி அளிக்கும் ஒரு முன்னோடித் திட்டத்தை நிறுவ வரவு செலவு திட்டத்தில் இடம் செய்யப் பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சில குழந்தைகளுக்கு பணம் இருந்தாலும் இருக்கும், சில குழந்தைகளுக்கு பணம் இல்லாமலும் இருக்கும். இப்பொழுது பஞ்சாயத்துக்களை ஏ.பி.சி. டி. என்று ப்ளாக்காக பிரித்திருக்கிறார்கள். அவற்றில் டி என்பது ஏழ்மையான பிரிவு என்று சொல்லுகிறார்கள். பண வசதி இல்லாத கிராமங்களிலும் படிப்பு வசதி இல்லாத கிராமங்களிலும் இப்படிப் பட்ட முன்னோடி திட்டத்தை முதன் முதலில் கொண்டு வரலாம். அப்படிக் கொண்டு வந்தால்தான் "Looking after the weaker section of the Community" என்ற அடிப்படையில் வருவதற்கு ஏதுவாக இருக்கும். ஆகவே தரம் குறைவாக இருக்கக்கூடிய இடங்களுக்கு முதலில் இதைக் கொண்டு வரலாம். அப்பொழுது தான் மக்களுக்கு நல்ல ஊக்கம் ஏற்படும்.

அடுத்தபடியாக எல்லா இடங்களிலும் ஆஸ்டல்களை அமைப்பதாக இருந்தால் அதற்கு வேண்டிய நிதி வசதி நமக்குக் கிடையாது. அதனால் பிற்போக்காக இருக்கக்கூடிய இடங்களை முதலில் எடுத்து அவற்றிற்கு முதலில் ஆஸ்டல் வசதிகளை செய்து கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதைப்போலவே பிற்போக்காக இருக்கக்கூடிய இடங்களில் முதன் முதலாக இந்த பால்வார சிஸ்டத்தைக் அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

என்னுடைய தொகுதி மின்சார விநியோகத்தில் மிகவும் முன்னேற்றமடைந்திருக்கிறது. மின் வேகத்தில் மின்சார அபிவிருத்தி நமது ராஜ்யத்தில் நடந்து கொண்டிருக்கிறது. என் தொகுதி எந்த அளவில் மின்சாரத்தில் அபிவிருத்தி அடைந்திருக்கிறதோ அதைப்போலவே பல தொகுதிகளும் அடைந்திருக்கிறது. ஹைட்ரோ எலெக்ட்ரிக் சிஸ்டம் மின்சார வேகத்தில்தான் அபிவிருத்தி அடைந்து கொண்டிருக்கிறது. அதைப்போலவே மற்ற எல்லா திட்டங்களும் அபிவிருத்தி அடைய வேண்டும். இவற்றிலும் மிகவும் பிற்போக்காக இருக்கக்கூடிய இடங்களுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் எல்லா வகையிலும் அபி

விருத்தி அடையவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய திட்டமும் இந்த வரவுசெலவு திட்டத்தில் போடப்பட்டிருக்கிறது. அதைக்கண்டு நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். எந்தந்த திட்டங்களுக்கு என்னென்ன வசதிகள் கொடுக்க வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. அதைக் கண்டு நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். இப்படி எங்களுடைய மகிழ்ச்சியை தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri M. A. MUTHIAH CHETTIAR :** கனம் தலைவர் அவர்களே, நமது நிதி அமைச்சர் அவர்கள் பத்து வருஷமாக நமது நிதி அமைச்சராக இருந்து இப்பொழுது பத்தாவது முறையாக இந்த வரவு செலவு திட்டத்தை சமர்ப்பித்திருக்கிறார். இந்த பத்து வருஷங்களில் முக்கியமாக இரண்டு ஐந்தாண்டு திட்டங்களைக் கொண்டுவந்து நிறைவேற்றியுமிருக்கிறார். அவைகளில் அவர் எடுத்துக்கொண்ட பங்கைக் கண்டு நாம் பாராட்ட வேண்டியதுதான். அப்படி பாராட்டவும் நாம் கடமைப்பட்டிருக்கிறோம். சாதாரணமாக நிதி அமைச்சராக இருப்பது ரொம்பவும் சிரமம்தான். அப்படி இருந்தும் அவர் பத்து வருஷமாக நிதி அமைச்சராகவே இருந்து இந்த ஸ்டேட் நிதியை நல்ல முறையில் நிர்வகித்து வந்திருக்கிறார் என்றால் அதைக் கண்டு நாம் அவரை பாராட்ட வேண்டியதுதான். இப்பொழுது ஒரு இண்டெரிம் பட்ஜெட்டைக் கொண்டுவந்திருக்கிறார். அதில் மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்கு வேண்டிய அம்சங்களையும் கொண்டு வந்திருக்கிறார். கடந்த இரண்டு ஐந்தாண்டு திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்றியிருக்கிறார். மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தையும் நல்ல முறையில் வகுத்திருக்கிறார். இனிமேல் அவர் டில்லி சட்டசபைக்குப் போகிறார். அப்படி அவர் போவதால் நமக்கு சந்தோஷம்தான். நம்முடைய பாராட்டு அவர் அங்கு சென்று பணியாற்றும்போது அவருக்கு மகிழ்ச்சியாக இருக்கும். அவருக்கு உத்சாகமாக இருக்கும். அவர் அங்கு சென்றாலும் அவர் அங்கு இருந்துகொண்டே இந்நாட்டிற்கு பணி செய்ய நல்ல வாய்ப்பு ஏற்படும். இங்கு இருக்கிறபோது இந்த பத்து வருஷ காலத்தில் அவர் இந்த ராஜ்யத்தின் நிதியை நல்ல முறையில் நிர்வகித்து வந்திருக்கிறார். இப்படி பத்து வருஷகாலம் நிதி அமைச்சராக இருந்து பணியாற்றுவது என்பது சுலபமான காரியம் அல்ல. இந்த அனுபவத்தைக்கொண்டு அங்கு அவர் சென்று நமது ராஜ்யத்திற்கு வேண்டியவற்றை நல்ல முறையில் செய்வார் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கனம் தலைவர் அவர்களே, இப்பொழுது புதியதாக சொல்லிக் கொள்ள ஒன்றும் இல்லை. ஏனென்றால் அவர் சொல்லி இருக்கக் கூடிய திட்டங்களைப் பார்த்தால் அநேகமாக மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் எல்லா திட்டங்களும் நிறைவேறி விடும் என்று தோன்றுகிறது. புதியதாக சொல்லக்கூடிய திட்டம் ஒன்றும் இல்லை. அவர்களே அவைகளைப்பற்றி சொல்லி விட்டார்கள். நம்முடைய மாநிலத்தில் நிதி நிலைமையைப்பற்றி

கவனிக்கும்போது நமக்கு நிதி வேண்டுமென்ருல் அதை நிதிக் கமிஷனிடமிருந்து வாங்கிக்கொள்ளலாம் என்றும் சொல்லி இருக்கிருர். நமது ராஜ்யத்திற்கு அதிகமாக நிதி ஒதுக்க வேண்டும் என்று நிதி கமிஷனிடம் சொல்லி இருப்பதாகவும் சொல்லி இருக்கிருர். இதை கவனித்தாலும் போட்டிருக்கக்கூடிய திட்டங்களை கவனித்தாலும் நம்முடைய சர்க்கார் போட்டிருக்கக் கூடிய திட்டங்கள் எல்லாம் அனுகூலமாக நிறைவேற இருக்கிறது என்பதாகத் தெரியவருகிறது. அதற்குக் காரணம் நமது சர்க்கார் போடக்கூடிய திட்டங்கள் எல்லாம் வெற்றிகரமாக நடந்துகொண்டே வருகிறது. அதைப்போலவே இன்னும் போடக்கூடிய திட்டங்களும் வெற்றிகரமாகவே நிறைவேறும் என்று தோன்றுகிறது. இவையெல்லாம் அரசாங்கம் வாங்கக்கூடிய லோனிலிருந்து தெரியவருகிறது. அரசாங்கம் வாங்கிஇருக்கக் கூடிய கடன்களைப் பார்த்தால் அவர்கள் போட்டிருக்கக்கூடிய திட்டங்கள் எல்லாம் வெற்றிகரமாக நடக்கக்கூடிய அளவில் இருக்கும் என்று மக்கள் கருதுவதால்தான் அவர்கள் எழுப்பக் கூடிய கடன் தொகை பூராவும் கிடைத்துவிடுகிறது. ஆகவே இனி மேலும் போடக்கூடிய லோன் திட்டமும் வெற்றிகரமாக இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

நான் பல சந்தர்ப்பங்களில் சொல்லிக்கொண்டு வருகிறேன். அதாவது சுமார் பத்து அல்லது இருபது வருஷகாலமாகவே சொல்லிக்கொண்டு வருகிறேன். அதாவது நமது ராஜ்யத்தில் நீர்ப்பாசன வசதியை அதிகப்படுத்தவேண்டும் என்று அவற்றில் ஓரளவு செய்துகொண்டு வருகிருர்கள். இரண்டொரு திட்டங்கள் இன்னும் செய்யப்படாமல் இருக்கின்றன. பரம்பிக் குளம் திட்டம் சம்பந்தப்பட்ட மட்டில் அதற்கு என்று மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்தில் சுமார் 28 கோடி ரூபாய் ஒதுக்கியிருக் கிருர்கள். பாசன வசதிகளுக்கு என்று 7 கோடி ரூபாய் ஒதுக்கி யிருக்கிருர்கள். ஆகவே பரம்பிக்குளம் திட்டம் உள்பட சுமார் 30 முதல் 35 கோடி ரூபாய் வரையில் செலவிட திட்டமிட்டிருக் கிருர்கள். இவைகளில் காவேரி, கிருஷ்ணு, கோதாவரி திட்டங்களைப் பற்றி இல்லை. அதைப்பற்றி என்ன முடிவு என்பதும் தெரியவில்லை. இங்கு இப்பொழுது மராமத்து இலாகா அமைச்சர்கூட உட் கார்ந்து கொண்டிருக்கிருர். அவர் பதில் சொல்லுவார் என்று நினைக்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அவைகள் பரிசீலனையில் இருக் கின்றன. காவேரியில் வெள்ளம் வந்தது சம்பந்தமாக அதன் பிறகு ஒரு ஸூபெரிண்டண்டிங் இஞ்சினியரை ஸ்பெஷலாக நிய மித்திருக்கிறேம். அவருடைய ரிப்போர்ட் வந்த பிறகு அதைப் பற்றி முடிவு எடுக்கப்படும். அதைப்பற்றி அவர் பரிசீலனை செய்துகொண்டிருக்கிருர்.

SRI M. A. MUTHIAH CHETTIAR : வெள்ளம் வந்த பிறகு தானே நியமிக்கப்பட்டிருக்கிருர். இண்டர் ஸ்டேட் சம்பந்தமாக மத்திய சர்க்கார் இதைப்பற்றி கவனிப்பதாகச் சொல்லியிருக்

11th December 1961] [Sri M. A. Muthiah Chettiar]

கிறுர்களே. அது என்னவாயிற்று. நீர்ப்பாசனம் சம்பந்தமாக எல்லா ராஜ்யங்களும் ஒன்றுக இருக்கவேண்டும் என்று சொன்னது என்னவாயிற்று. அதைப்பற்றி கவனித்தார்களா? இப்பொழுது ஸ்பெஷலாக சூப்ரிண்டண்டிங் இஞ்சினியரை நியமித்ததைப்பற்றி சந்தோஷம். அவருடைய ரிபோர்ட் வந்த பிறகுதான் கவனிக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. ரொம்ப சந்தோஷம் ரிபோர்ட் எப்பொழுது அனுப்பிக்கவேண்டும், இத்தனை வாரங்களுக்குள் அனுப்பிக்கவேண்டும் என்று சொல்லி இருக்கிறுர்களா. அவர்கள் இஷ்டப்படாவிட்டால் அவர்கள் எப்பொழுது வேண்டுமானுலும் ரிபோர்ட் அனுப்பிப்பார்கள். 11–30 a.m. இத்தனை வாரத்திற்குள் ரிபோர்ட் அனுப்பிக்க வேண்டும் என்று சொல்ல வேண்டாமா? இதை விசாரிக்க நான்கு வாரங்களுக்கு மேல் வேண்டியதில்லே. ஏதோ ஐந்தாறு வாரங்கள் ஆகலாம். சூபரின்டெண்டிங் இன்ஜினீரை நியமித்து எத்தனையோ வாரங்கள் ஆகின்றன. அதைப்பற்றிச் சபையில் அமைச்சர் அவர்கள் விவரம் சொல்லியிருந்தால் திருப்தியாக இருந்திருக்கும். அதைச் சொல் லாதது ஏமாற்றமாக இருக்கிறது. ஒரு அதிகாரியை இதற்காக நியமிக்கிறோம் என்றுல் அவர் உடனே அறிக்கையைக் கொடுத்து விடுவார் என்று சொல்ல முடியாமலிருக்கிறது. ஒரு வருஷம், இரண்டு வருஷம் 'இன்வெஸ்டிகேட்' செய்கிறேன் என்று சொல் வதாகப் போய்விடுகிறது. இப்படிச் செய்தால்தான் உத்தியோகம் பந்தோபஸ்தாக இருக்கும் என்று நினைத்து, ரிபோர்ட் நிதான மாகத் தருவது என்ற பழக்கம் இருக்கிறது. இத்தனை வாரங்களுக் குள் ரிபோர்ட் கொடுக்கவேண்டுமென்று நிர்ணயித்திருக்க வேண்டும். அதிகாரி நியமிக்கப்பட்டு நான்கைந்து மாதங்களா கின்றன. இதற்குள் ரிபோர்ட் வந்திருக்கவேண்டும். டில்லிக்குப் பல முறை போயிருக்கலாம். நாமும் டில்லியுடன் சண்டை செய்திருக்கலாம். தென்னிந்தியாவிலிருந்து டில்லிப் பாராளு மன்றத்திற்குப் போய் இருக்கும் மெம்பர்கள் அங்கு பேசவே மாட்டேன் என்கிறுர்கள். அவர்கள் அதிகமாகப் பேசுவதையே காணேம். நம் மந்திரிகள் டில்லிக்குப் போகும்போது கூட, இங்கிருந்து சென்ற பார்லிமென்ட் மெம்பர்கள் நம்முடைய மந்திரிகளைப் பார்ப்பதுகூட இல்லே. கனம் நிதி அமைச்சர் அவர்கள் டில்லிக்குப் போயிருக்கும்போது கூட நமது பார்லி மென்ட் அங்கத்தினர்கள் அவரைப் பார்ப்பதில்லே. ஆனுல், மற்ற ராஜ்யத்திலிருந்து வந்திருக்கும் பார்லிமென்ட் மெம்பர்கள், அவரவர்களுடைய மந்திரிகள் அங்கு வரும்போது பார்த்து, நியூஸ்பேப்பர்களுக்குச் செய்திகள் 'மானுபாக்சர்' செய்து கொடுக்கிறுர்கள். 'இந்துஸ்தான் டைம்ஸ்'-இல் நியூஸ் வருவதைப் பார்க்கிறோம். 'ரொம்பப் பிரச்னை இருக்கிறது, ரொம்பப் புரட்சி இருக்கிறது' என்று சொல்கிறுர்கள். நம் மந்திரி போகும்போது நம்முடைய தென்னுட்டுப் பார்லிமென்ட் அங்கத் தினர்கள் அவரைப் பார்ப்பதில்லே. அவர்கள் அதிகமாகச் சப்தம் போடமாட்டேன் என்கிறுர்கள். அதனுல் திட்டம் வராமல் இருக்

கிறது. அவர்கள் சப்தம் போட்டு, முயற்சி செய்திருந்தால் 200 கோடி ரூபாய் அல்ல, 300 கோடி ரூபாய் செலவில் காவேரி, கிருஷ்ணா, கோதாவரித் திட்டங்கள் நமக்கு வந்திருக்கும்.

இப்பொழுது தஞ்சைக்குத் தெற்கேயும் கிழக்கேயும் உள்ள இடங்களில் தனுஷ்கோடி வரையில், கிழக்கு இராமநாதபுரம், திருநெல்வேலிப் பக்கம், மதுரைப் பக்கம் புறம்போக்காக இருந்து கொண்டிருக்கிறது. மராமத்து இலாகா மந்திரி அவர்களுக்கும் முதல் அமைச்சர் கனம் திரு. காமராஜ் அவர்களுக்கும் நிலைமை நன்கு தெரியும். மின்சார அமைச்சர் அவர்களுக்கும் தெரியும். மூன்று அமைச்சர்களுக்கும் நிலைமை தெரியும். எட்டு அமைச்சர்களில் மூன்று அமைச்சர்களுக்குத் தெரியும். அவர்களுக்குத் தெரியாது என்று அவர்கள் மறுக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன். மூன்று பேர்கள் இருந்தும், அவர்கள் சாட்சி சொல்லக் கூடிய நிலைமையில் இருந்தும் இந்தப் பகுதிக்கு ஒன்றும் ஆகவில்லை.

காவேரியைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறோம், அதன் குறுக்கே இன்னும் இரண்டு மூன்று இடங்களில் அணைகள் போடலாம் என்று. ஜேடர்பாளையத்தில், ஈரோடுக்கு கீழே அணை போடுவது என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஹொக்கனக்கல் என்னும் இடத்தில் அணை கட்டுவது பற்றி சர்வே நடப்பதாகக் கேள்விப்பட்டேன். ஜேடர்பாளையத்தைப்பற்றி சர்வே நடப்பதாகத் தெரியவில்லை. மராமத்து மந்திரி அவர்கள், இப்பொழுது ஜேடர்பாளையம், ஹொக்கனக்கல் என்னும் இடங்களில் அணைகள் கட்டுவது பற்றி சர்வே செய்வதற்கு ஏற்பாடு செய்வதாக இந்தச் சட்டசபையில் சொன்னால் அது எல்லோருக்கும் திருப்தியாக இருக்கும். அந்த சர்வேயைச் சீக்கிரமாக எடுத்துக்கொண்டால் நல்லதாக இருக்கும். இப்பொழுதிருந்தே 'டீடெயில்டு ஸர்வே' நடந்து கொண்டிருந்தால், மைசூர் ராஜ்யத்தோடு பேச்சு வார்த்தை முடிவடைவதற்குள் சர்வே வேலை முடிவதற்குச் சௌகரியமாக இருக்கும். இந்த இரண்டு திட்டங்களும் வந்தால் தான் இந்தப் பகுதி நிச்சயமான அபிவிருத்தி அடையமுடியும். மூன்றுவது திட்டத்தில் பணத்திற்கு ஏற்பாடு செய்யாவிட்டாலும், பின்னிட்டு ஏற்பாடு செய்துகொள்ளலாம். பணத்தைவிட பஞ்சாயத்து ஏற்படவேண்டியது முக்கியம். சர்வே செய்யவேண்டியது முக்கியம். பணம் எப்படியும் வந்துவிடும். ஐம்பது கோடியோ, அறுபது கோடியோ சுலபமாக வந்துவிடும். ஹைட்ரோ எலெக்ட்ரிக் திட்டங்கள் நம் ராஜ்யத்தில் எவ்வளவு அனுகூலமாக வந்தனவோ, அதுபோல் அணைத்திட்டங்களும் நிச்சயமாக அனுகூலமாக வரும். நிச்சயமாக மத்திய அரசாங்கமும் ஒத்துக் கொள்வார்கள். பணம் ஒதுக்குவார்கள். இங்கிருந்து அதிக முயற்சி இல்லாததும் சண்டை போடாததும்தான் குறையாக இருக்கிறது என்று நான் மீண்டும் தெரிவித்துக்கொள்ள ஆசைப் படுகிறேன். நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் சென்ற பத்து வருஷ காலமாக இந்த நாட்டிலுள்ள குறைகளை நன்றாகத்

11th December 1961] [Sri M. A. Muthiah Chettiar]

தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அவர் டெல்லி சென்றாலும் இந்த ராஜ்யத்திற்கு விசேஷமான உதவி பண்ணக்கூடிய நிலைமையில் இருப்பார்கள். இந்த மந்திரிசபையில் இப்பொழுது உள்ளவர்கள் செய்ததுபோல் பின்னிட்டு வருகிற மந்திரி சபையும் இந்த முயற்சியை விடாமல் செய்வார்கள் என்றும் நான் நம்புகிறேன்.

விவசாயக் கல்லூரியைப்பற்றி கனம் அங்கத்தினர் திருமதி இராமச்சந்திரன் அவர்கள் சொன்னார்கள். அது முக்கியமான விஷயம். அதோடு, கால்நடைக் கல்லூரிகள் அமைப்பதும் முக்கியமாகும். ஒவ்வொரு ஜில்லாவிலும் கால்நடைப் பண்ணை வைத்திருக்கிறார்கள். அதற்காக அந்த இலாகாவைப் பாராட்டு கிறோம். இன்னும் இரண்டு மூன்று இடங்களில் கால்நடைக் கல்லூரிகள் ஏற்படுத்தினால்தான் உதவியாக இருக்கும்.

கனம் கல்வி அமைச்சர் அவர்கள் கல்வி விஷயத்தில் மிகவும் உற்சாகமாக இருந்து, புதுப் புதுத் திட்டங்களை வகுத்து நிறை வேற்றியிருக்கிறார்கள். பல திட்டங்கள் அனுகூலமாக வந்திருக் கின்றன. எல்லாவற்றிலும் முக்கியமாக, மதிய உணவுத் திட்டம் அமைந்திருக்கிறது. எல்லா ஊர்களிலும் எல்லாப் பள்ளிக்கூடங் களிலும் இந்தத் திட்டம் ஏற்பட்டிருப்பது பெருமைப்படத்தக்க தாக இருக்கிறது.

இரண்டு வயது முதல் ஐந்து வயது வரையுள்ள குழந்தை களுக்குப் பள்ளிக்கூட வசதி செய்வதைப்பற்றி இந்தத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் எனக்குக் கொஞ்சம் அபிப் பிராய வித்தியாசம் இருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களின் ஞாபகத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இரண்டு வயதி லிருந்து குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பச் சொல்வது நியாய மல்ல. அதனால், தாய் தந்தையர்கள் குழந்தைகளை வீட்டில் வைத்து சந்தோஷப்படக்கூட முடியாமல் போய்விடும். இரண்டு வயதுக் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்தில் அனுப்புவதென்றால் பெற்றோர்களுக்கு 'அங்லையடி' யாக இருக்கும். நர்ஸரி ஸ்கூல் என்று சொல்கிறார்கள். குழந்தைகள் பொம்மையை வைத்துக் கொண்டு விளையாடும் என்றெல்லாம் சொல்கிறார்கள் ஒரு குழந்தைக்குப் 'ப்ரைஸ்' வந்துவிட்டால் மற்ற குழந்தை களுக்குப் மனது கஷ்டமாய்விடும். ஏமாற்றம் ஏற்படும். இதெல்லாம் சிறு குழந்தைகளுக்கு ஏற்படக்கூடியது. ஆக, இரண்டு வயது என்பது ரொம்பவும் குறைச்சலான வயதாகும். திருமதி இராமச்சந்திரன் அவர்கள் இது விஷயத்தில் அதிகமாகப் பழகினவர்கள். அவர்கள்கூட இதை ஆதரித்தது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நான்கு வயதுக்கு முன்னால் குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்குப் போவது நியாயமில்லை. சில தாய் தந்தையர்கள் இந்தத் திட்டத்தை விரும்பலாம். காரணம், குழந்தைகள் வீட்டிலிருந்தால் தொந்திரவு என்று கருதக் கூடியவர்களாக் இருப்பார்கள். அப்படிப்பட்டவர்கள் குழந் தையைப் பள்ளிக்கூடத்திற்குத் தள்ளிவிட்டுவிடுவார்கள்.

என்னுடைய அபிப்பிராயத்தில் இரண்டு வயது என்பது மிகவும் குறைந்த வயதாகும். நான்கு வயது என்றிருந்தால் நியாயமாக இருக்கும். இரண்டுக்கும் மத்தியில் மூன்று வயது என்பதை நான் ஒத்துக்கொள்வேன். இதுகூட சரியல்ல. ஏற்பாடு நல்ல ஏற்பாடு தான். மேல் நாட்டிலே ஆறு வயதுக்குள்ளே குழந்தைகளைச் சேர்த்துக்கொள்வதில்லை. ஆனால், ட்ராபிகல் கண்ட்ரியாகிய நம் நாட்டில் நான்கு வயதுக்குக்கூடப் பள்ளிக்கூடம் போகும் நிலைமை வந்து விடுகிறது. இரண்டையும் ஆலோசிக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த அழகான வரவு-செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்திருப்பதற்காக அவரை நான் பாராட்டுகின்றேன். இந்தப் பத்து வருஷ காலமாக இவ்வளவு அழகாக நம் ராஜ்யத்தின் நிதி நிலைமையை வைத்திருப்பதற்கும், நல்ல பல வேலைகளைச் செய்து நம் ராஜ்யத்திற்கு நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொடுத்ததற்கும் அவரை நான் பாராட்டுகின்றேன். பத்து வருஷ காலமாக வரவு செலவுத் திட்டத்தைக் கொண்டு வந்து நல்ல பல திட்டங்களை நிறைவேற்றியதற்காக இந்த மந்திரி சபையாரையும் நான் பாராட்டி என் உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* **SRI S. RAMASWAMI THEVAR:** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, எனக்கு முன் பேசிய பல கனம் அங்கத்தினர்கள் நமது பொது மன்றத்திலேயே தேர்தல் விஷயத்தைப் பற்றி அதிகமாகப் பேசிவிட்டார்கள். இந்த நிதி நிலை அறிக்கையில் சின்ன குறைபாடுகள் இருக்கின்றன. இவைகளை நீக்குவதற்கு என்ன என்ன தேவை என்பதை ஆராயாமல் தேர்தல் விஷயத்தைப்பற்றிப் பேசுவது சற்று வருந்தத்தக்க விஷயமாகும்.

(Srimathi T. N. Anandanayaki in the Chair.)

ஆண்டுதோறும் வரி விதிப்பு கூடிக்கொண்டே போகிறது. இந்த ஆண்டிலும் குறைந்தபாடில்லை. வரி நீங்கினபாடில்லை. ஆண்டுக்கு ஆண்டு கோடிக் கணக்கில் வரி உயர்ந்துகொண்டு போகிறது. எந்த அளவில் இந்த வரி விதிப்பு போய் நிற்குமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. வரி அதிகமாகிக்கூட வரவு செலவில் துண்டு விழுகிறது. இதைச் சரிக்கட்ட இன்னும் அதிக வரி போட வேண்டியிருக்கிறது. வரிச் சுமையை மக்கள் தாங்கக்கூடிய நிலையில் இருக்கிறார்களா என்று பார்க்கவேண்டும். நடுத்தர வர்க்கத்தினர் எங்கு பார்த்தாலும் கடன்பட்டவர்களாக இருக்கிறார்கள். நடுத்தர விவசாயி, சாதாரண தொழிலாளி முதற் கொண்டு கடன்படாமல் இல்லை. அந்த அளவு மக்களிடத்திலே கடன் சுமை ஏற்பட்டிருக்கிறது. இதைக் குறைக்க வழிகாண வேண்டும். வரி வசூலிக்கும் முறையும் மோசமாக இருக்கிறது. இதுபற்றி இரண்டு மூன்று கூட்டங்களில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் பேசியபோது, இதைச் சரி செய்வதாகச் சொன்னார்கள்.

அதுபற்றி நான் எழுதிய கடிதத்திற்குக்கூட இன்றுவரை ஒருவித மான பதிலும் வரவில்லை. அதற்கு விமோசனம் கண்டதாகத் தெரியவில்லை.

வரி அதிகமாகிக்கொண்டிருக்கும்போதே விலைவாசி ஏறிக் கொண்டிருக்கிறது. விஷம் போல் விலைவாசி ஏறிக்கொண்டிருக் கிறது. என்.ஜி.ஓ.-க்களுக்குச் சிறு தொகை சம்பள உயர்வு கொடுத்திருக்கிறோம் என்று பெருமைப்படுகிறோமேயொழிய, அதைக்கொண்டு விலைவாசி உயர்வைச் சமாளிக்க முடியவில்லை. 10 ரூபாய் உயர்வு என்றால் இருபது ரூபாய் அதிகப்படியாகச் செல வழிக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. விலைவாசி ஏற்றத்தைத் தணிப்பதற்கு ஒரு வழியும் செய்யப்படவில்லை என்பதை நான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்கிறேன்.

நாம் சம தர்ம சமுதாயத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக் கிறோம் என்றெல்லாம் பேசப்படுகிறது. ஆனால், மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு அதிகச் சம்பளமும் நம்முடைய ராஜ்யத்தில் வேலை செய்கின்றவர்களுக்குக் குறைந்த சம்பளமும் கொடுக்கப் படுகிறது. இதிலே ஏன் வித்தியாசம் காட்டப்படுகிறது என்பதை அமைச்சர் அவர்கள் கவனிக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

நிதி நிலை அறிக்கையில் சில நல்ல அம்சங்களும் இருக்கின்றன. 65 வயதுக்கு மேற்பட்ட அனாதைகளுக்கு பென்ஷன் கொடுக்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. இது வரவேற்கத்தக்கதுதான் ஆனால் இது சரியான முறையில் நடத்தப்படுமா என்ற சந்தேகம் எழுகிறது. ஹரிஜனங்களுக்கு மாடுகள் இனமாக வழங்கப் படுகிறது. கடன்களும் கொடுக்கப்படுகின்றன. இவை சரியான முறையில் கொடுக்கப்படுவதில்லை. சாதாரண ஹரிஜனங்கள் ஒரு ஜோடி மாடு வாங்குவதற்குள் பெரும் பாடாகிவிடுகிறது. 'நானூறு ரூபாய் பெறுமான மாடு சும்மா தானே வரப்போகிறது, ஏதாவது கொடு' என்று கேட்டு தொல்லை செய்வதும் இருக்கிறது. இன்னும் ரூபாய் செலவழிக்கவேண்டிய நிலைமையும் ஏற்படுகிறது. அந்த நிலையைப் போக்குவதற்கு நாம் முயற்சி செய்யவேண்டும். நாம் எவ்வளவு நல்ல திட்டங்களைத் தீட்டினாலும் கூட, அவை சரி வர நிறைவேற்றப்படுகிறதா, மக்கள் நன்மைகளைப் பெறுகிறார்களா என்பதை நல்லமுறையில் கவனிக்கவேண்டும். அதில் எப்போதும் கருத்து இருக்கவேண்டுமே தவிர திட்டங்களைத் தீட்டிவிட்டுப் பெரும் பெரும் தொகைகளை ஒதுக்கினால் மாத்திரம் போதாது என்பதைப் பலமுறை சொல்லியிருக்கிறேன். மீண்டும் இப்போது தெரிவித்துக்கொள்கிறேன்.

கட்டாயக் கல்வியை எத்தனையோ ஆண்டு காலமாகக் கொண்டு வருகிறோம் என்று சொல்கிறார்களே தவிர அது நல்லமுறையில் செயல்படத்தக்க வகையில் அதைக்கொண்டுவரவில்லை. இலங்கை போன்ற சிறு நாடுகளில் கூட கட்டாயக் கல்வியை ஏற்படுத்தி நல்லமுறையில் செயல்படுத்துகிறார்கள். அதைப்போல நாமும் அவசியம் செய்யவேண்டும். அறியாமையைப் போக்கினால்தான் மக்களுடைய வாழ்வு சுபீட்சம் அடையும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

மதிய உணவுத் திட்டம் புதுத் திட்டம். அது நடைமுறையில் இருந்து வருகிறது. இதிலும் பல கோளாறுகள் நாட்டில் நடந்து வருகின்றன என்று தெரிவிக்க விரும்புகிறேன். ஆரம்பத்திலே மத்திய உணவு திட்டத்திற்காக கிராமங்களிலேயே ஆசிரியர்கள் நன்கொடை வாங்கினர்கள். மறுபடியும் நன்கொடை இப்பொது வாங்குவது கிடையாது. சர்க்கார் கொடுக்கக்கூடிய பணத்தைக் கொண்டே இப்போது அத்திட்டம் கிராமங்களில் நடந்து வருகிறது. இன்னும் அதிகமான தொகையை அத்திட்டத்திற்காக ஒதுக்கி அதை நல்லமுறையில் செயல்படுத்தவேண்டும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மதிய உணவுத் திட்டத்தினல் பள்ளிக்கூடத்தில் படிப்பின் தரம் குறைகிறது. வாத்தியார்களுக்கு எல்லாம் வேலை அதிகமாகப் போய்விட்டது. எடுத்ததற்கு எல்லாம் கணக்கு, மாதம் இரண்டுமுறை பால் பௌடர் முதலியவற்றை வாங்க ஹெட்குவார்டர்சுக்குப் போகவேண்டிய ஜோலி எல்லாம் வளர்ந்துவிட்டது. நான்கு ஆசிரியர்கள் இருக்க வேண்டிய இடத்தில் ஒரு ஆசிரியர்தான் இருக்கிருர். இதைக் கவனிக்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். படிப்பு மிக அவசியம். வெறும் வெளிப்படையாக, ஆடம்பரமாக பிரசார ரீதியில் இது அமையாது உண்மையில் மக்களுக்குக் கல்வி அறிவு புகட்டக்கூடிய அளவில் இத்திட்டம் அமுலாக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பிச்சைக்காரர்களுக்கு ஊதியம் கொடுப்பது இல்லை என்று சொல்லப்படுகிறதே தவிர நாட்டில் இன்னும் பிச்சைக்காரர்களை வளர்க்கவேண்டுமா? இப்போதே எங்கே பார்த்தாலும் பிச்சைக்காரர்கள் தொல்லை, பஸ் ஸ்டாண்டில், ரயில்வே நிலையத்தில்—எங்கே பார்த்தாலும் இப்படித்தான். ஒருவழியாக பிச்சை எடுக்கும் தொழிலேயே ஒழித்துக்கட்ட சர்க்கார் ஏதாவது செய்ய வேண்டும். இவர்களை அநாதைகளாகவாவது கருதி போனஸ் கொடுத்து உதவி செய்யவேண்டும்.

பொது சுகாதாரத்திலே கூட நாம் அதிகமாக முன்னேறியிருக்கிறோம் என்று சொல்லப்படுகிறது. ஏனைய நாடுகளைப் பார்க்கும் போது நாம் இத்துறையிலும் கீழேதான் இருக்கிறோம். இங்கிருந்து இலங்கை போகவேண்டுமென்றால் அம்மை ஊசி குத்திக் கொண்டுதான் போகவேண்டும் என்கிருர்கள். ஆனல் இலங்கை, மலேயா போன்ற இடங்களிலிருந்து இங்கு வருகிறவர்களுக்கு அந்த நிபந்தனை கிடையாது. இதிலிருந்து நம் நாட்டை எவ்வளவு கேவலமாக மதிக்கிருர்கள் என்பது தெரியும். முக்கியமாக இன்றையதினம் எங்கள் அரந்தாங்கி பகுதியில் பெரியம்மை நோய் இருந்துகொண்டே இருக்கிறது. அவ்வப்போது ரிப்போர்ட் செய்தேன். இரண்டு மூன்று பேர்கள் வந்து ஊசி குத்திஞர்கள். மறுபடியும் இப்போது சென்ற இரண்டு மூன்று மாதங்களுக்குள்ளாக நூற்றுக்கணக்கான குழந்தைகள் இந்த நோய்க்குப் பலியாகியிருக்கிருர்கள். வயதானவர்களில் நாற்பது ஐம்பது பேர்கள் பலியாகியிருக்கிருர்கள். இந்தக் குறையை உடனடியாகப் போக்கவேண்டும்.

11th December 1961] [Sri S. Ramaswami Thevar]

அரந்தாங்கி ஆஸ்பத்திரிக்கு ஒரு லேடி டாக்டரை ஒரு வருஷம் முன்பு நியமித்திருப்பதாகச் செய்தி வந்தது. ஆனால் இன்னும் அந்த டாக்டர் வரவில்லை. மருந்தும் கொடுப்பது இல்லை. இதையும் கவனிக்கவேண்டும். நீர்ப்பாசனத்திற்கு அதிகமாகப் பணம் ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறதே தவிர என் பகுதிக்கு ஒன்றும் இல்லை. மேட்டூர் கால்வாய் ஏற்பட்ட காலத்தில் அரந்தாங்கி வழியாக அது பாயவேண்டுமென்ற ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. புதுக்கோட்டை சுதேச சமஸ்தானமாக அப்போது இருந்ததால் வரவில்லை. அதற்குப் பிறகு அந்தப் பகுதி நம்மோடு இணைந்து விட்டது. 1948-ஆம் ஆண்டு நமது மதிப்பிற்குரிய முதல் அமைச்சர் தலைமையில்—உளவிவகார அமைச்சரும் சேர்ந்து பேசி இனிமேல் அரந்தாங்கி வழியாக அந்தக் கால்வாய் பாய முதன்மை ஸ்தானம் கொடுக்கவேண்டும் என்று சொன்னார்கள். அது இது வரையிலும் கவனிக்கப்படவில்லை. சேலம், கோயம்புத்தூர் போன்ற வேறு இடங்களுக்கு காவேரி நீர் இப்போது போகிறது. அதைப்பற்றி வருத்தப்படவில்லை. எங்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதி நிறைவேற்றப்படவில்லையென்பதைத்தான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்கிறேன். இனிமேலாவது கொடுக்கும் உறுதிகளை நிறைவேற்றும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

தொழில் அபிவிருத்தி சம்பந்தமாகப் பல திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. எங்கள் பகுதியோ பிற்பட்ட பகுதி. இது வரையில் அங்குள்ள மக்கள் இலங்கையை நம்பிக்கொண்டிருந்தார்கள். இனி அங்கு கூலிப் பட்டாளமாகக் கூடப் போக முடியாது. அவர்கள் நல்ல ஊக்கமுள்ள தொழிலாளிகள். அவர்கள் நிலைமையைப் பாதுகாக்க தக்க கவனம் செலுத்தி தொழில்கள் பல எமது பகுதியில் அமைக்கவேண்டுமென கேட்டுக்கொள்ளுகிறேன்.

மின்சாரத்தைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. எங்கே பார்த்தாலும் மின்சாரம், ஆயிரக்கணக்கான கிராமங்களுக்கு மின்சாரம் அளிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. ஆனால் அரந்தாங்கி தாலுக்காவை எடுத்துக்கொண்டால் அரந்தாங்கி நகரத்தைத் தவிர வேறு எங்கும் மின்சாரம் கிடையாது. அதையும் கவனித்துச் செய்யவேண்டுமென்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM** : கனம் சட்டமன்ற தற்காலிகத் தலைவி அவர்களே, இன்றைக்கு இடைக்கால பட்ஜெட்டை வரவேற்கும் முறையில் நான் சில வார்த்தைகள் பேச விரும்புகின்றேன். இந்தச் சட்டசபையில் இருக்கிற அங்கத்தினர்கள் எல்லோரும் சென்ற தேர்தலில் வெற்றி பெற்று இங்கே வந்திருந்து 5 வருடங்கள் முடிகின்றது. இந்த ஐந்து வருடத்திற்கும் இதுதான் கடைசிக் கூட்டம். எனவே எல்லோரும் ஒருவருக்கொருவர் இந்த ஐந்து வருஷங்களாக செய்திருக்கும்படியான பணிகளை எடுத்துச் சொல்லி ஞாபகப்படுத்திக்கொண்டு, வெளியில் சென்று மறுபடியும் தேர்தலில் வெற்றிபெற்று வரப் போகிறார்கள்.'

[Srimathi P. K. R. Lakshmikantham] [11th December 1961

இந்த நிலைமையில் நாம் இடைக்கால பட்ஜெட்டை வரவேற்றுப் பேசுகிறோம் என்று சொன்னால் மகிழ்ச்சி அடையவேண்டும். இந்த இடைக்கால பட்ஜெட்டானது ஐந்தாண்டுத் திட்டத்தை மேன் மேலும் ஊக்கப்படுத்தி நமது சர்க்கார் இயந்திரங்கள் எந்தளவு இதை உற்சாகமாக நிறைவேற்ற வேண்டும் என்பதை அழுத்த மானமுறையில் செயல்பட இது உதவும் என்று சொன்னால் அது மிகையாகாது. கனம் நிதியமைச்சர் அவர்களின் உரையை இனி நாம் கேட்க முடியாது என்று வருத்தப்பட்டாலும் கூட அவர்கள் நம் தமிழ் நாட்டின் கடமையை நிறைவேற்றுவதற்காக மக்கள் சபைக்கு செல்கிறார்கள் என்று நினைக்கும்போது நாம் மகிழ்ச்சி யடைய வேண்டும். இப்பட்ஜெட்டை ஒரு சிலர் தேர்தல் அறிக்கை யென்று அவர்கள் நினைப்பது மிக மிகத் தவறு என்று சமர்ப்பித்தபோதும் கூட எதிர்கட்சியினர் ஒரு முகமாக இது தேர்தல் அறிக்கை போன்றிருக்கிறது என்று அன்றும் கூறினார் கள், இன்றும் கூறிகிறார்கள். இதைத் தேர்தல் அறிக்கை யென்று அவர்கள் நினைப்பது மிக மிகத் தவறு என்று நான் எடுத்துக் கூற ஆசைப்படுகிறேன். இது ஐந்தாண்டுத் திட்டத்தின் ஒரு பிரதிபலிப்பே தவிர தேர்தல் அறிக்கையல்ல. ஐந்தாண்டுத் திட்டத்தை ஏற்படுத்தி அந்த அந்த வருடத்திற்கு வேண்டிய திட்டங்களை நிறைவேற்றவேண்டியதற்குரிய செயல் முறைகளை செய்வதற்குத்தான் நாம் பட்ஜெட்டில் இடம் கொடுக் கிறோம். ஆகவே இதை தேர்தல் அறிக்கை என நினைப்பது மிக மிகத் தவறு. அவர்கள் கண்ணோட்டம் எல்லாம் தேர்தலிலேயே இருப்பதால்தான் இவ்வாறு அவர்களால் நினைக்க முடிகிறது என்று நான் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டத்திலும் எவ்வளவோ கோடிக் கணக்கான ரூபாய் செலவு செய்து நல்ல பல திட்டங்களை தீட்டுவதன் மூலமாக எவ்வளவோ நன்மைகளை நாம் நாட்டில் பெற்றுக் கொண்டு வருகிறோம். எவ்வளவோ திட்டங்கள் போடுகிறோம். அதே போன்று இந்த இடைக்கால பட்ஜெட்டிலும் முதியவர்களுக்கு 20 ரூபாய் கொடுக்கும் பென்ஷன் திட்டம் வந்திருப்பது முதியவர் களுக்கெல்லாம் மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்பதில் சந்தேக மில்லை. ஆனால் பிச்சைக்காரர்களுக்கு ஏன் கொடுக்கக்கூடாது என்று ஒரு சிலர் கேட்கிறார்கள். நம் நாட்டில் பிச்சைக்கார கூட்டம் இருக்கவே கூடாது, நாட்டிலுள்ள ஒவ்வொரு மனித சக்தியையும் தொழிலிலோ அல்லது விவசாயத்திலோ ஈடுபடுத்தி அவர்களை பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென்று நினைப்பவர்கள் பிச்சைக்காரர்களுக்கு ஊக்கம் அளிக்கவே மாட்டார்கள். ஆகவே தான் பரம்பரையாக பிச்சை எடுக்கக்கூடியவர்களுக்கு இத் திட்டத்தில் இடமில்லையென்று சொல்லியிருக்கிறார்களே தவிர, குஷ்ட நோய் பீடிக்கப்பட்டு கஷ்டப்படுபவர்கள், குருடர்கள், நொண்டிகள், இவர்களுக்கெல்லாம் இத்திட்டத்தில் இடமில்லை யென்று யாரும் கூறவில்லை. ஆகவே, சாதாரண பிச்சைக்காரர் களுக்கு இத்திட்டம் இருக்கக்கூடாது. அடுத்தபடியாக, நெசவாளர்கள் பிரச்னை என்று வரும்போது நெச

11th December 1961] [Srimathi P. K. R. Lakshmikantham]

வாளர்களுக்கு காலனிகள் கட்டிக் கொடுக்கிறோம். கூட்டுறவில் சேர்ந்த நெசவாளர்களுக்கு வீடுகட்டும் திட்டம் மூலம் அவர்களுக்கு காலனிகள் அமைத்துக் கொடுக்கிறோம். அத்திட்டத்தில், மதுரை நகருக்கு அதிகமான அளவில் வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு திட்டத்தில் முதலிடம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். காரணம், மதுரை நகரம் இப்பொழுது அதிகமாக அபிவிருத்தியடைந்து கொண்டு வருகிறது. ஒரு தொழில் க்ஷேத்திரமாகிக் கொண்டு வருகிறது. வந்து போகிற மக்களின் கூட்டம் அதிகமாகிக் கொண்டு வருகிறது. அங்கு தொழிற்சாலைகள் ஏற்படுவதால் மக்கள் கூட்டம் அதிகமாகிறது. அங்கு வீடுகள் கிடைப்பது மிகக் கஷ்டமாகயிருக்கிறது. ஆகவே மதுரை நகரிலுள்ள கூட்டுறவு நெசவாளர்களுக்கு அதிகப்படியான வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இவர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதன் மூலம் மதுரை நகரிலுள்ள வீட்டுக் கஷ்டமும் சிறிது நிவர்த்தியாகும். மேலும் நமக்கு அடக்கமாகிற விலைக்கு அவர்கள் மாதா மாதம் கொடுக்கிற வாடகையையும் அவர்களால் கொடுக்க முடியும். ஆகவே மதுரை நகருக்கு இத்திட்டம் மூலம் அதிகப்படியான வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இரண்டாவதாக, கூட்டுறவில் சேராத நெசவாளிகளுக்கும் சர்க்கார் உதவி ஓரளவாவது கொடுக்க வேண்டுமென்ற கொள்கையை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அக்கொள்கையை நிறைவேற்றுவதற்கு இன்னும் அதிகமான முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. பைனான்ஸ் கார்ப்பரேஷன் என்று நிறுவி அதன் மூலம் கூட்டுறவில் சேராத நெசவாளிகளுக்கு உதவி செய்யப்படுமென்று கூறினார்கள். அவ்வகையில் கூட்டுறவில் சேராத நெசவாளிகளுக்கு வீடு கட்டும் திட்டம், ப்ராவிடன்ட் பண்ட் திட்டம்—க்ஷேமநல உதவி—இவைகளை எதன் மூலம் அவர்கள் கட்டமுடியும் என்பதை ஒரு கமிட்டி நியமித்து அவர்கள் பரிசீலனை செய்து பார்த்தால்தான் நாம் நல்ல யோசனைகளையெல்லாம் பெறமுடியும். ஆகவே அதற்கு சர்க்கார் ஒரு கமிட்டி ஏற்படுத்தி பரிசீலனை செய்து அதற்கு ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் மார்கட்டிங் சொஸைட்டி ஏற்படுத்தி தனிப்பட்ட நெசவாளர்களை வைத்துக் கொண்டு உற்பத்தி செய்கிற மாஸ்டர் வீவர்கள் மார்க்கெட்டிங் சொஸைட்டி என்று ஏற்படுத்தினால்தான் பைனான்ஸ் கார்ப்பரேஷனிலிருந்து அவர்கள் நிதி உதவி, கடன் பெற முடியும். அப்படி மார்க்கட்டிங் சொஸைட்டி ஏற்படுத்த முன் வருபவர்களுக்கு எந்தவித தடையும் இல்லாமல் அவர்களுக்கு அந்த சொஸைட்டிகள் ஏற்படுத்திக் கொடுப்பதற்கு அதிகாரிகள் உதவியாகயிருக்கவேண்டும். மிகச் சீக்கிரமாக அவர்களுக்கு பதிவு செய்து கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். நில அடமான பாங்க் போன்று அர்பன் வீடு அடமான பாங்கும் நகரங்களில் இருக்கின்றன. மதுரையில் ஒன்று இருக்கிறது. ஆனால் அந்த ப்ாங்கில் அதிகமான அளவு 5,000 ரூபாய்தான் கொடுக்கப்படும் என்று பைலாவில் இருக்கிறது. அந்த 5,000

[Srimathi P. K. R. Lakshmikantham] [11th December 1961

ரூபாய் என்பதை 10,000 ரூபாய் என்று ஆக்கப்படவேண்டுமென்று நான் கருதுகிறேன். காரணம் சாதாரண கூட்டுறவு பாங்குகள் கூட வீடுகள் அடமானத்தின் பேரில் 5,000 ரூபாய் கொடுத்து விடு கிறார்கள். ஆனால் நகரங்களில் இருக்கிறவர்கள், தற்கால விலை வாசிக்கு ஏற்றாற்போல் வீட்டை திருத்தியமைத்துக் கொள்ளவோ அல்லது மாடி கட்டிக்கொள்ளவேண்டுமென்றால் 5,000 ரூபாய் போதுமானதாகாது. ஆகவே அர்பன் வீடு அடமான பாங்கி மூலம் குறைந்தபட்சம் 10,000 ரூபாயாவது கொடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். பின்னர், மதுரையில் கூட்டுறவு முறையில் ஒரு நூற்பாலை வேண்டும். அப்படி மதுரைக்கு ஒரு நூற்பாலை வேண்டுமென்று சொல்லக் காரணம், மதுரை நகரம் நெசவாளிகள் நிறைந்ததொரு நகரம். சுற்றிலும் நெசவாளிகள் நிறைந்திருக்கிறார்கள். கூட்டுறவு ஆலை நிறைவேற்றுவதா மூலம் நெசவாளர்கள் சங்கங்கள் அதில் பணம் போட்டு ஷேயர்ஸ் சேர்த்து அதிலிருந்து வருகிற ஓரளவு நன்மையை நெசவாளர் சங்கங்கள் அனுபவிக்க முடியும். நெசவாளர்களும் அனுபவிக்க முடியும். அதோடு உற்பத்தி செய்கிற நூலை அங்கேயே செலவழிக்க முடியும். ஆகவே, மதுரையில் ஒரு நூற்பாலை வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

12-00 noon வயோதிகர்களுக்குப் பென்ஷன் திட்டம் ஏற்படுத்துகின்ற இந்த நேரத்தில் விதவைகளைப் பற்றிச் சொல்லாமல் என்னால் இருக்கவே முடியாது. விதவைகளில் ஒரு சிலருக்கு ஏதோ சிறு சிறு வேலை இருக்கிறது. ஆனால் பலருக்கு வேலை இல்லாமல் சில குழந்தை களையோ அல்லது பல குழந்தைகளையோ வைத்துக் கொண்டு காப்பாற்ற முடியாமல் எங்கே அனாதை இல்லங்கள் இருக்கும், எங்கே அனாதை ஆச்ரமங்கள் இருக்கும், அங்கே சேர்த்து விட்டால் நம்முடைய கஷ்டங்கள் தீராதா என்று தினசரி எங்கள் இல்லத்திற்கு வந்து போகின்ற விதவைகளின் கூட்டத்தின் அளவு சொல்லி முடியாது. ஆகையால் அப்பேற்பட்ட விதவைகளுக்கும் இந்தத் திட்டத்தை வழங்க வேண்டும். அது மட்டுமல்லாமல் அவர்கள் வேலை செய்வதற்கு ஒரு உற்சாகத்தைக் கொடுக்கவேண்டுமென்று சொன்னால் அத் தகைய விதவைகளுக்கு பால் மாடு இனாமாகவோ அல்லது கடனா கவோ எந்த முறையிலாவது அவர்களுக்கு பால் மாடு வாங்கிக் கொடுக்கும் திட்டத்தை நாம் ஏற்படுத்தினால் தான் ஒருவாறு அவர்கள் பால் மாட்டை வைத்துக்கொண்டு பால் விற்பனை செய்வதன் மூலமாகத் தங்கள் குழந்தைகளைக் காப்பாற்றவாவது முடியும். ஆகவே விதவைகளுக்காக இந்தத் திட்டத்தையும் அவசியம் கொண்டு வரவேண்டுமென்று நான் கேட்டுக்கொள் கிறேன். அம்மாதிரி ஏதாவது ஒரு வழிவகை செய்தால்தான் அவர்களுடைய கஷ்டம் நீங்குவதற்கு வழி இருக்கும்.

அடுத்தபடியாக, மாணவர்களுக்கு வட்டியில்லாக் கடன் கொடுக்கும் திட்டம் ஒரு மிகச் சிறந்த திட்டம். ஏனென்றால் இப்போது சென்ட்ரல் ஸ்காலர்ஷிப்பைப் பார்க்கும்போது மாண வர்களுக்கு—பின் தங்கிய மாணவர்களுக்கு—போதிய மார்க்குகள்

இருந்தாலும்கூட, 60 சதவிதம் மார்க்குகள் இருக்கின்றவர்களுக்கு இந்த ஸ்காலர்ஷிப் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் வருகின்றவர்களுக்கு 70 சதவிதம் இருந்தாலும் கிடைக்க வழியில்லாமல் போகின்றது. ஆகவே, இந்தத் திட்டம் ஒரு உயர்ந்த திட்டம். ஆனல் அது தற்காலிகமாக என்.ஜீ.ஓ.-க்களின் குழந்தைகளுக்கு முதலில் ஆரம்பிக்கப்படும் என்று சொல்லியிருக்கிறார்கள். அது வரவேற்கப்பட வேண்டியதுதான். அதேபோல நெசவாளர்களின் குழந்தைகளுக்கும் முதலிடம் கொடுத்து உதவவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதன் மூலமாகத்தான் அவர்களைக் கல்வித் துறையில் நாம் முன்னேற்றத்திற்குக் கொண்டுவர முடியும் என்று நான் சொல்லிக்கொள்கிறேன்.

மேலும் கூட்டுறவில் சேராத நெசவாளர்களுக்கு மனைக்கட்டு வழங்கும் திட்டத்தையாவது உடனடியாகக் கொண்டுவர வேண்டும். சர்க்கார் புறம்போக்கு நிலங்களை ஒருவாறு சீர்படுத்தி மனை மனையாகத் திட்டப்படுத்தி அவர்களுக்கு பேஸ்மெண்ட் வரையில் உருவாக்கிக் கொடுத்தால் அதன் மூலம் அவர்கள் ஒரு சிறு தொகை கொண்டு வீடுகள் கட்டிக் கொள்ள வசதியாக இருக்கும். ஆகவே மனை வழங்கும் திட்டம் என்று கூட்டுறவில் சேராத நெசவாளர்களுக்காக ஏற்படுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றவர்களுக்கு அயல் நாட்டு பட்டுகள் மிகவும் தேவையாக இருக்கிறது. அந்த பட்டுகள் காலாகாலத்தில் கிடைப்பதில்லை. ஸ்டேட் டிரேடிங் கார்ப்பொரேஷன் மூலமாகக் கொடுக்கிற காரணத்தினால் அதிக காலதாமதம் ஆகின்றது. போதிய அளவு பட்டும் கிடைக்காமல் நெசவில் ஈடுபட்டிருக்கின்றவர்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். நூலை மட்டும் அவர்கள் தறியில் நெய்தால் அந்த அளவு கூலி கிடைப்பதில்லை. பட்டும் நூலும் சேர்ந்து நெய்த உருப்படிக்குக் கிடைக்கும் கூலி வெறும் நூலில் நெசவு செய்கிறவர்களுக்குக் கிடைப்பதில்லை. அதே நெசவு செய்து பழக்கப்பட்டவர்களுக்கு மற்ற நெசவு செய்வது என்றால் அதுவும் கஷ்டமானது. ஆகையால் பட்டுகள் வேண்டிய அளவு கிடைக்க வசதி செய்து தரப்பட வேண்டும். இன்னும் கொஞ்சம் அதிகமான பட்டு அவர்களுக்கு காலாகாலத்தில் கிடைத்தால் அந்தத் தொழில் நிற்காமல் சிறந்த முறையில் நடப்பதற்கு ஏதுவாக இருக்கும். ஆகவே, அப்பேற்பட்ட ஒரு நல்ல காரியத்தை உடனடியாக சர்க்கார் செய்ய வேண்டுமென்றும் நான் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, மதுரையில் இரண்டு, மூன்று நாட்களுக்கு முன்பு மழைத் தண்ணீர் ஆற்றில் வேகமாக வந்தபோது மக்கள் பயந்தார்கள். சென்ற வருஷம் போல் வெள்ளம் வந்துவிடுமோ என்று பயந்தார்கள். ஆகையால் ஆரப்பாளையம் முதல் குருவிக்காரன் பாளையம் வரை இரண்டு பக்கத்திலும் வெள்ளத் தடுப்புச் சுவர் எழுப்பவேண்டும். அதற்கு கனம் மின்சார அமைச்சர்கூட ஆறு மாதங்களுக்கு முன்பு மதுரை கமிஷனரையும் மதுரை சேர்மனை

யும் அழைத்து ஆலோசனை செய்தார்கள். ஆகவே இரண்டு அல்லது மூன்று லட்சம் ரூபாய் செலவானாலும் இந்த மாதிரி தடுப்புச் சுவர் உடனே எழுப்ப வேண்டும். அப்படி எழுப்பினால்தான் இந்தமாதிரி வெள்ளம் வரும்போதெல்லாம் நாம் பயப்படாமல் இருக்க முடியும். அது மட்டுமல்லாமல் இரு கரை ஓரத்திலும் தோட்டங்களாக அமைத்து மதுரை நகரத்தையும் அழகுபடுத்த முடியும். ஆகவே இந்தத் திட்டத்தையும் உருவாக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக பெண்களுக்கு தொழில் பயிற்சிப் பள்ளி ஏற் படுத்த வேண்டுமென்று சொல்லிக்கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்கிறேன்—வணக்கம்.

Sri V. SANKARAN : கனம் தற்காலிகத் தலைவி அவர்களே, இந்த அறிக்கையிலே நல்ல பல அம்சங்களும் திட்டங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. முதலாவதாக வயோதிகர்களுக்கு பென்ஷன் வழங்குவது என்ற திட்டம் எல்லாப் பக்கத்திலும் வர வேற்கவேண்டிய திட்டம் இதிலே கொடுக்கப்பட்டிருக்கின்றது. எனக்கு முன்னால் பேசிய நண்பர் சொன்னதுபோல இந்தத் திட்டத்தில் பிச்சைக்காரர்களை ஒதுக்கப்போவதாகப் போடப்பட் டிருக்கிறது. அது அடிப்படையில் சரியானதுதானா என்று பார்க்கவேண்டும். பிச்சைக்காரர்கள் இது போன்ற வசதி இல்லாத காரணத்தினால்தான் பிச்சை எடுக்கும் நிலைமை ஏற்பட் டிருக்கிறது. ஆகையால் இந்த வசதி கொடுத்த பிறகு அவர்கள் பிச்சை எடுப்பதை நிறுத்தி விடலாம். ஆகையால் பிச்சைக்காரர் களுக்கு கிடையாது என்று சொல்லுவதால் நல்லது ஏற்படாது. இந்தத் திட்டப்படி வசதி பெற்றுக்கொண்டு மீண்டும் பிச்சை எடுக்கத் தொடங்கினால் அவர்களுக்குக் கொடுப்பதை நிறுத்த வேண்டுமென்று இருக்கவேண்டுமே தவிர, பிச்சைக்காரர்களுக்குக் கிடையாது என்று சொல்லக் கூடாது. இந்த வசதியைக் கொடுத்து பின்பு அவர்கள் பிச்சை எடுத்தால் நிறுத்தப்படும் என்று மாற்றிக் கொள்ளலாம் என்ற யோசனையைக் கூற விரும்புகிறேன்.

கல்வி சம்பந்தமாக பல நல்ல முக்கியமான உதவிகள் இதில் காணப்படுகிறது. முக்கியமாக பென்ஷன் திட்டம் சம்பந்தப் பட்ட மட்டில் திடீரென்று மரணம் ஆகிவிட்டால் குடும்பத் தாருக்கு சகாய உதவி அளிப்பது, கஷ்ட காலத்தில் உதவி அளிப்பது எல்லாம் கல்லூரி ஆசிரியர்களுக்கு விஸ்தரிக்கப்பட்டுள் ளதாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால் முதலில் தொடக்கப் பள்ளி ஆசிரியர்களுக்கு . . . . . (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் : எல்லோருக்கும்தான்) அப்படி இருந்தால் உண்மையிலேயே அது வரவேற்கத்தக்கது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, டீச்சிங் ஸ்டாஃபுக்கு இருப்பதுபோல எல்லாப் பள்ளிகளிலும் இருக்கக்கூடிய நான்-டீச்சிங் ஸ்டாஃபுக்கு, கிளார்க் குகள் போன்றவர்களுக்கு அத்தனை வசதிகள் இல்லை என்று

11th December 1961] [Sri V. Sankaran]

சொல்லப்படுகிறது . முக்கியமாக எடுத்துக்கொண்டால் சர்வீஸ் கண்டிஷன் அக்ரிமெண்ட் என்று ஆசிரியர்களுக்கு இருக்கிறது. நான்-டீச்சிங் ஸ்டாஃப்புக்கு அம்மாதிரி இல்லாமல் செக்யூரிட்டி ஆஃப் சர்வீஸ் இல்லாமல் கஷ்டப்படவேண்டிய நிலை இருக்கிறது. திடீரென்று வேலையினின்று நீக்கி விட்டால் ஒரு விதமான பாது காப்பும் இல்லாமல் இருக்கிறது. அதையும் நல்ல முறையில் பரி சீலனை செய்யவேண்டும். நான்-டீச்சிங் ஸ்டாஃப்புக்கும் அத்தனை வசதிகளும் கொடுக்கப்படவேண்டும்.

ஹவுசிங் சம்பந்தப்பட்ட மட்டில் இன்றைக்குள்ள நிலைமையில் ஏற்கெனவே வீடுகள் உள்ளவர்கள், செல்வாக்கு உள்ளவர்கள்தான் வீடுகள் கட்டிக்கொள்ள இடமிருக்கிறதே தவிர வீடுகள் இல்லாத வர்கள், மிகக் குறைந்த வருவாய் உள்ளவர்கள் வீடு கட்டிக் கொள்ள முடிவதில்லை. அவர்களுக்கு ப்ரையாரிட்டி கொடுத்து 4,000 அல்லது 5,000 ரூபாயுள்ள டெனெமெண்ட்ஸ்-ஆக இருந் தாலும் அவர்களுக்கு வீடு வசதி செய்யக்கூடிய ஸ்கிம்களை முதலில் நிறைவேற்றி பிற்பாடு மிடில் இன்கம் ஹவுஸிங் எல்லாம் எடுத்துக்கொள்வது நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இன்னொரு முக்கியமான விஷயம் பாவர்ட்டி சர்ட்டிஃபிகேட். பாவர்ட்டி சர்ட்டிஃபிகேட் சம்பந்தமாக எடுத்துக்கொள்ளும் போது ஆண்டுக்கு 1,200 ரூபாய்க்குக் குறைந்த வருமானமுள்ள வர்களுக்குத்தான் இந்தச் சலுகைகள் உண்டு என்று சொல்லப் படுகிறது. மாதம் ஒன்றுக்கு 100 ரூபாய் என்பது மிகக் குறைந்த நிலையாக இருக்கிறது. அர்பன் ஏரியாவில் எடுத்துக்கொண்டால் ஒரு மில் தொழிலாளி 110, 120 என்று வாங்கக்கூடியவர்கள் ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள். அத்தகையவர்களுக்கு இந்தச் சலுகை மறுக்கப்படும் நிலைமை ஏற்படுகிறது. ஆயிரத்து இருநூறு ரூபாய் என்றுள்ளதை 2,000 ரூபாய் என்றாவது அல்லது மாதம் ஒன்றுக்கு 150 ரூபாய் என்று கணக்கிட்டு, 1,800 ரூபாய் என்ற நிலைக்காவது இதை உயர்த்த வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். அதிலேயும், குறிப்பாக இதே அளவு ஹரிஜனங்களுக்கும் இருப்பதாகத் தெரிகிறது. ஆகவே, கண்டிப்பாக அவர்கள் விஷயத்தில் முக்கியமாக இதை உடனடியாக உயர்த்தவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மத்திய சர்க்கார் திறமையுள்ள மாணவர் களுக்கு அது ஏழையாக இருந்தாலும், எந்த வகுப்பைச் சேர்ந்த வராக இருந்தாலும் அவர்களுக்குப் போதிய வாய்ப்பும், வசதியும் கொடுக்க வேண்டும். திறமையுள்ள மாணவர்களுக்கு இவ்வசதி மறுக்கப்படுவதன் மூலம் நம் நாட்டுக்கு, நம் ராஜ்யத்திற்கு நல்ல தொரு வல்லுனரைப் பெறும் வாய்ப்பைப் பெறாமல் நாமே தீங்கி ழைத்துக் கொண்டவர்களாவோம். ஆகவே, அந்த ஒரு நிலைமை ஏற்படாமல் இருப்பதற்கு திறமையுள்ள மாணவர்கள் அனைவருக் கும் பாதுகாப்பு கொடுக்கும் முறையிலே அவர்களுக்கு மேல் படிப்புப் படிக்க போதிய வசதிகள் செய்துகொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அதே போன்று மேல்படிப்புக்கு கடன் வசதி கொடுத்து உதவும்

திட்டத்தை நான்-கெஜடட் ஆபீசர்களுக்கும், மற்றும் ஆசிரியர்களுக்கும் விஸ்தரிக்திருக்கிறுர்கள். இது மிகவும் வரவேற்கத் தக்கது. இதை, மேலும் எல்லோருக்கும் விஸ்தரிக்க அரசாங்கம் யோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். பிறருக்கு கொடுப்பதிலே வேண்டுமானல், குறைந்த வட்டிக் கொடுத்து உதவலாம். ஆகவே, இது எல்லோருக்கும் விஸ்தரிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

அடுத்தபடியாக, இப்போது போட்டுள்ள 100 ஸ்கீம்களை எடுத்துக் கொள்ளும்போது, சேலத்திலே ஒரு பொறியியற் கல்லூரியும், திருச்சியிலே ஒரு பிராந்திய பொறியியற் கல்லூரியும், இன்னும் சில இடங்களிலேயும் இது மாதிரி வசதிகள் செய்யப்பட இருக்கின்றது. சமீபத்திலே கோவையிலேயும் ஒரு டெக்னிகல் யூனிவர்சிடி ஏற்படப்போவதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. இதே போன்ற நிலைமையிலே மதுரையிலேயும், ஒரு அக்ரிகல்சர் கல்லூரியும், ஒரு வெடர்னரி கல்லூரியும் ஏற்பட இருந்தது. ஆனல், அதைப்பற்றி இங்கே குறிப்பிடவில்லை. அதேபோன்று, யூனிவர்சிடி சம்பந்தமாகவும் ஒன்றும் கூறப்படவில்லை. கேட்டால்தான் கொடுக்கப்படும், தட்டினல்தான் திறக்கப்படும் என்று சொல்கிறுர்கள். பல இடங்களுக்கு கேட்காமலும், தட்டாமலும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இங்கே கேட்டும் தட்டியும் கூட கொடுக்கப்படாத ஒரு நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது. இது உண்மையிலேயே வருத்தமாகத்தான் இருக்கிறது. யூனிவர்சிடிமேல் சாக்குபோக்குச சொல்வதில் சாயில்லை. பல காரியங்களை யூனிவர்சிடி சொல்லியிருந்தும், அதற்கு மாருக அரசாங்கம் முடிவெடுத்திருக்கிறது. அப்படியிருக்கும்போது, இங்கு இந்த இரண்டு கல்லூரிகளும், யூனிவர்சிடியும் வரவேண்டியது மிகவும் அவசியமென்பதைச சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இந்த சேல்ஸ் டாக்ஸ், ரிஜிஸ்திரேஷன் ஆபீஸ்களை எடுத்துக் கொண்டால், நகரத்திலே இருக்கக்கூடிய ஆபீஸ்கள்கூட பல இடங்களில் நல்லமுறையிலே அமைக்கப்படவில்லை. உண்மையிலேயே, நம்முடைய ரூ. 44 கோடி வருமானத்தில் சுமார் ரூ. 16 கோடி அளவுக்கு இந்த இலாகாக்கள் மூலம்தான் வருகிறது. அப்படி இருக்கும்போது, அந்த ஆபீஸ்கள் எல்லாம் நல்ல முறையிலே அமைக்கப்பட்டால்தான், அங்கு வரக்கூடியவர்களுக்கும், வியாபாரிகளுக்கும் வசதியாக இருக்கும். மேலும் அவர்களிடமிருந்து பணத்தை வசூலிப்பதற்கும் வசதியாக இருக்கும். ஆகவே, இந்த இலாக்காக்களுக்கு ஒரே இடத்தில் நல்ல முறையிலே ஆபீஸ் கட்டிடங்கள் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதே போல், நகரத்திலே உள்ள கோர்ட்டுகளை எடுத்துக் கொண்டால், அது சிவில் கோர்ட்டானலும் சரி, கிரிமினல் கோர்ட்டானலும் சரி, அவைகளுக்கு வசதியான இடங்கள் இல்லை. ஆகவே, இந்த கோர்ட்டுகளுக்கும் வசதியான இடங்களை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன. முக்கியமாக, இப் பிரச்னையை மதுரையிலே எடுத்துக்கொண்டால், அங்கே இருக்கக்

11th December 1961] [Sri V. Sankaran]

கூடிய அரண்மனையில் கோர்ட்டு இருக்கிறது. முன்பு அதை நல்ல வகையிலே உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்று அமைக்கப்பட்டது. இப்போது அங்கே இட நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. காரணம், அதிகப்படியான வழக்குகள் கோர்ட்டிலே ஏற்பட்டிருப்பதாகும். ஆகவே, அங்கும் கிரிமினல் கோர்ட்டு, சிவில் கோர்ட்டு ஆகிய இரண்டும் ஒரே இடத்தில் அமைக்கப்படுவதற்கான நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால், வக்கீல்களுக்கும், பொதுமக்களுக்கும் வசதியாக இருக்கும். ஆகவே, இதற்கான நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

மேம்பாலம் சம்பந்தமாக எடுத்துக் கொண்டால், சென்னையிலே இரண்டு மேம்பாலங்கள் அமைக்கப் போவதாக இருக்கிறது. நெருக்கடியான இடத்தில் மேம்பாலங்கள் அமைப்பதன் மூலம் மக்களுக்கு வசதி செய்துகொடுக்க முடிகிறது. மதுரை, திருநெல்வேலி போன்ற இடங்களிலும் இப்படிப்பட்ட மேம்பாலங்கள் கட்டுவதற்கான அவசியம் ஏற்பட்டிருக்கிறது. மதுரையிலே, திருப்பரங்குன்றம் போகும் வழியிலே ஒரு மேம்பாலம் கட்ட வேண்டியிருக்கிறது. அதைச் சீக்கிரத்திலே கட்டுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

கூட்டுறவு சம்பந்தமாக எடுத்துக் கொள்ளும்போது, ஆர்டிபிஷியல் சில்க் அதாவது செயற்கைப் பட்டு கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் மூலமாகவும் போதிய அளவுக்கு கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. எனக்கு முன்பு பேசிய அம்மையார் அவர்கள் குறிப்பிட்டதுபோல மதுரை போன்ற இடத்தில் இந்த செயற்கைப் பட்டினால் செய்யக்கூடிய துணியையே நம்பி வாழக்கூடியவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், இதற்கு கிராக்கி ஏற்பட்டிருப்பதால், அதிக விலை கொடுத்து வெளியிலே வாங்க வேண்டியிருக்கிறது. இப்படி அதிக விலை கொடுத்து வாங்குவதால், சேலையின் விலையும் அதிகரிக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அதனால் நியாயமான விலைக்கு சேலை கிடைக்கவில்லை. 'போனபைடிக்கு' இந்த செயற்கை பட்டு கிடைப்பதில்லை. முன்னாலே எப்பொழுதோ அப்ளை பண்ணி ரிஜிஸ்தர் செய்து வைத்துக்கொண்டவர்களுக்குத் தான் இந்த பட்டு கிடைக்கிறது. ஆகவே, அவர்களிடமிருந்து அதிக விலை கொடுத்து வாங்கக்கூடிய நிலைமைதான் இன்றைக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இந்நிலைமையை மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோல் மதுரையிலே ஒரு கூட்டுறவு நூல் ஆலையை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதுபற்றி அடிக்கடி சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். இப்படி ஒரு கூட்டுறவு ஆலையை அங்கு ஏற்படுத்தினால்தான் நூல் விலையை குறைவாக விற்க முடியும். இப்படி கூட்டுறவு ஆலையின் மூலம் நூல் விலை குறைவாக விற்கும்போது, மற்ற ஆலைகளிலும் குறைந்த விலைக்கு விற்க முடியும். ஆகவே, கூட்டுறவு நூல் ஆலை ஒன்றையும் ஏற்படுத்த வேண்டுமென்று, இந்த நேரத்திலே கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதேபோல், இந்த கூட்டுறவின் மூலமாக விநியோகிக்கப்படும்

[Sri V. Sankaran] [11th December 1961

பொருள்களான உரம், மற்றும் இதர பொருள்கள் செல்வாக்கு உள்ளவர்களுக்கே இப்போது கிடைக்கிறது. அப்படி இல்லாமல், நியாயமான முறையிலே விநியோகம் செய்யக்கூடிய நிலைமையை உண்டாக்கவேண்டும். ஆகவே, இதையும் சீக்கிரத்திலேயே நிவர்த்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து, பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்டு, ஹைவேஸ் டிபார்ட் மெண்டு ஆகியவற்றைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். ஹைவேஸ் டிபார்ட்மெண்டை எடுத்துக் கொண்டால், அதிலே வேலை செய்யக்கூடிய ரோட் இன்ஸ்பெக்டர்கள் சர்வீஸ் கமிஷன் பாஸ் செய்த பிறகு கூட சம்பளக் கமிஷன் சிபார்சுப்படி சம்பளம் வாங்குவதிலே சில கஷ்டமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதையும் கவனிக்க வேண்டுமென்றும், சீக்கிரத்திலே இதைப்பற்றி முடிவெடுக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

அதேபோல் சர்க்கரை, சிமெண்டு போன்ற பொருள்கள் கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இது சம்பந்தமாக இன்றைக்கு பல ஆலைகள் ஏற்பட்டுக்கொண்டிருந்தபோதிலும், இப்பொருள்கள் கிடைப்பதிலே தடங்கல்கள் இருக்கின்றன. ஆகவே, நாம் மத்திய சர்க்காரை இன்றுள்ள தட்டுப்பாட்டை சமாளித்துக் கொள்வதற்காக இன்னும் அதிகப்படியான அளவுக்கு சர்க்கரை வேண்டுமென்று கேட்டு வாங்குவதற்கு முயற்சிகள் எடுத்துக் கொள்ளவேண்டும். ஆலைகள் மூலம் கிடைப்பதற்கு இன்னும் ஒருசில ஆண்டுகள் ஆகலாம். இப்போது 10,000 டன் சர்க்கரை கொடுக்கிறார்கள் என்று நினைக்கிறேன். 15,000 டன் வேண்டுமென்று கேட்கலாம். அதேபோல் சிமெண்டுக்கும் அதிகம் வேண்டுமென்று கேட்டு வாங்கலாம். இவைகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக, நகரத்திலே வெள்ளம் ஏற்பட்டால் அதைத் தடுக்க ஒரு ஸ்கீம் ஏற்படுத்த வேண்டும். அதாவது தடுப்புச் சுவர் எழுப்பி, வெள்ளத்தைத் தடுக்க வேண்டும். இப்படித் தடுப் பதன் மூலம் நகரம் பாதுகாக்கப்படும். இந்த தடுப்புச் சுவர் போடுவதற்கு சில லட்சம் செலவானாலும்கூட, இதனால் வெள்ளம் தடுக்கப்படுகின்றபோது பல லட்சக் கணக்கான பொருள்கள் பாதுகாக்கப்படும். ஆகவே, இதனால் பணம் போனாலும்கூட, தடுப்புச் சுவர் ஏற்படுத்தும் வகையில் ஸ்கீம்கள் போடவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : *சட்டமன்றத் தலைவர் அவர்களே, சட்ட மன்றத்தின் முன்னால் வைக்கப்பட்டிருக்கக்கூடிய 1962-63-ம் ஆண்டுக்கான இடைக்கால வரவு செலவுத் திட்டத்தைக் குறித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். உண்மையி லேயே இந்த வரவு செலவுத் திட்டம் பற்றுக் குறை பட்ஜெட்டாக இருக்கிறது. நாட்டினுடைய நலனுக்கு பற்றுக்குறை பட்ஜெட் டாக இருப்பது அவ்வளவு உகந்ததாக இல்லை என்றாலும்கூட,*

11th December 1961] [Sri S. M. Annamalai]

மூன்ருவது பினன்ஸ் கமிஷனிடமிருந்து ஏதாவது உதவி கிடைக்கும் என்ற எண்ணத்துடன் அமைச்சர் அவர்கள் பற்ருக் குறை திட்டத்தை சட்ட மன்றத்தின் முன்னல் வைத்திருக்கிருர் என்று நான் நினைக்கிறேன். இப்படிப்பட்ட வரவு செலவுத் திட்டத்தை முன்பு ஐந்து ஆண்டுகளாக வைத்திருக்கலாம். மற்ற மாகாணங்களில் அம்மாதிரி பற்ருக்குறை பட்ஜெட் வைக்கப் பட்டதால், அவர்கள் ரெவின்யூ கணக்கில் துண்டு விழுவதை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள். இரண்டு, மூன்று மாநிலங்களுக்குத்தான் ரெவின்யூ கணக்கில் துண்டு விழுவதை மத்திய சர்க்கார் ஏற்றுக் கொள்ளவில்லையென்று செய்தியைப் பார்க்கிறபொழுது, அமைச்சர் அவர்கள் உண்மையிலேயே 3, 4 ஆண்டுகளாக பற்ருக்குறை பட்ஜெட் திட்டத்தை வைத்திருப்பார் களேயானல், மத்திய சர்க்காரிடமிருந்து 'ரெவின்யூ கணக்கில் இவ்வளவு கோடி ரூபாய் பற்ருக்குறை இருக்கிறது, மற்ற மாநிலங் களுக்குத் தருவதுபோல எங்கள் மாநிலத்திற்கும் நீங்கள் தர வேண்டும்' என்று அதை வாதாடி பெற்றிருக்கலாம். இன்னும் சில பல திட்டங்களை உண்மையிலேயே நம்முடைய மாநிலத்தில் நிறைவேற்றியிருக்கலாம். இவ்வளவு காலம் தாழ்ந்தாவது, மூன்ருவது பினன்ஸ் கமிஷன் வந்த பிறகு, அவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்திய பிறகு 1961-62-ம் ஆண்டுக்கு பற்ருக்குறை பட்ஜெட்டும், அதே போல 1962-63-ம் ஆண்டுக்கு பற்ருக்குறை பட்ஜெட்டும் வைத்ததன் மூலம் பினன்ஸ் கமிஷனிடமிருந்து அந்தப் பணத்தை பெறலாம் என்று அமைச்சர் அவர்கள் கருதுவது உண்மையிலேயே பாராட்டத்தக்கதாகும்.

மத்திய சர்க்காருடைய வருமானத்தை எடுத்துப் பார்ப்போ மானல் ஏறத்தாழ சென்ற ஆண்டு 367 கோடி ரூபாய் வருமானம் வந்திருக்கிறது. இந்த ஆண்டில் ரெவின்யூ கணக்கில் மத்திய சர்க் காருக்கு வந்திருக்கக்கூடிய பணமானது அரை ஆண்டில் ஏறத் தாழ ரூ. 444 கோடி. இதைப் பார்ப்போமானல் அவர்களுக்கு அரை ஆண்டில் 77 கோடி ரூபாய் அதிகமாக வருமானம் கிடைத் திருக்கிறது. அதற்குண்டான விகிதம் நம்முடைய மாநிலத்திற்கு உண்மையில் கிடை...த்தாக வேண்டும். இம்மாதிரி மத்திய சர்க்கார் நம்முடைய மாநிலம் செலுத்துகின்ற வரி உள்பட அரை ஆண்டில் 77 கோடி ரூபாய் உபரியாக வருமானம் பெற்றிருக்கிருர்கள் என்ருல், முழு ஆண்டிலும் எவ்வளவு பெறுவார்கள் என்று கணக்குப் போட்டு பார்த்தால், சுமார் 150 கோடி ரூபாய் ஆண்டு ஒன்றுக்கு அதிக வருவாய் கிடைக்கிறது என்று சொல்ல வேண்டும். பற்ருக் குறை பட்ஜெட் இப்பொழுது வைத்திருந் தாலும்கூட, 1961-62-ம் ஆண்டில் துண்டு விழுந்திருக் கக்கூடிய தொகையையும், 1962-63-ம் ஆண்டில் துண்டு விழக்கூடிய தொகையையும் சேர்த்து, அமைச்சர் அவர் களுக்கு இது கடைசி பட்ஜெட்டாக இருந்தபோதிலும் கூட, வருகிற அமைச்சரவையாவது மத்திய சர்க்கா ரோடு வாதாடி, துண்டு விழுகிற அந்தத் தொகையை, மத்திய சர்க்காரிடமிருந்து பெறவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

[Sri S. M. Annamalai] [11th December 1961

அதுபோலவே, மத்திய சர்க்காருக்கு ரயில்வே மூலம் கிடைக்கிற வருவாயைப் பார்த்தால், ரயில்வே வருவாயிலிருந்து நம்முடைய மாநில சர்க்காருக்கு அவர்கள் கொடுக்கிற பணம் ரூ. 90 லட்சம். நம்முடைய மாநிலத்திலிருந்து மத்திய சர்க்காருக்கு இந்தத் துறையில் எவ்வளவு வருமானம் கிடைக்கிறது, அவர்கள் நமக்கு எவ்வளவு தருகிறார்கள் என்பதைப் பார்க்கப்போனால், அவர்கள் நமக்குக் கொடுக்கிற பணம் மிகமிகக் குறைவான தொகையாகும். அதுபோலவே, 'ஷேர் ஆப் இன்கம் டாக்ஸ்' என்ற வகையில் ஏறத்தாழ சென்ற ஆண்டில் ரூ. 7 கோடி 70 லட்சம் நமக்கு கிடைத்தது. இந்த ஆண்டில் அமைச்சர் அவர்கள் எதிர்பார்ப்பது ரூ. 8 கோடிதான். இதைப் பார்க்கிறபொழுது இதுகூட மிகமிகக் குறைவாக இருக்கிறது என்றுதான் நாம் சொல்ல முடியும். அதைப் பற்றித்தான் அமைச்சர் அவர்கள் உரையில் குறிப்பிடும்பொழுது அது மூன்றாவது பினான்ஸ் கமிஷன் சிபார்சை ஒட்டி இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். அதுபோலவே குறைந்த சம்பளம் பெறுகிற ஊழியர்களின் ஊதியத்தை உயர்த்துவதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து இதுவரையில் வந்துகொண்டிருந்த உதவித் தொகை ரூ. 2.5 கோடியைக்கூட இப்பொழுது நிறுத்தி விட்டார்கள். அதைக்கூட வாதாடி அமைச்சர் அவர்கள் பெறவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து, சுமார் 2, 3 நாட்களுக்கு முன்னால் மத்திய சர்க்கார் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுகிறபொழுது, மது விலக்கினால் பிற மாநிலங்களுக்கு ஏற்படக்கூடிய நஷ்டத்தை நாங்கள் தருகிறோம், எல்லா மாநிலங்களுக்கும் தருகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால், நம்முடைய உள்துறை அமைச்சர் அவர்கள் அன்று பதில் சொல்லுகிற நேரத்தில் நம்முடைய மாநிலத்தில் மது விலக்குத் திட்டம் இதற்கு முன்னாலேயே அமுல் நடத்திவிட்டோம், ஆகையினால் அதனால் ஏற்படக்கூடிய நஷ்டத்தை நாம் மத்திய சர்க்காரிடமிருந்து பெறவேண்டிய அவசியம் இல்லை என்று சொன்னார்கள். ஆனால், மத்திய அமைச்சர் அவர்கள் சொல்லிய பதிலைப் பார்க்கும்பொழுது எல்லா மாநிலங்களுக்கும் கிடைக்கும் என்று தெரிகிறது. ஆகையினால், அதைக்கூட மத்திய சர்க்காரிடம் வாதாடிப் பெற வேண்டுமென்று நான் இந்தச் சமயத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

(Deputy Speaker in the Chair)

'என்டர்டைன்மென்ட் டாக்ஸை'-ப் பொறுத்தவரையில், 1961-62-ல் ரிவைஸ்டு எஸ்டிமேட் ரூ. 208 லட்சம். அதுபோலவே 1962-63-ல் அதே ரூ. 208 லட்சம்தான் சர்க்கார் எதிர்பார்க்கிறார்கள். 1961-62-ல் பட்ஜெட் எஸ்டிமேட் ரூ. 198 லட்சம் என்று போட்டிருந்தார்கள். ரிவைஸ்டு எஸ்டிமேட் ரூ. 208 லட்சம். ஏறத்தாழ ரூ. 10 லட்சம் உபரியாக இருக்கிறது. இதைப் பார்க்கிறபொழுது சினிமாத் துறையிலே 'டாக்ஸ் எவேஷன்' இருக்கிறது என்று தோன்றுகிறது. சரியான முறையிலே கண்காணிப்பு இருக்க வேண்டும் என்பதற்காக ஒரு 'ஸ்பெஷல் ஸ்க்வாடு' வைத்.

11th December 1961] [Sri S. M. Annamalai]

திருக்கிறோம் என்று அன்றைக்கு கைத்தொழில் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். திடீர் திடீரென்று சென்று கண்காணிப்பதற்கு 'ஸ்க்வாடு' வைத்திருக்கிறோம் என்று சொன்னார்கள். அதைப் பார்க்கிறபொழுது, உண்மையிலேயே எல்லா மாவட்டங்களிலும் இதுமாதிரி 'ஸ்பெஷல் ஸ்க்வாடு' ஏற்படுத்தி 'டாக்ஸ் எவேஷன்' நடக்காமல் திடீர் திடீரென்று பரிசோதனை செய்ய ஏற்பாடு செய்து, என்டர்டைன்மென்ட்டு டாக்ஸைப் பொறுத்தவரையில் வருமானம் உயருவதற்கு சரியான முறையிலே கண்காணிக்க வேண்டும் என்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சந்தன மரத்திலிருந்து 2 கோடி ரூபாய் அதிகமாக சர்க்கார் வருவாய் பெறுகிறார்கள் என்று இந்த வரவு செலவுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மைசூர் சர்க்காருக்கு ஒரு டன் ரூ. 8,000-க்கு கொடுத்து விடுகிறோம், அதுவே போதும் என்று சொல்லுவதிலே உண்மையிலேயே பிரயோசனம் இல்லை என்பதை இந்த சமயத்தில் மிகவும் தாழ்மையுடன் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மைசூர் சர்க்காரைப் பொறுத்த வரையிலே ஏதோ அவர்களுக்கு சந்தனக் கட்டை தேவை என்ற காரணத்தினால், டன் ரூ. 7,000, 8,000 ஆக இருந்தாலும் சரி, அதைக் கொடுத்து வாங்கி தொழிலை நடத்தவேண்டும் என்ற காரணத்தினால், அதிக விலை கொடுத்து வாங்குகிறார்கள். மற்ற மாநிலங்களிலிருந்து அவர்களுக்கு குறைந்த விலைக்கு சந்தனக் கட்டை கிடைக்குமானால், அப்பொழுது மார்க்கெட் விலை மிகவும் குறைந்து விடும். முன்பு ஒரு கேள்விக்குப் பதில் சொல்லுகிற நேரத்தில் 'மைசூர் சர்க்கார் எப்படி சந்தன எண்ணெய் உற்பத்தி செய்கிறார்கள் என்பதை ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கிறோம்' என்று சொன்னார்கள். இப்பொழுது 'எங்களுக்கு அதிகமாக பணம் கிடைக்கிறது. ஆகையினால் இப்படிப்பட்ட தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டிய அவசியம் இல்லை' என்று சொல்லுகிறார்கள். லாபம் கிடைக்காது என்பது ஒரு பக்கத்தில் இருந்தபோதிலும் கூட, அம்மாதிரி ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்துவதினால், பல தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கும் என்ற கருத்தோடுதான், நம்முடைய மாநிலத்தில் சந்தன எண்ணைத் தொழிற்சாலை, சோப்பு தொழிற்சாலை ஆரம்பிக்க வேண்டும் என்று இந்த சமயத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, 65 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு பென்ஷன் தருவதாக அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். உண்மையிலேயே, இது பாராட்டத்தக்க விஷயம்தான். ஆனால் எந்த அடிப்படையில் 65 வயது என்று நிர்ணயித்தார்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஷஷ்டி அப்த பூர்த்தி என்று சொல்லுவார்கள் 60 வயதில். அதாவது 60 வயதிற்கு மேல் கிழ வயது என்று சொல்லுவார்கள். அறுபத்தைந்து வயது என்பதை எந்த அடிப்படையில் நிர்ணயித்திருக்கிறார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே, 60 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு பென்ஷன் கொடுக்கவேண்டும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதுபோலவேதான் அனாதைகள் என்று சொன்னால், பிச்சைக்காரர்கள் என்பதுதான் உண்மையி

லேயே பொருள். யாரும் காப்பாற்றுவதற்கு இல்லாத நிலையில் இருக்கக்கூடிய சுமார் 60 வயதிற்கு மேற்பட்டவர்கள் பிச்சை எடுக்கக்கூடிய நிலையில்தான் இருப்பார்கள். அப்படியிருக்கும் பொழுது, அனாதைகளுக்கு பென்ஷன் தரப்படும், பிச்சைகாரர்களுக்கு தரப்படாது என்று சொல்லும்பொழுது, யாருக்குக் கொடுப்பது என்ற முறை வருகிறபொழுது, இதனால் சில தகாறுகள் ஏற்படலாம். ஆகவே, இதை இன்னும் விளக்கமாகச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அறுபத்தைந்து வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு பென்ஷன் கொடுக்கும் திட்டமானது உத்திரப் பிரதேசம், கேரளா ஆகிய இரண்டு மாநிலங்களிலும் அமுலில் இருக்கிறது. இதற்கு மத்திய சர்க்கார் இந்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் 2 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். இந்த 2 கோடி ரூபாயிலிருந்து நம்முடைய மாநில சர்க்கார் எவ்வளவு பெறப்போகிறார்கள், மத்திய சர்க்கார் இதற்காக ஏதாகிலும் பணம் தரப்போகிறார்களா என்பதை அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது விளக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதேபோல், வட ஆர்க்காடு மாவட்டத்தில், சிறு கைத்தொழில்கள் ஆரம்பிக்க சர்வே செய்யப்பட்டிருக்கிறது. மற்ற மாவட்டங்களைவிட தொழில் துறையில், எங்கள் மாவட்டம் மிகவும் பின்தங்கிய பாகம் என்பது விளங்கியிருக்கிறது. தனியார் துறையில் தொழில்கள் ஆரம்பிக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆனால், அந்த மாவட்டத்தில் பெரிய பணக்காரர்கள் கிடையாது. அப்படிப்பட்டவர்கள் கோவை மாவட்டத்தில் இருக்கலாம், பிற மாவட்டங்களில் இருக்கலாம். வட ஆர்க்காடு மாவட்டத்தில் தனியார் துறையில் ஆரம்பிக்க யாரும் முன்னுக்கு வரமாட்டார்கள். அது ஒரு பிற்போக்கான மாவட்டம் என்று கருதி சிறு கைத்தொழில்களை, எவைகளை ஆரம்பிக்க சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறதோ, அவற்றை ஆரம்பிக்க வேண்டும், சர்க்காரே ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

சேலம் இரும்புக் கனியைப் பற்றி இந்த வரவு செலவுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நெய்வேலி லிக்னைட்டை வைத்துக்கொண்டு இரும்புத் தொழில் செய்யமுடியுமா என்று சோதனைகள் செய்கிறோம் என்று சொல்கிறார்கள். நார்வே, ஜெர்மன் நாட்டு நிபுணர்கள் அறிக்கையைப் பார்த்தால், நல்ல முறையிலே இரும்பு உற்பத்தி செய்யலாம் என்று தெரிகிறது; பத்து நாட்களுக்கு முன்புகூட பத்திரிகையில் பார்த்தேன். ஆகவே, தாமதத்திற்குக் காரணம் தெரியவில்லை. நாங்கள் சோதனை செய்கிறோம், மத்திய சர்க்கார் சோதனை செய்கிறார்கள் என்று வேண்டுமென்றே
12-30 காலம் தாழ்த்துகிறார்களா என்று கேட்கத் தோன்றுகிறது. அதேபோலத்தான் காவேரி ஆற்றங்கரையில் எண்ணெ இருக்கிறதா இல்லையா என்று பரிசீலனை செய்ய ஸ்டேட் ஜியலாஜிகல் சர்வேக்கு பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். இதிலே மத்திய சர்க்கார் என்ன செய்கிறார்கள், அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் என்ன என்று சொல்லப்படவில்லை. அமைச்சரவர்கள் தங்கள் பதிலில் அதைப்பற்றிச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

11th December 1961] [Sri S. M. Annamalai]

கூட்டுறவு பண்ணைகள் ஆரம்பிக்கும் விஷயமாக, வரவு செலவுத் திட்டத்தில், மூன்று மாவட்டங்களுக்கும் சேர்த்து ஆரம்பிக்கப் போவதாகச் சொல்கிறார்கள்; ராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி முதலிய மாவட்டங்களில். ஏன் அதேமாதிரி மற்ற மாவட்டங்களிலும் கூட்டுறவுப் பண்ணைகள் உடனடியாக ஆரம்பிக்கக் கூடாது என்று அறிய விரும்புகிறேன். சர்க்காரிடம் பல தரிசு நிலங்கள் இருக்கின்றன. லாண்ட் காலனேசேஷன் ஸ்கீம் என்று சர்க்கார் வைத்திருக்கிறார்கள். இதிலெல்லாம் வேலைகள் துரிதமாக நடப்பதில்லை, காலதாமதம் ஏற்படுகிறது. மற்ற மாவட்டங்களிலும் கூட்டுறவுப் பண்ணைகளை வைத்து உதவவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கடைசியாக, அரக்கோணத்தில் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் ஆரம்பிக்க என்று 1960-61 வரவு செலவுத் திட்டத்திலேயே ரூ. 8 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தும் ஒரு வித முயற்சியும் செய்யப்படவில்லை. நிலம் வாங்கியோ, மற்றவிதத்திலோ எந்தவிதமான முயற்சியும் இந்தத் தொழில் பேட்டை சம்மந்தமாகச் செய்யவில்லை. ஏன் கால தாமதம் என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ப்ரைமரி ஹெல்த் சென்டருக்கு ஐஸொலேடெட் வார்டுக்கு என்று பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இருபது இடங்களில் அப்படிக் கட்டப் போகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். கனம் சுகாதார மந்திரிகூட கேள்விக்குப் பதில் சொல்லும்போது, ஒவ்வொரு சென்டருக்கும் இரண்டு டாக்டர்கள் போடலாமா என்று ஆராய்ச்சி செய்துகொண்டு இருக்கிறோம் என்று சொன்னார்கள். ஒவ்வொரு சென்டருக்கும் இரண்டு டாக்டர்கள் கட்டாயம் தேவை. மேலும் இப்பொழுது இருக்கும் 6 பெட்டுகள் போதாது, குறைந்தது 20 பெட்டுகளாவது போடவேண்டும். ஒரு சென்டரில் இரண்டு டாக்டர்கள் இருந்தால்தான் ஒருவர் சுற்றுப்புறத்து கிராமங்களுக்குச் சென்று மக்களுக்கு உதவி செய்யவும், இன்னொருவர் ஆஸ்பத்திரியிலேயே இருந்துகொண்டு வரும் நோயாளிகளைக் கவனிக்கவும் சௌகரியமாக இருக்கும்.

ஜவ்வாது மலைவாசிகளுக்கு என்று ஒரு தனி ப்ளாக்கு ஆரம்பிக்கவேண்டும் என்று நான் இந்த சட்ட மன்றத்திற்கு வந்த நாளாகக் கேட்டுக்கொண்டு வருகிறேன். ஆனால், ஒன்றும் நடைபெறவில்லை. ஏற்காட்டிலும், கொள்ளிமலையிலும் ஆரம்பிக்கப் போவதாக அமைச்சர் சொன்னார்கள்; இது ஷெடூல்ட் ட்ரைபுக்காக ஆரம்பிக்கப் போவதாகச் சொன்னார்கள். ஏற்காட்டில் ஒரே ஒரு பஞ்சாயத்துத்தான் இருக்கிறது. ஒரு பஞ்சாயத்து இருக்கும் இடத்தில் ஆரம்பிக்கிறார்கள். அதே முறையில் ஜவ்வாது மலையில், 7, 8 பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன; பதினைந்து அல்லது இருபதாயிரம் மக்கள் வாழ்கிறார்கள். எந்த முன்னேற்றமும் இல்லை. இரண்டு மூன்று ஆண்டுகளாகச் சொல்லி வருகிறேன், அவர்கள் முன்னேற்றத்துக்காக ஒரு தனி ப்ளாக்கு வேண்டும் என்று. அதை இப்பொழுதாவது செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

[Sri S. M. Annamalai] [11th December 1961

கடைசியாக, கனம் நிதி அமைச்சரவர்களைப் பாராட்ட விரும்புகிறேன். அவர்கள் நான் இந்த மன்றத்திற்கு வந்த இந்த ஐந்தாண்டுகளாக கல்விக்காக ஆற்றி இருக்கும் பணி மிக மிகப் போற்றத் தக்கது. கல்விக் கொள்கையில் அடிக்கடி மாற்றம் இல்லாமல் நல்ல முறையில் அதை நடத்தி வந்திருக்கிறார்கள். நான் சில ஆசிரியர்களை சந்தித்துப் பேசியபோது அவர்கள் சொன்னார்கள், "நாங்கள்கூட வருத்தப்படுகிறோம். அவர்கள் கல்வித் துறையில் ஒரு நல்ல கொள்கையைக் கையாண்டு வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு அடுத்து வரும் அமைச்சரும் அதே கொள்கையைக் கையாளுவாரோ அல்லது விட்டுவிடுவாரோ என்று அச்சப்படுகிறோம்" என்று. ஆகவே இந்த சந்தர்ப்பத்தில் நான் கேட்டுக் கொள்கிறேன், அவர்கள் கையாண்ட கொள்கையையே அவருக்குப் பின்னால் வரும் அமைச்சரும் கையாளவேண்டும் என்று. அவர்கள் பாராளுமன்றத்தில் பணியாற்றும் வேளையில், தமிழ் நாட்டுக்காகப் பணி செய்யவேண்டும் என்று மனதில் இறுத்தி, நம் மாநிலத்திற்கு, பாராளுமன்றத்திலும் மேலும் மேலும் வாதாடி அதிகமாகப் பணத்தைப் பெற்று, நம் மாநிலம் முன்னுக்கு வரக்கூடிய அளவில் பணியாற்ற வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அவர்கள் ஆற்றிய பணியைப் போற்றி, என் பேச்சை முடிக்கிறேன்.

* **Sri A. MARIAPPAN :** தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் சமர்ப்பித்திருக்கும் நிதி நிலை அறிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நிதி அமைச்சரவர்கள் இது தன்னுடைய கடைசி பட்ஜெட் என்று கூறி இருக்கிறார்கள். நம் மாநிலத்தை விட்டு, அவர்கள் பார்லிமெண்ட் அங்கத்தினராகப் போவது நம் மாநிலத்திற்கு ஒரு பெருத்த நஷ்டம். அவர்கள் கல்வித் துறையில் நம் மாநிலத்திற்காக அரிய பெரிய பணிகள் செய்திருக்கிறார்கள். . . . . .

Sri K. ANBAZHAGAN : On a point of order, Sir. I want to know whether there is quorum now.

DEPUTY SPEAKER : Yes, there is quorum. Only 21 Members are required to make up the quorum. Now there are 22 Members. The hon. Member, Sri Mariappan, can continue his speech.

**Sri A. MARIAPPAN :** அதற்கு தமிழ் நாடு அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறது.

குறிப்பாக, இந்த நிதிநிலை அறிக்கையில் சேலம் ஜில்லாவிற்கு, எஞ்ஜினியரிங் கல்லூரி கொடுக்கப் போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அதற்காக அரசாங்கத்தைப் பாராட்ட வேண்டியவர்களாக இருக்கிறோம். மேலும் நெய்வேலி பழுப்பு நிலக்கரியைக் கொண்டு சேலத்தில் இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்த அரசாங்கம் துரிதமாக நடவடிக்கைகள் எடுப்பதற்காக அவர்களைப் பாராட்டுவதோடு, சீக்கிரமாக அங்கே அந்தத் தொழிற்சாலையை அமைத்துக் கொடுக்கவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். சமீபத்திலே அரசாங்கம்

11th December 1961] [Sri A. Mariappan]

கைத்தறி நெசவாளர்களுக்கு பிராவிடன்ட் பண்டு வசதியை ஏற்படுத்திக் கொடுத்திருந்தார்கள். இந்தத் திட்டத்திற்கு அரசாங்கம் பாதித் தொகையைக் கொடுப்பதற்கு ஆரம்பத்திலே முன் வந்தது. பிறகு கால் பங்குதான் கொடுப்போம் என்று சர்க்கார் சொல்லுகிறுர்கள். இதை மாற்றி முழுத் தொகையையும் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யுமாறு நிதி அமைச்சரவர்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.

நெசவாளர்களைப் பொறுத்தவரையில் இப்பொழுது நார்ப்பட்டு கிடைப்பதில்லை. இது அவர்களுக்கு மாபெரும் குறையாக இருக்கிறது. தனிப்பட்ட நெசவாளர்களுக்கு நார்ப்பட்டு கிடைப்பதற்கு நம்முடைய அரசாங்கம் வசதி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நூலைப் பொறுத்த வரையில், சென்ற சில மாதங்களாகவே விலை ஏறிக்கொண்டே போகிறது. அந்த விலை ஏற்றத்தை தடுத்து நிறுத்தாமல் இருப்பதிஞல், நெசவாளர்களுடைய வருமானம் மிகவும் குறைந்துகொண்டே போகிறது. நூல் விலை ஏறின உடனேயே துணிவிலையும் ஏறுவதில்லை. ஆகவே துணி விலை ஏருததிஞல் நெசவாளர்களுடைய வருமானமும் ஏருமல் குறைந்து விடுகிறது. ஆகவே நூல் விலையைக் குறைப்பதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மாகாண கைத்தறி நெசவாளர் சங்கத்திற்கு கொடுக்கப்படும் கடன் தொகை மிகவும் குறைவாக இருக்கிறது. மேற்கொண்டு ஐம்பது லட்சம் ரூபாய் கடனைக் கொடுத்தால்தான் பிரதம சங்கங்களுக்கு உதவி செய்ய முடியும். அந்த வகையிலே அரசாங்கம் மாநில சங்கத்திற்கு தாராளமாக கடன் உதவி செய்து கொடுக்க முன் வரவேண்டும். கடன் பெறுவதற்கு அரசாங்கத்திலிருந்து கொடுக்கப்படும் "காரண்டி" கிடைப்பதிலும் மிகுந்த கால தாமதம் ஏற்படுகிறது. இம்மாதிரி காலதாமதம் ஏற்படுவதிஞல் நெசவாளர் சங்கங்கள் பாதிக்கப்படுகின்றன. ஆகவே உடனடியாக ஆரம்பத்திலேயே இந்த "காரண்டி" கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

குறிப்பாக, இந்த வரவு செலவுத் திட்டத்திலே 65 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு உபகார நிதி கொடுப்பதற்கு கொண்டு வந்துள்ள திட்டம் மிகவும் பாராட்டத் தக்கது. அறுபத்தைந்து என்று இருப்பதை 60-ஆக மாற்றி அங்கஹீனர்களுக்கு 55 வயதாக ஆக்கிஞல் இன்னும் நிறையப் பேர்களுக்கு நன்மை கிடைக்கும். அதே நேரத்தில் ஏழைப் பிள்ளைகள் மேலே படிப்பதற்கு வட்டியில்லாக் கடன் கொடுப்பதற்கு முன் வந்திருக்கிறுர்கள். அதற்காக நான் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். சென்ற 10 ஆண்டுகளிலேதான் ஏழைக் குழந்தைகள் படிப்பிலே முன் வந்து கொண்டிருக்கிறுர்கள். அப்படி இருக்கும்பொழுது பின்தங்கிய வகுப்பினர் 50 மார்க்குகள் வாங்கவேண்டும் என்றும், மிகவும் பின்தங்கிய வகுப்பினர் 45 மார்க்குகள் வாங்கவேண்டும் என்றும் நாம் சொல்லுகிறேம். அவர்கள் படிப்பதே மிகவும் கஷ்டமாக இருக்கும்பொழுது, பின்தங்கிய வகுப்பினரைப் பொறுத்த வரையில் இந்த அதிக பட்ச மார்க்குகளை குறைப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ளும் என்று நம்புகிறேன்.

[Sri A. Mariappan] [11th December 1961

அடுத்தபடியாக, சிறிய கிராமங்களிலே உள்ள ரோடுகள் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. இதற்குக் காரணம் ஜில்லா போர்டுகள் இருந்தபொழுது அவைகளைப் பராமரிக்க முடியாத நிலையில் இருந்தனர். அவற்றையெல்லாம் அரசாங்கமே ஹைவேஸ் டிபார்ட்மெண்டிலே எடுத்துக் கொண்டால் நல்ல முறையில் வைத்துக்கொள்ள முடியும். மேலும் சில கிராமங்களிலே ரோடு வசதியே இல்லாமல் இருக்கிறது. நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரையில் மற்ற ராஜ்யங்களைவிட ரோடுகள் நல்ல முறையில் இருக்கின்றன என்பதைப்பற்றி எல்லோருமே பாராட்டியிருக்கிறார்கள். மற்ற ரோடுகளையும் ஹைவேஸ் இலாகா எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கூட்டுறவு இயக்கத்திற்கு வெளியே இருக்கக்கூடிய நெசவாளர்களுக்கு "பைனான்ஸ் கார்ப்பரேஷன்" அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் மூலம் நெசவாளர்களுக்கு ஓரளவு வசதி கிடைக்கும். இருந்தாலும் அந்த வசதிகள் போதுமானதல்ல. கூட்டுறவு இயக்கத்திற்கு வெளியேயுள்ள நெசவாளர்களுக்கும் வீடுகள் கட்டிக் கொடுக்க அரசாங்கம் முன் வரவேண்டும். நெசவாளர்களுக்கு வேண்டிய சாமான்களை ஒரு பகுதி இனமாகவும், மற்றொரு பகுதியை கடனாகவும் கொடுப்பதற்கு அரசாங்கம் உதவி செய்ய வேண்டும். சேலம் ஜில்லா நமது மாகாணத்திலேயே மிகவும் பெரிய ஜில்லா. சில ஜில்லாக்களைப்போல் இரண்டு மடங்கு நிலப்பரப்பையும், ஜனத்தொகையையும் கொண்டது. ஆனால் படிப்பிலும் வருமானத்திலும் மற்றும் ஏனைய விஷயங்களிலும் பின்தங்கிய ஜில்லாவாக இருக்கிறது. நமது நிதி அமைச்சரவர்கள் சேலம் ஜில்லாவிலே சுற்றுப் பிரயாணம் செய்யும்பொழுது இதை நன்கு உணர்ந்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். எங்களுடைய ஜில்லாவிற்கு ஓரளவிற்குத்தான் ஆஸ்பத்திரியில் படுக்கை வசதிகள் செய்து கொடுத்து இருக்கிறார்கள். சேலம் நகரிலுள்ள ஆஸ்பத்திரியை ஒரு பெரிய ஆஸ்பத்திரியாக மாற்றுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். மேலும் சேலம் நகரில் ரோடு வசதிகள் மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கின்றன. ஆகவே நமது அசராங்கம் சேலம் நகரசபைக்கு குறைந்த பட்சம் 15 லக்ஷம் ரூபாய் கடன் கொடுத்து ரோடுகளைச் செப்பனிடுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இந்த ஆண்டிலே சேலம், திருச்செங்கோடு தாலுக்காக்களிலே மழையே கிடையாது. நம்முடைய மாகாணத்திலே பெரும்பாலான இடங்களிலே அதிகமாக மழை பெய்து வெள்ளம் வந்திருந்தும், என்னுடைய ஜில்லாவிலே மேற்கு, தென் மேற்குப் பகுதிகளிலே இந்த ஆண்டில்கூட மழை பெய்யவில்லை, மாசி, பங்குனி மாதங்களில் குடி தண்ணீருக்கே கஷ்டப்படும் படியான நிலையில் இருக்கும். அப்படிப்பட்ட ஊர்களிலே கிணறுகள் வெட்டுவதற்கு சர்க்கார் மான்யம் கொடுத்தால் மட்டும் போதாது. அந்தப் பகுதியிலே டிரிலிங் மெஷினரி வைத்து சுலபமாக கிணறுகளை ஆழப்படுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். எங்கள் ஜில்லாவிலே பெரும் பகுதியிலே போக்குவரத்து வசதியில்லாமல் இருக்கிறது. அம்மாதிரியான

இடங்களுக்கும் நிறைய போக்குவரத்து வசதிகளை செய்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

நம்முடைய நிதி அமைச்சர் அவர்களை எல்லா மாகாணத்தி லுள்ளவர்களும் பாராட்டுகிறார்கள். குறிப்பாக, பிளானிங் கமிஷனைப் பொறுத்தவரையில் சென்னை நிதி அமைச்சர் அவர் களிடம்தான் அவர்களுக்கு பயம் இருக்கிறது, என்ற பெருமையை நமக்கு தேடிக் கொடுத்துள்ளார். மத்திய அரசாங்கத்திலும் போராடி நமக்கு வேண்டிய நிதி வசதிகளை தேடிக்கொடுத்திருக் கிறார். மேலும் நம்முடைய மாகாணத்திலே கல்வி வளர்ச்சிக் காகவும், தொழில் வளர்ச்சிக்காகவும் அதிக முயற்சிகள் எடுத்துக் கொண்டுள்ளார். மேல்நாடுகளில் தாம் பார்த்தவைகளை எல்லாம் நம்முடைய மாகாணத்திலும் கொண்டுவருவதற்கு வேண்டிய முயற்சிகளை செய்து வந்திருக்கிறார்கள். இதற்கெல்லாம் சேலம் வாசிகளின் சார்பாக நான் அவருக்கு எனது நன்றியைத் தெரிவித் துக்கொள்வதோடு, அவர்கள் பார்லிமெண்டுக்குச் சென்றாலும், அங்கும் நமக்கு வேண்டிய வசதிகளைச் செய்வதற்கு அவருக்கு வாய்ப்பு ஏற்படும் என்று நினைக்கிறேன். அந்த அளவுக்கு நம் முடைய தமிழகம் முன்னேறுவதற்கு வேண்டிய முயற்சிகளை அவர்கள் எடுத்துக் கொள்வார்கள் என்று கூறிக்கொண்டு என் னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த வரவு-செலவுத் திட்டத்தை படித்த வுடனேயே எதிர்கட்சியிலுள்ளவர்களுக்கு நாடி தளர்ந்திருக்கும் என்பதை யாரும் மறுக்க முடியாது, மறுக்கவும் மாட்டார்கள். அதற்குக் காரணம் க்ஷேமநல அரசாங்கத்திற்கு வேண்டிய பல வேலைகளை எடுத்து முடிக்க திட்டமிட்டிருக்கிறார்கள். இப்படிப் பட்ட வேலைகளை எடுத்துச் செய்யக்கூடிய அருகதை அவர்களுக்கு இருக்கிறது. அந்த அருகதை எதிர்க்கட்சியிலுள்ளவர்களுக்கு கிடையாது. அதனால்தான் இதைப் பார்த்துவிட்டு இது ஒரு தேர்தல் அறிக்கை என்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட தேர்தல் அறிக்கையையாவது கொண்டு வருவதற்கு நமக்கு அருகதை இருக்கிறது. ஆனால் எதிர்க் கட்சிக்கு அப்படிப்பட்ட அருகதை கூட கிடையாது. அவர்களுடைய கொள்கையின் போக்கும் அந்த நிலைமையில் இருப்பதால் இப்படிப்பட்ட அறிக் கையைக் கொண்டுவரக்கூடிய அருகதை இல்லாத காரணத்தால் தான் நமது வரவு-செலவுத் திட்டத்தைக் கண்டு எதையாவது சொல்லி வைப்போம் என்ற காரணத்தால் அப்படிச் சொல்லு கிறார்கள். இந்த வரவு-செலவுத் திட்டத்தைப் பார்த்த பிறகாவது நம் சர்க்கார் மக்கள்மீது எவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறார்கள் என்பது நன்றாகத் தெரியவரும். அதைப் பார்த்துவிட்டு அவர்கள் நன்றாகப் புரிந்து கொள்வார்கள். மக்களுடைய பிரச்னை களைத் தீர்த்து வைக்க இந்த சர்க்கார் எவ்வளவு அக்கறை கொண்டி ருக்கிறார்கள் என்பது இதிலிருந்து நன்றாகத் தெரிய வரும். நன்றாகப் புரிந்து கொள்ளுவார்கள். எவ்வளவோ முக்கியமான திட்டங்களைக் கொண்டுவந்து இந்தச் சர்க்கார் நிறைவேற்றப்

[Srimathi T. N. Anandanayaki] [11th December 1961

போகிறார்கள். அதிலும் குறிப்பாக 65 வயது வந்த கிழவர்களுக்கு மாதம் இருபது ரூபாய் தரப்போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் மூலம் இரண்டு லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஒதுக்கி வைத்த தொகை இரண்டு லட்ச ரூபாயாக இருந்தாலும் இது ஒரு வரவேற்கத்தக்க விஷயம் என்பதை எல்லோரும் உணரவேண்டும். இன்றைக்கு எல்லாம் பார்த்தால் பத்தாயிரம் கிழவர்களுக்குக் கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படலாம். இந்தக் கிழவர்களுக்குக் கொடுத்துதான் வோட்டு வாங்கப் போகிறார்களா என்று கனம் கோவிந்தசாமி கேட்கிறார். ஒரு கிழவர் என்றால் அவரை அண்டி இருபது பேர்கள் இருக்கிறார்கள். இந்த இருபது பேர்களுக்கு நன்மை ஏற்படுவதாக இருக்கும். ஆகவே கிழவர்களுக்குக் கொடுப்பதில் தவறு ஒன்றும் இல்லை. இந்த இருபது பேர்கள் மூலமாக 200 ஓட்டுகள் வரலாம். ஆகவே இந்தத் திட்டம் ரொம்பவும் வரவேற்கக்கூடிய திட்டம் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இதில் ஈடுபடுவதில் தவறு ஒன்றும் இல்லை. அதைப் போலவே மாணவர்களுக்கு கடன் கொடுக்கக்கூடிய திட்டமானது ரொம்பவும் வரவேற்கக்கூடியதாக இருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்ள விருப்பப்படுகிறேன்.

அறுபத்தைந்துக்கு மேற்பட்ட கிழவர்களுக்கு சம்பளம் கொடுக்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. இந்தத் திட்டத்தை அமுல் நடத்தும்போது அதை நல்ல முறையில் அமுல் நடத்த வேண்டும். அதில் பல தொல்லைகள் ஏற்படலாம். இதை அமுல் நடத்தப் போகிறவர்கள் அந்தந்த மாவட்ட கலெக்டர்கள்தான். அவர்களுக்குத்தான் இந்த அதிகாரத்தைக் கொடுக்கப் போகிறார்கள். இதில் எந்தவிதமான சிக்கலும் வாராமல் இருக்கும் அளவில் இதை அமுல் நடத்த வேண்டும். இதற்கு கலெக்டரிடம் போகும்போது உன்னுடைய ஜாதகத்தைக் கொண்டு வா அல்லது உன்னுடைய படிப்பைக் காட்டும் அளவில் பள்ளிக்கூட சர்ட்டிபிகேட்டைக் கொண்டு வா என்று கேட்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இந்தப் பணம் வேண்டும் என்று கேட்க வருகிறவர்களை டாகுமெண்டரி எவிடன்ஸ் கொண்டு வா என்றெல்லாம் கேட்காமல் இருக்கவேண்டும். ஆகவே அவர்களுக்கு எந்த விதத்திலும் துன்பம் கொடுக்காமல் இதை அமுல் நடத்தவேண்டும். நாம் திட்டத்தைக் கொண்டு வருவதில் பிரயோஜனம் இல்லை. அது சிக்கல் இல்லாமல் நல்ல முறையில் அமுல் நடத்தப்பட வேண்டும். எந்தவிதமான ஆட்சேபகரமான விஷயங்களையும் கிளப்பாமல் இருக்க வேண்டும். தன்னுடைய வயதே தெரியாத கிழவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். எனக்குத் தெரியும் எத்தனையோ கிழவிகளுக்கு தன்னுடைய வயதே தெரியாது. அவர்களுக்கே அப்படி இருக்கும்போது கிழவர்கள் எப்படி தன்னுடைய வயதை தெரிந்து கொண்டிருக்க முடியும். ஆகவே பணம் வாங்க வருகிறவர்களுக்கு பிரயோசனம் இல்லாமல் போகும் அளவிற்கு இதை அமுல் நடத்தக் கூடாது. சாதாரணமாக சொல்லுவார்கள் ஆண்டவன் வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்கவில்லை என்று. அப்படி இல்லாமல் அரசாங்கம்

பணம் தருகிறேன் என்று சொல்லியும் அதை அமுல் நடத்தக் கூடிய அதிகாரிகள் அந்தத் திட்டம் அமுல் நடத்த முடியாமல் போகும் அளவில் நடத்தக்கூடாது. அதற்கு வேண்டிய நட வடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். அரசாங்கம் கொடுக்கக்கூடிய சலுகைகளை கிழவர்கள் பூராவும் அனுபவிக்கும் அளவில் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும். பல அதிகாரிகள் இல்லை என்று சொல்லக்கூடிய மனப் பான்மையில்தான் இருப்பார்கள். இதற்கு இடம் இல்லாமல் நல்ல முறையில் அமுல் நடத்தும்படி சொல்ல வேண்டும். ஜாதகத்தைக் கொண்டு வா அல்லது சர்டிபிக்கட்டைக் கொண்டு வா என்ற முறையில் இல்லாமல் அவர்களே பார்த்து வயதைக் கணக்கிட்டு அவர்களுக்கு சம்பளம் கொடுக்கும் அளவில் இருக்க வேண்டும். இந்தத் திட்டத்தை அமுல் நடத்தும் அதிகாரிகள் ஜாக்கிரதை யாகவும் திறமையாகவும் அமுல் நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஒரு டாக்டரை நியமித்து அவரைக்கொண்டு வயதை நிர்ணயம் செய்ய வேண்டும்.

இதைப்போலவே மாணவர்களுக்கு கடன் கொடுக்கும் திட்டம். இதுவும் ரொம்பவும் வரவேற்கக்கூடியதாக இருக்கிறது. இப் பொழுது எவ்வளவோ குறைந்த வருமானக்காரர்கள் தங்களு டைய பிள்ளைகளை மேல் படிப்பு படிக்க வைக்க முடியாமல் கஷ்டப் படுகிறார்கள். அவர்களுக்கு இத்திட்டம் ரொம்பவும் சௌகரிய மாக இருக்கும். தங்களுடைய பிள்ளைகளுக்கு படிப்பு வசதி கொடுக்க முடியாமல் பல நடுத்தர குடும்பங்கள் கஷ்டப்பட் டுக்கொண்டிருக்கின்றன. இந்தச் சலுகை என்.ஜி.ஓ.-க்களுக்கு மட்டும் கொடுப்பது சரியல்ல. (கனம் ஸ்ரீ. சி. சுப்ரமணியம்: ஆசிரியர்களுடைய குழந்தைகளுக்கும்) ஆசிரியர்களுடைய பிள்ளைகளுக்கும் என்று சொல்லப்படுகிறது. இப்படி இல்லாமல் சாதாரணமாக எல்லோருக்குமே இது இருக்கும்படியான அளவில் வருட வருமானம் 6,000 ரூபாய்க்குக் குறைவாக இருக்கக்கூடிய எந்தக் குடும்பமாக இருந்தாலும் அந்தக் குடும்பத்திற்கு இந்தத் திட்டத்தை நீடிக்க வேண்டும். அது ஆசிரியர்களாக இருந்தாலும் சரி, என்.ஜி.ஓ.-வாக இருந்தாலும் சரி அல்லது சாதாரணமான குடும்பமாக இருந்தாலும் சரி எல்லோருக்கும் இதை நீடிக்க வேண்டும். இதனால் மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த ஊழியர்களு டைய குடும்பத்திற்கும் சௌகரியம் ஏற்படலாம். அந்த அளவில் இதை அமுல் நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இதற்கு மாதச் சம்பளம் அல்லது வருமானம் 500 ரூபாய்க்கு மேல் இருக்கக்கூடாது என்று இருக்க வேண்டும். நாமோ கடன் தரப் போகிறோம். அதை ஏன் நாம் தாராளமாக எல்லோருக்கும் கொடுக் கக்கூடாது. கொடுத்த கடனையோ திருப்பி வாங்கிக் கொள்ளப் போகிறோம். அது யாராக இருந்தால் என்ன? அப்படி எல்லோ ருக்கும் கொடுக்கக்கூடிய அளவில் இருந்தால் அது வரவேற்கக் கூடியதாக இருக்கும். கனம் அமைச்சர் அவர்கள் டில்லிக்குச் சென்றாலும் நமது திட்டம் தொடர்ந்திருக்கும்படியாக இருக்க வேண்டும். வருங்காலத்தில்கூட இது தொடர்ந்து அமுல் நடத்தப் படவேண்டும். இதெல்லாம் பொதுவான விஷயமாக இருக்க

வேண்டும். எந்தக் கட்சி அரசாங்கமாக இருந்தாலும் அது அமுல் நடத்தக்கூடிய அளவில் இருக்க வேண்டும்.

அடுத்தபடியாக லிபரலைஸ்ட் பென்ஷன் ஸ்கீமை கொண்டுவந்திருக்கிறார்கள். ஏற்கனவே பே கமிஷன்படி இதே ஸ்கீமைக் கொண்டுவந்திருக்கிறார்கள். அப்படிக் கொண்டுவந்தும் அதனால் பலருக்கு இன்னும் பலன் கிடைக்கவில்லை. சுமார் 1-½ ஆண்டுகள் ஆகியும்கூட இதனால் பலர் இன்னும் சௌகரியம் அடையாமல் இருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் சர்க்கார் அச்சகத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். ஆகவே அது சம்பந்தமாக எனக்கு நன்றாகத் தெரியும். அவர்களில் பலருக்கு இந்த வசதி கிடைக்கவே இல்லை. சாதாரணமாக அவர்களுக்கு முப்பது அல்லது நாற்பது ரூபாய்தான் பென்ஷன் கிடைக்கும் அளவில் இருக்கிறது. இதில் எங்கேயோ கோளாறு இருக்கிறது. அதைக் கண்டு பிடித்து அதற்கு மாற்றம் செய்யவேண்டியதாக இருக்கிறது. ஆகவே இப்படிப்பட்ட லிபரலைஸ்ட் பென்ஷன் ஸ்கீம் கொண்டுவரும்போது அது நல்ல முறையில் அமுல் நடக்கும் அளவில் கொண்டு வரவேண்டும். ஆகவே அதிலுள்ள சிக்கலை நன்றாகக் கவனித்து அதை நல்ல முறையில் அமுல் நடத்த முன்வரவேண்டும் என்று கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

1-00 p.m. இந்தத் திட்டத்திலே 'மிடில் இன்கம் க்ரூப் ஹௌசிங் ஸ்கீம்' என்பதற்காக ஒரு தொகை ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். இப்பொழுது நடத்தப்படும் மிடில் இன்கம் க்ரூப் ஹௌசிங் ஸ்கீம்களெல்லாம் சாதாரண நடுத்தர வர்க்கத்தினர் பங்கெடுக்கக்கூடிய நிலைமையில் இல்லை. அதற்குப் போடும் திட்டங்களைப் பார்த்தால், முதலில் வீட்டுக்கு வேண்டிய பணத்தை ஓரளவு கட்டவேண்டும், நிலத்திற்குப் பணம் கட்டவேண்டும். இப்படி வீட்டை எடுக்கக் குறைந்தது ஏழாயிரம், எட்டாயிரம் ரூபாய் வரையில் ஆறு மாதங்கள், ஒன்பது மாதங்களுக்குள் தவணைகளில் வாங்கிவிடுகிறார்கள், வீடு கட்டித்தரும் இலாகா. இப்படி 7,000 ரூபாய், 8,000 ரூபாய் முதல் வைத்திருந்தால் அவன் ஏன் கடனுக்கு வருகிறான்? இந்த நிலைமையில் பார்க்கும்போது, அப்பர் மிடில் க்ளாஸ் என்று சொல்லக்கூடிய உயர்ந்த வருமானம் பெறக்கூடிய நடுத்தர வகுப்பினருக்குத்தான் உதவியாக இருக்கிறதே தவிர, உண்மையிலேயே அவதிப்படும் நடுத்தர வர்க்கத்தினர்களுக்கு எந்த உதவியும் இல்லை என்று நான் சொன்னால் அதை யாரும் மறுக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன். மிடில் இன்கம் க்ரூப் ஹௌசிங் ஸ்கீமுக்குச் செலவிடும் அரசாங்கம், லோ இன்கம் க்ரூப் ஹௌசிங் ஸ்கீமுக்கு அதிக அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால், வட சென்னையில் ஒரு சின்ன வீட்டில் பத்து குடும்பங்கள் பல பிள்ளைகளை வைத்துக்கொண்டு அவதிப்படுவதைப் பார்க்கும்போது இந்தச் சமுதாயம் என்றைக்கு முன்னேறி வருமோ என்ற சந்தேகம் வந்துவிடுகிறது. அங்கு அவதிப்படுகிறவர்கள் பொதுவாக நடுத்தர வகுப்பினர்கள்தான். அப்படிப்பட்டவர்களுக்குக் குறைந்த

11th December 1961] [Srimathi T. N. Anandanayaki]

தொகைக்கு வீடு கட்டித் தருவதில் அரசாங்கம் அக்கறை காட்டினால், அதன் மூலமாகப் பல பிரச்சினைகளைச் சமாளிக்க முடியும். பத்து குடும்பங்கள் ஒரே வீட்டில் சுகாதார வசதி யற்று இருப்பதால் பல நோய்கள் கிளம்பி சமுதாயத்தை நசுங்க வைத்துவிடுகிறது என்பதை உணர்ந்திருக்கிற அரசாங்கம் அவர் களுக்கு தக்க வகையில் உதவவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். வீட்டுப் பிரச்னையை உடனடியாகத் தீர்க்க 'ஸட்டிலைட் டௌன்ஸ் ஏற்படுத்தப் போவதாகச் சொல்கிறார்கள். இதெல் லாம் அவசியந்தான். இருந்தாலும், ஏற்கனவே வீடு வைத்திருப் பவர்கள் வேண்டுமென்றால் இன்னொரு வீடு வாங்க முடியுமே தவிர, பண வசதி இல்லாதவர்களுக்கு வீடு கிடைக்கும் வசதி இன்னும் ஏற்படவில்லை. ஆகவே, லோ இன்கம் க்ரூப் ஹௌசிங் ஸ்கீமில் அதிக அக்கறை காட்டி, குறைந்த செலவில் வீடுகள் கட்டித்தர முன்வந்தால் சாதாரண நடுத்தர வகுப்பினர்களுக்குப் பெரிய உதவியாக இருக்கும் என்று நான் எண்ணுகின்றேன்.

அடித்தளத்தில் வாடி வதங்குகிற தொழிலாளிகளுக்கு நகரத் திற்கு அப்புறத்தில் இருக்கும் சில இடங்களை இனாமாகக் கொடுத் தால் நலமாக இருக்கும். ஹரிஜனங்களுக்குத்தான் வீட்டு மனைக் கட்டுகள் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். என்னுடைய தொகுதியை எடுத்துக் கொண்டால், அங்கு பீடித் தொழிலாளி கள் பல பேர் இருக்கிறார்கள். அவர்கள் இருப்பதற்கு இடம் இல்லை. ஒரே வீட்டில் பத்து பேர்கள் இருந்து பீடித் தொழில் செய்கிறார்கள். அங்கு இலைகளையும் புகையிலையும் வைத்துக் கொண்டு மிக மிக அவதிப்படுகிறார்கள். நேரில் பார்த்தால்தான் அவர்களுடைய நிலைமை புரியும். இத்தகைய தொழிலாளி களுக்கு நகரத்தின் எல்லைக்குக் கொஞ்சம் தள்ளி, திருவொற்றியூ ரிலிருந்து வண்ணாரப் பேட்டை வரையில் இருக்கும் புரம்போக்கு நிலத்தை ஆளுக்குக் கொஞ்சமாக மனைக்கட்டுக்காகப் பிரித்துக் கொடுத்தால் அவர்கள் நல்ல குடிசை போட்டுக்கொண்டு வாழ வசதியாக இருக்கும். நகரத்தில் நெருக்கடியும் இருக்காது. சுகா தாரமும் பாதிக்கப்படாது. ஹரிஜனங்களுக்கு மாத்திரம்தான் மனைக்கட்டு என்பது கூடாது. அடித்தளத்தில் இருக்கும் சாதாரண தொழிலாளிகளுக்கும் வீட்டு மனை தரவேண்டும்.

மத்திய அரசாங்கமும் நம்முடைய அரசாங்கமும் இண்டஸ்ட் ரியல் ஹௌஸிங் ஸ்கீமுக்குக் கொடுக்கும் பணத்தைப் பயன்படுத்துவதே இல்லை. தனி முதலாளிகள் பலர் தங்களுடைய தொழிலாளிகளுக்கு வீடு கட்டித் தருவதில்லை. பல தொழிற்சாலை களுக்கு இன்னும் லேபர் காலனிகள் இல்லை. அவர்களுடைய தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு வீட்டு வசதி இல்லை. நம் அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் பணம் கொடுத்தும் அதைப் பயன் படுத்துவதே இல்லை. பயன்படுத்த முன்வந்தால் அரசாங்கம் ஒத்துழைப்பது இல்லை. உதாரணமா கச் சொல்லவேண்டுமானால், திருநெல்வேலியில் பெரிய மில் முதலாளி ஒருவர், தன்னுடைய மில்லில் வேலை செய்யும் தொழி லாளிகளுக்குக் காலனி கட்டுவதற்கு இடம் கேட்டார். புறம் போக்கு நிலத்திற்கு என்ன விலை வேண்டுமானாலும் தருகிறேன் என்று கேட்டார். அப்படிக் கேட்டும் இன்னும் அந்தப் புறம்

போக்கு மனையைக் கொடுப்பதுபற்றி உத்தரவு இல்லை. 'நிலம் கிடையாது' என்றே அரசாங்கத்திலிருந்து உத்தரவு வருகிறது. நிலத்தைக் கொடுத்து தொழிலாளிகளுக்கு வீடு கட்டச் சொல்வது ஒரு புறம். மறு புறத்தில் வீடு கட்டுவதற்கு ஒத்துழைப்பு தரப் படுவதில்லை. இரண்டுக்கும் இடையே யார் வீடு கட்ட முன்னுக்கு வருவார்கள் என்று பார்க்க வேண்டும். தொழிலாளிகளுக்கு வீடு கட்டும் திட்டத்தைப் பொறுத்தவரையில் அரசாங்கம் அவசரப் பிரச்னையாக இதை எடுத்துக்கொண்டு, வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டும். சென்னை அரசாங்கத்தினர், பிற மாகாணங்கள் மாதிரி இண்டஸ்ட்ரியல் ஹௌசிங்கிலே பெரும் பகுதியைப் பயன் படுத்தாது விட்டுவிடாமல் நாம் எப்படியாவது பயன்படுத்த வழி கண்டுபிடித்து, வேண்டிய சலுகை கொடுத்தால் தொழிலாளிகள் அடிப்படை வாழ்க்கை வசதி பெற்று வாழ முடியும் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

விதவைப் பெண்களுக்கு உதவி தேவை என்று கேட்டார்கள். அது மிகவும் வரவேற்கத்தக்கது. ஆண்களைக் காட்டிலும் விதவைப் பெண்கள் குழந்தைகளோடு மிக மிக அவதிப்படுகிறார் கள். குழந்தைகளைக் கொண்டுபோய் அனாதை விடுதிகளில் சேர்க்கவேண்டுமென்றாலும், நீதி மன்றத்திற்குப் போய், 'தாய் தந்தையர் இல்லாத அனாதை' என்று தீர்ப்பு வாங்கிவந்தால்தான் சேர்த்துக்கொள்வோம், இல்லாவிட்டால் சேர்த்துக்கொள்ள மாட்டோம் என்று கூறுகிறார்கள். நீதி மன்றத்தினர் குழந்தையை 'டெஸ்டிடியூட்' என்று சொன்னால்தான் சேர்த்துக்கொள்வோம் என்று கூறுகிறார்கள். 'டெஸ்டிட்யூட்'-டைக் காட்டிலும் மோச மான நிலையில் விதவைப் பெண்கள் மூன்று நான்கு குழந்தைகளை வைத்துக்கொண்டு படும் தொல்லை கணக்கில் அடங்காது. குழந் தைகளை எப்படியாவது முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்று தவிக்கும் விதவைப் பெண்களுடைய நிலை பரிதாபகரமானது. அப்படிப்பட்ட குழந்தைகளைச் சேர்த்துக் கொள்வதற்கு இன்னும் பல விடுதிகளை ஆரம்பிப்பது வரவேற்கத்தக்கது. இப்படிப்பட்ட குழந்தைகளை எந்த அளவுக்கு நல்ல முறையில் வளர்க்கிறோமோ அந்த அளவுக்கு வருங்காலத்தில் நாட்டில் பிரச்னைகள் இருக்காது இப்படிப்பட்ட குழந்தைகளின் வளர்ச்சியில் அக்கறை காட்டி, மாவட்டத்திற்கு ஒரு அனாதை விடுதியை ஏற்படுத்த வேண்டும். ஓரிரண்டு விடுதிகள் சென்னை நகரில் இருக்கின்றன. அதனால் எல்லோரும் சென்னை நகருக்கு வரவேண்டி ஏற்படுகிறது. சிபார்சு பிடித்து ஒரு பிள்ளையை சேர்ப்பதற்குள் உயிர் போய் விடுகிறது. ஆகவே, இத்தகைய குழந்தைகளைப் பராமரிப்பதற் காக விடுதிகளை மாவட்டத்திற்கு ஒன்றாக ஆரம்பிப்பது மிக மிக அவசியம் மட்டுமல்ல அவசரமானது என்பதையும் நான் அரசாங் கத்திற்குச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக சர்வீஸ் ஹோம்ஸ் பற்றி ஒரு வார்த்தை. அனாதைப் பெண்களுக்குப் பாதுகாப்பு அளிக்கக்கூடிய வசதி யைச் செய்வது மிகவும் அவசியம். இல்லாவிட்டால் சமுதாயத் தில் பெரும் தீமையாக விளங்கும். சர்வீஸ் ஹோம்ஸ் இன்னும் அதிகமாக ஏற்படுத்த வேண்டும். இன்றைக்கு ஏற்படுத்தியிருக் கும் சர்வீஸ் ஹோம் விதிகளின்படி சர்வீஸ் ஹோமில் சேர கோர்ட்

11th December 1961] [Srimathi T. N. Anandanayaki]

டுக்குச் சென்று 'கெட்டவள்' என்று பெயர் வாங்கவேண்டும் என்று இருக்கிறதே தவிர, நல்ல வகையிலே வாழ இடம் இல்லை. ஒன்றே ஒன்று தாம்பரத்தில் வைத்திருக்கிறார்கள். அது போதாது. நூறு பேர்களுக்குக் கூட அது போதாது. ஒரு சர்வீஸ் ஹோம் 'இன் எனி ஆப் தி டிஸ்ட்ரிக்ட்ஸ்'-இல் ஆரம்பிக்கப் போவதாக ஒரு திட்டத்தைச் சேர்த்திருக்கிறார்கள். இத்தகைய சர்வீஸ் ஹோம்களை இன்னும் அதிகரிக்க வேண்டும். விதவைகளுக்கு உதவிச் சம்பளம் கொடுப்பதோடு இந்த உதவியையும் செய்தால் பரவாயில்லை. பெண்கள் விடுதிகளில் அவர்களுடைய பிள்ளைகளையும் சேர்த்தால் அவர்கள் நல்ல முறையில் முன்னேறி வர வாய்ப்பு ஏற்பட முடியும் என்ற காரணத்தால் சர்வீஸ் ஹோம்களை அதிகரித்தால் நன்றாக இருக்கும்.

சர்வீஸ்-கம்-ட்ரெயினிங் சென்டர்ஸ் பற்றி திட்டத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. பல திட்டங்கள் இருக்கின்றன. பொம்மூரில் மாட்ச் பாக்டரி வைத்தார்கள். சர்வீஸ்-கம்-ட்ரெயினிங் சென்டர்கள் நஷ்டத்திலே இருக்கின்றனவேயொழிய லாபத்தில் வேலை செய்யவில்லை. நஷ்டம் தாங்க முடியாத காரணத்தால் சிலவற்றை மூடியும் விடுகிறார்கள். இத்தகைய நிலைமை நல்லதல்ல. ஆரம்பித்தும் நல்ல பெயர் இருக்காது. இப்படித் தொழில் வளர்ச்சிக்கான நிலையங்களை ஒருசில மக்களுக்கு வேலைவாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்பதற்காக ஆரம்பித்திருக்கிறோம். அப்படி ஆரம்பித்த தொழில் நிலையம் தொடர்ந்து நடந்தால் அவர்களுக்கு உதவியாக இருக்குமேயொழிய, என்றைக்கு மூடப்பட்டுவிடுமோ என்ற அச்சத்தில் இருந்தால், அது சரியல்ல. அத்தகைய தொழில் நிலையங்கள் நஷ்டத்தில் ஓடுகின்றன. நஷ்டத்தில் ஓடும் தொழில் பயிற்சி நிலையங்களைச் சற்று கவனித்து, அவைகளை சீர்திருத்துவது அவசியம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இறுதியில் ஒரு விஷயத்தோடு முடித்துக் கொள்கிறேன். ரோடு ஸ்கீம்களுக்காக சென்னை நகராண்மைக் கழகத்திற்குப் பல லட்ச ரூபாய் கொடுத்தோம். இன்னும் ரோடுகள் நல்ல முறையில் விஸ்தரிக்கப்படவில்லை. ரோடுகள் செப்பனிடப்படவும் இல்லை. சிறு சிறு சந்துகள் ரொம்ப ஆபாசமாக இருக்கின்றன. நகரசபை நிர்வாகம் நரகசபை நிர்வாகமாக நடந்துகொண்டிருக்கிறது. அந்த நிர்வாகத்திற்கு அரசாங்கம் கொடுக்கும் பணம் ஒழுங்காகச் செலவிடப்படுகிறதா, குறிப்பிட்ட திட்டங்களுக்குச் செவ்வனே செலவிடப்படுகிறதா, என்பதைப் பார்ப்பதற்காக ஒரு தனிக் கமிட்டியை அரசாங்கம் ஏற்படுத்த வேண்டும். முடிந்தால் அந்தக் கமிட்டியில் நகர எம்.எல்.ஏ.-க்களையும் சேர்த்துக் கொள்வது நலமாக இருக்கும். சென்னை நகரத்தைப் பொறுத்தவரை அரசாங்கம் கடன் கொடுக்கும் பணம் ஒழுங்காகப் பயன்படுத்தப்பட்டதா, இல்லையா என்று பார்க்க, அதுவும் குறித்த காலத்தில் பயன்படுத்தப்பட்டதா என்பதைக் கண்காணிக்க ஒரு கமிட்டி அவசியம். அந்தக் கமிட்டியை ஏற்படுத்தினால் உண்மையிலேயே நகர• சபைக்கும் அரசாங்கத்திற்கும் தொடர்பு இருக்கும். இரண்டுக்கும் இடையே எப்படித் திட்டங்கள் நடத்தப்படுகின்றன என்பதைக் கண்காணிக்க வாய்ப்பு இருக்கும். இத்

தகைய கமிட்டி சென்னை நகரத்தைப் பொறுத்தவரையில் அவசியம். சென்னை நகரசபைக்கு முப்பது லட்ச ரூபாய் கொடுத்திருக்கிறோம் சில ரோடுகளுக்காக. இந்த ரோடுகளை எப்படிப் போட்டார்கள் என்று தெரியவில்லை. நான்கு மைல் நீள ரோடு 26 லட்ச ரூபாயில் போட்டார்கள் என்று கேள்விக்குப் பதில் அளித்தபோது தெரிந்தது. இதையெல்லாம் கண்காணிக்க ஒரு கமிட்டி போடுவது அவசியம். சென்னை நகர சட்டசபைப் பிரதிநிதிகளுக்கு நகரசபையில்தான் இடம் கொடுக்கவில்லையென்றாலுங் கூட, இந்தக் கமிட்டியிலாவது ஓரளவு இடம் கொடுத்தால் உருப்படியாக வேலையைக் கண்காணிக்க முடியும் என்று தெரிவித்து என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன் .

* **SRI R. SRINIVASA IYER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த இடைக்கால நிதி நிலை அறிக்கையை வரவேற்கின்றேன் ; ஆதரிக்கின்றேன். இதைப்பற்றி பல எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இந்தச் சபையிலும், வெளியிலும் பலவாறாகப் பேசியிருக்கிறார்கள். கட்சி சார்பில்லாமல் பொதுமக்களுடைய அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கின்ற பத்திரிகைகள்கூட—குறிப்பாக மெயில் முதலிய பத்திரிகைகள்—கனம் நிதி அமைச்சர் அவர்களின் பத்து வருஷ சாதனைகளையும், இந்த இடைக்கால பட்ஜெட்டில் அவர் போட்டிருக்கிற திட்டங்களையும் பற்றி வரவேற்றுப் பாராட்டியிருக்கிறார்கள். ஆகையால் எந்த விதத்தில் இதில் குறை காண்பது என்ற கண்ணோட்டத்தோடு பார்த்தாலும்கூட நல்ல வழியில் ஒரு குறையைக் கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை. எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பிச்சைக்காரர்களையும் இல்லாவிட்டால் விதவைகளையும் பற்றிப் பேசி—அவர்களையாவது சர்க்காருக்கு விரோதமாக ஆக்கலாம் என்ற எண்ணத்தில் பேசுகிறார்களே தவிர உண்மையில் பிச்சைக்காரர்கள் எல்லோருக்குமே உதவி செய்யச் சொல்லி இந்த நாட்டையே பிச்சைக்கார நாடாகப் பண்ணவேண்டுமா என்பதைக்கூட அவர்கள் உணரவில்லை.

அதோடு இது தேர்தல் பட்ஜெட் என்று ஒரு குறை சொல்லுகிறார்கள். தேர்தல் காலத்திற்கு முன் பட்ஜெட் சமர்ப்பிப்பது இதுதான் முதல் தடவையா? தேர்தல் காலத்து இடைக்கால பட்ஜெட் என்பதால் இதைக் குறைவு உடையதாகவேதான் சமர்ப்பிக்கவேண்டுமென்று அவர்கள் கருதுகிறார்களா என்று கேட்க விரும்புகிறேன். சென்ற பத்து ஆண்டு காலமாக—இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தையும் வகுத்து சென்னை மாநிலம் நல்லமுறையில் முன்னேறி வருகிறது என்பதை அயல்நாட்டில் இருந்து வந்தவர்கள் எல்லாம் கூடப் பாராட்டியிருக்கிறார்கள். அயல்நாட்டு "நியூயார்க் டைம்ஸ்" பத்திரிகையில் கூடப் பாராட்டி எழுதப்பட்டிருப்பதை இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டியிருப்பதைப்போல ஏற்கனவே வந்த பட்ஜெட்டுகளை எல்லாம் விட—இதுவரையில் நாட்டின் முன்னேற்றங்களைக் குறித்து நாம் என்ன என்ன செய்திருக்கிறோமோ அந்தக் காரியங்களைத் தொடர்ந்து நடத்தக்கூடிய முறையில் இது அமைந்திருக்கிறது. இதை வரவேற்காமல் இருக்க

11th December 1961] [Sri R. Srinivasa Iyer]

எதிர்க்கட்சியில் இருப்பவர்களால்கூட முடியாது. இதைப் பற்றி எதிர்க்கட்சி அங்கத்தினர் ஒருவர் பத்திரிகை நிருபரிடம் சொன்னதுபோல "இது ரோஸி பட்ஜெட்—பொறுத்திருந்து பார்ப்போம்" என்ற அளவுக்கு—இதை அழகான—ரோஸி பட்ஜெட் என்றுவது ஒப்புக்கொண்டார்களே, அந்த அளவில் திருப்தி படுகிறோம். நிச்சயமாக சென்ற ஐந்தாண்டுத் திட்டங்களைப் போலவே—பொதுமக்களுக்குத் திருப்தியாகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தையும் இந்த மந்திரி சபை மட்டும் அல்ல, பின்னால் வரக்கூடிய காபினெட்டும் நிறைவேற்றப் போகிறது என்பதைச் சொல்ல விரும்புகிறேன்.

முக்கியமாக இந்த இடைக்கால பட்ஜெட்டில் நூறு திட்டங்களுக்கு மேல் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதில் பிச்சைக்காரர்களுக்கு—65 வயதுக்கு மேல் உள்ள அநாதைகளுக்கு ஒரு திட்டம். 'அநாதைகளுக்கு' டெபனேஷன் இல்லை என்கிறார்கள். அநாதை என்றால் தமிழில் புரியாதா? சாப்பாட்டுக்கு இல்லாமல், காப்பாற்றுவதற்கும் நாதியில்லாமல் தவிக்கக்கூடியவர்களுக்கு இந்த உதவி. சமீபத்தில்கூட சர்க்கார் சிப்பந்தியாக இருந்து தாய் தகப்பன், மனைவி மக்களைத் தவிக்கவிடுகிறவர்கள் பேரில் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்றுகூட அறிக்கை போட்டிருக்கிறோம். ஆகையால் பிச்சைக்காரர்கள் எல்லோருக்கும் இந்த மானியத் தொகை கொடுக்கவேண்டும் என்று சொன்னால் இந்த நாட்டையே பிச்சைக்கார நாடாக ஆக்கத்தான் யோசனை சொல்வதாக ஆகும். நமக்குத் தெரியும், எத்தனை பேர் பிச்சையெடுப்பதையே தொழிலாகக் கொள்கிறார்கள் என்று. இதற்காக சின்னக் குழந்தைகளுடைய கண்ணையே கொடூரமாக நோண்டியும், கால் கைகளை முறித்தும் கொண்டுபோய்ப் போட்டுக்கொண்டு பிச்சை எடுத்ததையும் அறிவோம். இப்படிப்பட்டவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிப்பது என்றும் மத்திய சர்க்கார் நடவடிக்கை எடுத்ததையும், சட்டம் இயற்றியதையும் நாம் அறிவோம். ஆகவே எல்லாப் பிச்சைக்காரர்களுக்கும் மானியம் அளிப்பது என்பது சரியல்ல. நாளைக்கு 2 ரூபாய் சம்பாதிக்கக்கூடியவர்களுக்கு மானியம் எதற்காகக் கொடுக்க வேண்டும்? எழுபத்தைந்து வயதில் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கக்கூடியவனுக்கு மானியம் வேண்டாம். ஆகவே தான் இதில் செய்திருக்கும்படியான ஏற்பாடே மிகவும் நல்லது என்று சொல்ல விரும்புகிறேன். இரண்டு லட்சம் ரூபாயை ஒதுக்கி அதைக் கொண்டு தலா 1-க்கு ரூ. 20 வீதம் யாருக்கு கொடுக்கலாம் என்று பார்த்து கொடுப்பதற்கு கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது, நல்ல முறையிலேயே இது கொடுக்கப்படும் என்று நாம் நினைப்போம்.

அடுத்தபடியாக கட்டாயக் கல்வியைப் பற்றிச் சொன்னார்கள். நாம் அதை மூன்று கட்டமாக 6 முதல் 11, 11 முதல் 14, 14 முதல் 17 என்று வகுத்துக்கொண்டு முதல் கட்டத்தை அமுல் நடத்தினோம். இரண்டாவது கட்டம் அமுல் நடத்தப்படுகிறது. அதற்காக முன்னோடியாகச் சில திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன.

[Sri R. Srinivasa Iyer] [11th December 1961

எல்லாவற்றையும் ஒரேநாளில் செய்துவிட முடியுமா? புள்ளி விவரங்களை எடுத்துப் பார்த்தால் தெரியும். 1950-51 முதல் 1961-62 வரை 6 வயது முதல் 11 வயது வரையிலும் படிக்கும் மாணவர்களிலும் சரி, 11 வயது முதல் 14 வயது வரை படிக்கும் மாணவர்களிலும் சரி—இந்தியா பூராவும் இருக்கக்கூடிய ஆவரேஜைவிட சென்னை ராஜ்யத்தில்தான் அதிகம். புள்ளிவிவரங்களைச் சொன்னால் ரொம்ப நேரமாகும். அதனால் சொல்லவில்லை. பதினைந்து முதல் 17 வயது வரையில் ஹைஸ்கூல் படிப்பில் உள்ளவர்களை எடுத்துப் பார்த்தாலும் இங்கேதான் ஜாஸ்தியாக இருக்கிறது. இதன் தொடர்ச்சியாக பள்ளிக்கூடத்தில் வேலை செய்கின்ற ஆசிரியர்களுக்கு ஊக்கம் கொடுக்கவேண்டுமென்பதற்காக பென்ஷன் முறை, சம்பள உயர்வு எல்லாம் கொண்டு வந்திருக்கிறோம். அதோடு அவர்களுடைய பிள்ளைகளுக்கு சலுகை அளிப்பதோடு மேல் படிப்புக்கு மட்டும் இல்லாமல் தொழில் படிப்புக்கும் வட்டியில்லாக் கடன் கொடுக்கும் ஒரு திட்டத்தை இதில் வகுத்திருக்கிறார்கள். இதைப் பற்றிச் சொன்னால்—நமது நிதி அமைச்சர் அவர்கள் " wise stewardship " என்று சொல்வார்களே அப்படி நல்ல புத்தி கூர்மையுடன் பல திட்டங்களை முன்னேற்றகரமாகச் செய்துவருகிறார்கள் என்று பாராட்டுகிறேன்.

அதோடு பள்ளிக்கூடத்திற்குப் பிள்ளை போகவேண்டிய வயது 6. அதற்கு முன் 2 வயது முதல் 5 வயது வரையில் உள்ள குழந்தைகளுக்கு தனியாக ஒரு திட்டம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஒற்றுமையாக, சாதி வித்தியாசம் இல்லாமல் பழகவேண்டும், எந்த நேரத்தில் தூங்குவது, எந்த நேரத்தில் படிப்பது என்கிற பழக்கம், குழந்தைகளுக்கு வருவதற்காக ஒரு பயிற்சி திட்டத்தை அமைக்கவேண்டும் என்று இந்த சபையில் நான் சொல்லி வந்தேன். நமது நிதி அமைச்சர் அவர்களும் அத்தகைய திட்டம் போட உத்தேசம்; இன்னும் உருவாகவில்லை, ஆனவுடன் தெரிவிக்கிறேன் என்று சொல்லிவந்தார்கள். மேல்நாடு சென்று வந்த பிறகு, இதைப் பற்றி பல செய்திகளை ஆராய்ந்து வந்தபிறகு இப்போது ஒரு திட்டத்தை உருவாக்கி ஒரு டெவலெப்மெண்டு டிஸ்ட்டிரிக்ட்டில் ஒரு ப்ளாகில் முதலில் அமுலுக்குக் கொண்டுவர திட்டமிட்டிருக்கிறார்கள். இதைப் பாராட்டுகிறேன். உடனடியாக எல்லா இடத்திற்கும் கொண்டுவரவேண்டுமென்றால் எப்படி முடியும்? கொஞ்சம் கொஞ்சமாகத்தானே போகவேண்டும். இதில் கனம் முத்தையா செட்டியார் அவர்கள் கூட 4 வயது முதல் ஆரம்பிக்கவேண்டும் என்றார். வயது சம்பந்தப்பட்ட வரையில் அபிப்பிராய பேதம் இருக்கலாம். வளரும் பயிர் முளையிலே என்று சின்ன வயது முதலே நல்ல பழக்கம் உண்டாகவேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் திட்டம். நாம் வழியைக் காட்டியிருக்கிறோம். எத்தனையோ பேர்கள் கல்விக்காகத் தானம் கொடுக்கிறார்கள். பால மந்திர் போன்று இந்த இளம் சிறுவர்களுக்காக கிண்டர் கார்டன் முறையில் பள்ளிகளைத் துவக்க பலர் முன் வரவேண்டும். சர்க்கார் அதற்குவேண்டிய உதவியைச் செய்வார்கள் என்பதில் ஐயமில்லை.

11th December 1961] [Sri R. Srinivasa Iyer]

ஆகவே, அந்தத் திட்டத்தையும் நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். அடுத்தபடியாக, துண்டு விழும் பட்ஜெட் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதே வழக்கமாகிவிட்டது. ஆனால் இப்பொழுது புதுவரி போடவில்லை, அடுத்த தடவை மந்திரிசபை வந்தால் வரி போடலாம் என்று விட்டுவிட்டார்கள் என்று குறை சொல்லப்பட்டது. குறை கண்டு பிடிக்க முடியாத இடத்திலும் குறை கண்டு பிடிக்க வேண்டுமென்றால் "Drowning man catches at a straw" என்பதுபோல் குறை சொல்ல ஏதாவது ஒரு வழி கண்டு பிடிக்கலாம். நீலநிறக் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு பார்த்தால் எல்லாம் நீலமாகத்தான் தெரியும், சிகப்புக் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு பார்த்தால் எல்லாம் சிகப்பாகத்தான் தெரியும். இன்று காலையில்கூட கேள்வி நேரத்தின்போது கூறப்பட்டது, 1957-58-ல் இருந்து 1960-61 வருடம் வரை ரெவன்யூ அக்கவுண்டில் சர்ப்ளஸ் 341.34 லட்சத்திலிருந்து 93.84 லட்சம் வரை வந்திருக்கிறதென்று. ஆகவே, துராசை பிடித்து கூடுதல் வருமானம் வரும் என்று எதிர்பார்த்து பட்ஜெட் போடுவது சரியல்ல. திட்டம் போட்டு, பணம் குறைவாக இருக்கிறது, அதற்கு வேறு வழி தேட முடியும், அதற்குரிய வசதியிருக்கிறது என்று திட்டத்தை முதலில் போட்டு பின்னர் சர்ப்ளஸ்-யைக் காட்டுவதுதான் நல்ல அரசியலுக்கு—நல்லதொரு அரசாங்கத்திற்குள்ள ஒரு அடையாளம். நமக்கு நாம் போட்டு இருப்பதைவிட அதிகப்படியான வருமானம் வரும் என்று நிதியமைச்சர் அவர்களே சொல்லியிருக்கிறார்கள். நிதி நிலை அறிக்கையுடன் புள்ளி விவரங்கள் அப்பெண்டிக்ஸில் கொடுக்கப்பட்டிருக்கிறது. சேல்ஸ் டாக்ஸ் இனத்தில் 1961-62-ல் 18 கோடி என்று எதிர்பார்த்தது 3 கோடி ஜாஸ்தியாக 21 கோடி ரூபாய் அளவில் கிடைத்திருக்கிறது. இடையில்தான் ஓட்டை போய்க் கொண்டிருக்கிறது. சில அதிகாரிகளின் குறையால்தான் வருவாய் குறைகிறது. இருபத்தைந்து அல்லது 30 கோடி கூட இதிலிருந்து, இந்த இனத்திலிருந்து வருவாய் வர வழியிருக்கிறது. பின்னர், சென்ட்ரல் டாக்ஸ்களிலிருந்தும் நமக்கு அதிகப்படியான வருமானம் வர வழியிருக்கிறது. அடுத்த தடவை, இப்போதைய நிதியமைச்சர் அவர்கள் நிதியமைச்சராக வராவிடினும், இப்போதைய கட்சிதான் மந்திரி சபை அமைக்கக்கூடிய மெஜாரிட்டியுடன் வரப்போகிறது என்பதில் ஆட்சேபணையில்லை. வரப்போகிறவர்களும் புது வரி போடாது வரவினத்தை சரிக்கட்டி பூர்த்தியான ஒரு பட்ஜெட்டை கொண்டு வருவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். இதில் குறை சொல்ல வழியில்லாவிட்டாலும், கோரிக்கைகளை கேட்டுக் கொண்டேயிருந்தால்தான், ஒவ்வொன்றாக கவனிக்கப்படும். அழுத பிள்ளைதான் பால் குடிக்கும் என்பார்களே, அதேபோல் ரோடுபற்றி இம்மன்றத்தில் பேசாதவர்களே கிடையாது. ரோடுகளுக்கு பணம் கொடுப்பதில், பஞ்சாயத்து போர்ட்டுக்கு கொடுப்பதா அல்லது யாருக்கு கொடுப்பது என்ற சிக்கலான பிரச்னை இருந்து வருகிறது. ரோடுகளைப் போட்டுக் கொடுத்து விட்டால் மக்கள் எந்தக் குறையையும் ஜாஸ்தியாக சொல்லமாட்டார்கள்.

மின்சாரம் கொடுத்தாகிவிட்டது. அடுத்த ஐந்தாண்டுகளுக்குள் எல்லாயிடங்களுக்கும் மின்சாரம் அளிக்க திட்டம் போட்டாகி விட்டது. பத்திரிகைகளில்கூட, காவேரியில் ஹொகனக்கல் ப்ராஜெக்ட் பற்றிய ரிப்போர்ட் வந்திருக்கிறது. எஸ்டிமேட்டட் காஸ்ட் 53 கோடி என்று சொல்லியிருக்கிறார்கள். அதன்மூலம் 7 லட்சம் கிலோவாட்ஸ் பவர் உற்பத்தி செய்யலாம். காவேரிக்கு 450 அடி உயரத்தில் டாம் கட்ட உத்தேசித்திருப்பதாக ஸ்ரீ ஜெய் சுக்லால் உறுதி கூறியிருக்கிறார். தஞ்சாவூரிலுள்ள நீர்ப்பாசனத் திற்கு குறைவு இல்லாதபடி இத்திட்டம் நிறைவேறினால் நல்லது—வரவேற்கத்தக்கது. இப்பொழுது அங்குள்ள நீர்ப்பாசனத்திற்கு விரோதம் இல்லாது இன்வஸ்டிகேட் செய்யவேண்டும். ஹொகனக்கல் ப்ராஜெக்ட் பற்றிய ப்ரிலிமினரி ரிப்போர்ட் இம்மாநிலத்திலிருந்து சென்ட்ரல் வாட்டர் அன்ட் பவர் கமிஷனால் பெறப்பட்டிருக்கிறது.

THE HON. SRI P. KAKKAN : இத்திட்டத்தினால் தஞ்சை ஜில்லா வாசிகளுக்கு எந்தவிதமான நஷ்டமும் வந்து விடாது என்ற வாக்குறுதியை இந்த சபையில் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

SRI R. SRINIVASA IYER : அதில் எனக்கு சந்தேகமேயில்லை. பக்ரா நங்கலின் ஐந்தாவது ஜெனரேட்டரை தொடங்கும் நேரத்தில் நமது மதிப்பிற்குரிய பிரதம மந்திரி அவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள் என்றால், எவ்வளவு பவர் உற்பத்தியாகிறது, எவ்வளவு ஸ்டீல் உற்பத்தியாகிறது, எவ்வளவு பேர்கள் படிக்கிறார்கள் என்ற இம்மூன்றையும் வைத்துப் பார்த்தால் ஒரு பிரதேசத்தின் பொருளாதார நிலையை மதிப்பிட முடியும் என்று கூறியிருக்கிறார்கள். நமது மாநிலத்தில் இரும்பு தொழிற்சாலை ஏற்படப் போகிறது, படிப்பில் நாம் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம், பவரிலும் நாம் முன்னேறியிருக்கிறோம். ஆக நாம் பிற 14 மாநிலங்களைவிட முன்னிலையில் இருக்கிறோம் என்பதில் சந்தேகமில்லை. தொழிலுக்கு மின்சாரம் அளிப்பதில் நாம் மூன்றாவதாக இருந்தாலும் வர வர நாம் முன்னேறிக் கொண்டேயிருக்கிறோம். கீழக்கரை ரோடைப் "East Coast Sethu Road" பற்றி எவ்வளவு சொன்னாலும் போதாது. அந்த ரோடு குறித்து, ப்ளானிங் கமிஷன் சிபார்சு செய்தபடி மூன்றாவது திட்டத்தில் அதற்கான தொகை ஒன்றும் ஒதுக்கப்படவில்லை. இந்த ரோடை இந்த மாநில சிலவிலாவது அடுத்த வருடத்திற்குள்ளாக மதராஸ்—ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் பஸ் போகக்கூடிய ரோடாக சீர்படுத்தியாகவேண்டும். ராஜாமடத்திற்கு அருகே அக்னி ஆறு, அம்மணி சத்திரத்துக்கு அருகே அம்புலியாறு, பாம்பாறு, வெள்ளாறு, மீமிசல் ஆறு இவைகளில் ஹார்ட் பெட் போட்டு விட்டால், முத்துப்பேட்டை, அதிராமபட்டினம், ராஜாமடம் வழியாக 153 மைல் தூரம் தஞ்சை ஜில்லாவிற்குள் சீர்காழி முதல் தொண்டி வரையில் மேற்படி ஆறுகளில் தண்ணீர் அதிகமாயிருந் தால், வருஷத்தில் ஒரு 10 நாள் பஸ் போகாவிட்டாலும் பரவா யில்லை. போகலாம். தொண்டியிலிருந்து ராமேஸ்வரத்திற்கு பஸ் இருக்கிறது. ஆக, இந்தக் கீழ்க்கரை ரோடை அவசியம் போட வேண்டும்.

11th December 1961] [Sri R. Srinivasa Iyer]

பின்னர், ஹௌசிங். இதற்கு வேண்டிய அக்விஸிஷன் சீக்கிரம் நடக்க வேண்டும். பட்டுக்கோட்டையில் 5 வருஷமாக அக்விஸிஷன் டிலே யாகிறது. மூன்றுண்டுகளுக்கு முன்னர், செண்ட் 75 ரூபாய்க்கு கொடுத்து நிலம் இன்று அதேயிடத்தில் 450 ரூபாய்க்கு கேட்கிருன். ஆகவே உடனடியாக அக்வயர் செய்வதற்குள்ள நடவடிக்கைகள் எடுத்து அக்வயர் செய்யவேண்டும். ஒவ்வொரு ஜில்லா தலைநகரிலும் 200 அல்லது 400 ஏக்கர் என்று அக்வயர் செய்து அதை விடு கட்ட பிளாட்டுகளாக பிரித்து கவர்ன்மெண்ட் சர்வெண்ட்ஸ்-க்கு தலா 1-க்கு 10 செண்ட்ஸ் வீதம் கொடுத்துவிட்டால் Housing problem solve ஆகிவிடும். பட்டுக்கோட்டையில் இன்று மதருஸைவிட வாடகை அதிகமாக யிருக்கிறது. நூறு வீடுகள் கட்ட 1956-ல் திட்டம் போட்டும் அது இன்னும் நிறைவேறவில்லை. வில்லிவாக்கம், வண்டலூர் போன்ற இடங்களை satellite towns ஆக்கவேண்டும். மனைக்கட்டுகள் கொடுத்துவிட்டால் அவரவர்கள் இஷ்டம்போல் கட்டிக் கொள்ளட்டும். ஒரு ஆயிரம் ரூபாயில் ஒரு குச்சாவது போட்டுக் கொள்வார்கள். (பெல்) அதில்லாது லக்ஷக்கணக்கான சிலவில் அடுக்குமாடி கட்டி 35, 40 ரூபாய் என்று வாடகைக்கு கொடுப்பதால் வீட்டுக்கு படும் கஷ்டம் விமோசனம் அடையப்போவதேயில்லை. மற்ற விஷயங்கள் பேசவேண்டியதிருப்பதை அடுத்த சந்தர்ப்பம் கிடைத்தால் பேசிக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned.

1–30 p.m.

## IX. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A. Statutory Rules and Orders.*

* 410. *Notification issued with Government Memorandum No.* 84230-J1/61-3, *Revenue, dated* 11th *October* 1961, *amending the Revenue Department Notification No.* 5618, *dated the* 9th *December* 1950, *published at pages* 2279 *to* 3284 *of Part I of the* Fort St. George Gazette, *dated the* 12th *December* 1950, *appointing the date to bring into force certain provisions of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act,* 1948, *in West and East Mambalam Zamin Estate in Madras district.* [*Laid on the table of the House under section* 67 (4) *of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act,* 1948 (*Madras Act XXVI of* 1948)].

### *B. Reports, notifications and other papers.*

262. Fourteenth Report (Second Assembly) of the Committee on Estimates on the action taken by the Government on the recommendations of the Committee contained in the Report on Agricultural Machinery.

* 263. Budget speech of the Hon. Finance Minister (English and Tamil).

[11th December 1961

* 264 White Paper on the Interim Budget for 1962–63.

* 265. Demands for Grants and Detailed Budget Estimates for the year 1962–63.

* 266. Detailed Budget Estimates for Revenue for the year 1962–63.

* 267. Vote on Account for Expenditure in 1962–63.

* 268. Appendices to the White Paper on the Budget for 1962–63.

* 269. Notice of Demands for Advance Grants during the year 1962–63.

* 270. Annual Financial Statement (Budget) of the Government of Madras and Summary of the Financial position from 1960–61 (Accounts) to 1962–63 (Budget).

* 271. Programme for 1962–63 of the Third Five-Year Plan in Madras State.

---

*Placed on the table of the House on 9th December 1961.



## APPENDIX I.

[*Vide* Answer to Starred Question No. 2227 asked by Sri V. K. Kothandaraman at the meeting of the Legislative Assembly held on 11th December 1961 page 381 supra.]

*Statement showing periods during which the Inspector-General of Prisons was on tour.*

| *Districts.* | Number of days on tour during the month of | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | *February* 1961. | *March* 1961. | *April* 1961. | *May* 1961. | *June* 1961. | *July* 1961. | *August* 1961. | *September* 1961. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) |
| Tiruchirappalli | 6 | 3 | 3 | .. | 4 | 5 | 1 | 3 |
| South Arcot .. | 3 | 2 | 2 | 1 | 4 | 5 | 2 | 1 |
| Salem .. .. | 3 | 6 | 3 | 3 | .. | .. | 5 | 4 |
| Coimbatore .. | 2 | 2 | .. | 6 | .. | .. | 4 | 2 |
| North Arcot .. | .. | 2 | .. | .. | 2 | .. | 2 | 2 |
| Madurai .. | .. | 3 | .. | .. | 2 | .. | 1 | 4 |
| Tirunelveli .. | .. | 2 | .. | .. | 3 | .. | .. | .. |
| Thanjavur .. | .. | .. | 2 | .. | .. | .. | .. | .. |
| Chingleput .. | .. | .. | .. | 2 | 1 | 5 | 2 | 2 |
| Nilgiris .. | .. | .. | .. | .. | .. | .. | .. | 3 |
| | 14 | 20 | 10 | 12 | 16 | 15 | 17 | 21 |

2. The present Inspector-General of Prisons assumed charge of his post on 23rd January 1961.






## APPENDIX II

[Vide Answer to Starred question No. 2240-F, asked by Sri T. S. Ramaswamy at the meeting of the Legislative Assembly held on 11th December 1961 page .96 supra]

*Regarding the particulars of number of applications received for admission to the first year of the Five-year Integrated Course in Engineering during the current year 1961–62 and number of candidates selected in each district under Forward, Backward and Scheduled Castes and Scheduled Tribes communities.*

| Serial number and name of the district. | Forward. | | Backward. | | Scheduled Castes and Scheduled Tribes. | |
|---|---|---|---|---|---|---|
| | Number of eligible applications received. | Number of candidates selected. | Number of eligible applications received. | Number of candidates selected. | Number of eligible applications received. | Number of candidates selected. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| 1 Madras .. .. .. | 284 | 32 | 41 | 19 | 6 | 6 |
| 2 Chingleput .. .. | 86 | 22 | 35 | 21 | 2 | 2 |
| 3 North Arcot .. .. | 94 | 27 | 63 | 36 | 15 | 12 |
| 4 South Arcot .. .. | 76 | 30 | 38 | 31 | 7 | 5 |
| 5 Tiruchirappalli .. | 126 | 33 | 49 | 31 | 10 | 9 |
| 6 Thanjavur .. .. | 145 | 26 | 79 | 41 | 1 | 1 |
| 7 Salem .. .. .. | 83 | 27 | 74 | 49 | 6 | 6 |
| 8 Coimbatore .. .. | 202 | 37 | 97 | 36 | 5 | 4 |
| 9 Nilgiris .. .. | 10 | 3 | 12 | 5 | 2 | 2 |
| 10 Madurai .. .. | 112 | 24 | 99 | 41 | 6 | 5 |
| 11 Ramanathapuram .. | 85 | 16 | 106 | 33 | 12 | 9 |
| 12 Tirunelveli .. | 139 | 27 | 85 | 29 | 11 | 9 |
| 13 Kanyakumari .. .. | 51 | 10 | 26 | 10 | 2 | 1 |
| 14 Refugees from Pakistan | 10 | 2 | .. | .. | .. | .. |
| Total .. | 1,494 | 316 | 804 | 382 | 85 | 71 |

| | |
|---|---|
| Total number of eligible and ineligible applications received from candidates in all the 13 districts. | 2,845 |
| Applications received from refugees .. .. .. .. | 17 |
| Applications received from candidates belonging to other States and rejected. | 76 |
| Total .. | 2,933 |
| Total number of ineligible applications rejected including 7 applications from refugees. | 555 |
| Total number of eligible applications including the applications from refugees. | 2,3·3 |